# சித்திராங்கதை விலாசம்

பரசுராம கவிராயர்.

1874



உ

சிவமயம்.

# சித்திராங்கதைவிலாசம்

இஃது

பரதநாட்டியமுதலியசங்கீதசாஹித்ய

வித்வாம்ஸராகிய

குன்னடையார்தண்டலம்-ம-ா-ா-ஸ்ரீ.

**பரசுராமக்கவிராயரவர்கள்**

**இயற்றியதை.**

திருவண்ணாமலை.

**அருணாசலையரால்**

பார்வையிடப்பட்டு.

ஷை கவிராயரவர்களுத்திரவின்படி.

பெரியகாஞ்சீபுரம்.

**வேதகிரிமுதலியாரவர்கள்**

கருத்துக்கிணங்க.

தஞ்சாவூர்.

**க. வீ. ஸுப்பயசெட்டியாரவர்களால்**

☞ - ஜதிகமானபடங்களுடன்

கொன்னூர்.

**மாணிக்கமுதலியா**

ரவர்களது

மனோன்மணிவிலாசவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப் பட்டது.

பவ௵—வைகாசி௴ ௨௨.

உ

சிவமயம்.

மதுரைமீனாட்சியம்மன்றுணை.

# சித்திராங்கதைவிலாசம்.

விநாயகர் துதி.

காப்பு - வெண்பா.

சீரார்மதுரையில்வாழ் சித்திராங்கதையெனும்பெண் ... *
பாராருஞ்சீரதனைப் பாடவே - காரார் ... ... ... *
தந்திமுகத்தெந்தைமலர்த் தாமரைபொற்றாளிணையை ... *
அந்திபகலுந் துதி செய்வாம் ... ... ... *

இதுவுமது - விருத்தம்.

பாண்டியன்றனக்குப்பின்பு பட்டமுந்தரித்துச்செங்கோல் ... *
வேண்டியிவ்வுலகையாரு மெய்விசயவிஜயன்வந்து ... *
தீண்டியேமாலையிட்ட சித்ராங்கதைவிலாசம்பாட .. *
ஆண்டருள்விநாயகன்சேவடியிணைப்போற்றிசெய்வாம் *

முருகர்துதி-விருத்தம்.

திசையிருநான்குமற்றத் தேவர்களிடுக்கந்தீர ... *
இசைபெறுமுலகமூன்று மிந்திரனைப்பொல்லா ... *
வசையுறுமசுரர்வாழ்வு மலைகளுமொடுங்கச்சற்றே ... *
அசையும்வேன்முருகன்றிவ்ய வடியிணைபோற்றிபோற்றி *

பரமசிவவணக்கம் - விருத்தம்.

நறைமிடலவிழுங்கொன்றை நாகவெண்டலையெருக்கு ... *
பிறையொடுதும்பைகங்கைப் பெருகுசெஞ்சடையாய்போற்றி *
மறைமுடிவினிற்கூத்தாடு மாதுமைபாகாபோற்றி ... *
கறைமிடற்றண்ணலேநின் கழலிணைபோற்றிபோற்றி ... *

### உமையவள்வணக்கம்-விருத்தம்

அமையுமிவ்வுலகையெல்லா மளித்திடுமவளேபோற்றி ... *
இமயமால்வரையயின்ற வெங்களீஸ்வரியேபோற்றி *
சமயமாதிஞனீக்காத சத்திசாம்பவியேபோற்றி ... *
உமையவளெனும்பேர்கொண்ட வுத்தமிபோற்றிபோற்றி *

### திருமால்வணக்கம் - விருத்தம்.

ஞாலமேனுலகளந்த நளினபொற்பாதம்போற்றி ... *
நீலமேகம்போலெங்கு நிறைமணிவண்ணாபோற்றி ... *
ஓலமிட்டழைக்குஞான வும்பருக்குதவுமாதி ... ... *
மூலமேபோற்றியுன்றன் முளரிபொற்பாதம்போற்றி ... *

### காளிவணக்கம் விருத்தம்,

காளியேபோற்றிதுட்ட மகிடசம்மாரிபோற்றி ... *
யாளியூர்பவளேபோற்றி யாரெனுநடனமாடுந் *
தாளியேபோற்றிச்சொன்மா தங்கியேபோற்றிபத்ர *
காளியேபோற்றியுன்றன்கமலபொற்பாதம்போற்றி *

### சரஸ்வதிவணக்கம்-விருத்தம்.

சிரதாம்பிரமனாவித் சென்றுவாழ்பவளேபோற்றி ... *
பாரதாதிபுராணங்கள் படித்தருள்பவளேபோற்றி ... *
போதாமூலகமெல்லாம் பெற்றமாதாவேபோற்றி ... *
சாரதாம்பாளேயெங்கள் சரஸ்வதிதாயேபோற்றி ... *

### அவையடக்கம் - ஆசிரியவிருத்தம்.

மன்னவனும்பாண்டியன்றன் மகளாய்வந்து ... *
மணம்வேண்டாமென்றவள்தென் மதுரையாள *
பொன்னவரத்தினமிலழுத்த முடிதரித்த *
பூவைசித்திராங்கதைசரிதைப் புவியின்மேலோர் *
சொன்னவடநான்மொழியைப் புலவர்பாதத் ... *
துகலதிலுஞ்சிறியேன் செந்தமிழ்விலாசம் ... *
இன்னவகையெனவறிந்து மதியாச்சொன்ன ... *
ஏழையென்மேற்பிழைபொறுப்பீ ரிகத்துளோரே *

### விநாயகர்வருகிற - பொதுவிருத்தம்;

சராசரபுவனமியாவுந் தந்தளித்தழித்துண்டாக்கும் - *
பராபரப்பொருளேசெல்வப் பாலன்வேலவற்குமூத்தோன் *
மராமரந்துளைத்தசெங்கண் மால்திருமருகனென்ன - *
சுராசுரர்முநிவோரியாருந் துதிகளைவதிவந்தாரே : *

வசனம்.

உலகமெல்லாந் துதிக்கும்படியான சாம்பசிவனருள் செல்வவிநாயகர் முதலில்வருகிற விதங்காண்க

விநாயகர்வருகிற தரு-இம் தோடி. தாளம்-மட்டியம்.

பல்லவி,

விநாயகர்வந்தா-ரிதோ-செல்வவிநாயகர்வந்தார் *

அநுபல்லவி,

வில்வமணிந்த - மேநியெங்கும் - - *
விகடமதாசொக்கேசர்வாசல்தங்கும் - (செல்வ)

சரணங்கள்.

அங்கையற்கண்ணியாமங்கையுமைபாலட்
 காணையின்போகவி - தீர்த்தோன் - சொல்லும்
ஆகமமெய்ப்பொருளாகவிளங்குமோ
 ராறுமுகவற்கு - மூத்தோன் - சிவ
கங்கைபுருஷ்மகன் வெங்கயமாமுகன்
 காசினிமுழுதும் - காத்தோன் - மலர்க்
கண்ணன்மருகன் மூக்கண்ணனடியவர்
 கன்மமுன்னின்முடிய - கூத்தோன் - திவ்ய
மங்களஞ்சேரொளிபெண்கள் - சிரோமணி
மாதுவல்லபைசமேதனத் - - கிங்கிணி
தங்கச்சதங்கையிலங்குந் - - தண்டையணி
தாளிணையாவருந்தாளும் - - வத்தாபணி (செல்)

உம்பர்துதிக்குமோர் கொம்பன்னடியவ
 ருள்ளொளியாலய - வாசன் - வரும்
ஊழ்வினையாமதவேழங்களைக்கடிந்
 தோட்டிமைந்துச - - பாசன் - மக
கும்பகெம்பீரேனாம்பனெனும்பெயர்
 கொண்டசூரியப்பிர - காசன் - இன்னம்
கூறங்கஜமுகதுரோகிபடாரர்
 குலத்தைவெலிறுக - நேசன் - நந்தி
தம்பனெனுந்திரியம்பக - - - சங்கரன்
நாதமருள்கவைநாயக - - - - கிங்கரன்
அம்பிகைபுத்திரக்கம்பவி - - - - சித்திரன்
அகடனுகிரக விகட - - - - சத்ரு (செல்)

[கட்டியக்காரன்வருகிற-பொது-விருத்தம்.

கட்டியையிறுக்கிவெள்ளித் தடியுங்கைப்பிடித்துப்போர்க்குக் -*
கிட்டியேயெழும்பிமேலே யெம்பியேபாயந்திங்கக் - - *
குட்டியைப்போலபாண்டியன் கொலுவலங்காரஞ்செய்யக் -*
கட்டியக்காரன்வந்து களரியிற்றோன்றினனே - - *

வசனம்.

கட்டிய

அகோதெப்படியென்றால் இராஜாதிராஜனைடுகி ... ஜன் கொலுவலங்காரஞ்செய்யுங் கட்டியக்காரன் ... ளங்கா

கட்டியக்காரன்வருகிற தரு. [ண்க

இராகம் சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

வாசக்கட்டியக்காரன்வந்தான் ராஜ வாசற்கட்டியக்காரன்வந்தான்.

அநுபல்லவி.

ராஜராஜன்பாண்டிய-மஹாராஜராஜன் கொலு - (வாசற்கட்)

சரணங்கள்.

கேசரிபோற்கெர்ச்சித்து - ஆனையையெச்சரித்து
களப்பிலகுலாய்க்குதித்து - - - - - சேர்
கெண்டையைப்போற்பாய்ந்து-சண்டைக்கையாரய்ந்து
கிடுகிடெனவே - - - - - - காய்ந்து
வாசலில்நின்றூக்கி - - - மீசைமுனைமுறுக்கி
வாருவல்லயமிருக்கி - - - - - - நல்ல
வரிசைச்சல்லடத்தட்டி - - சரிகைப்பாகையுங்கட்டி
மண்டலீசுரையதட்டி - - - - - எங்கும்
பூசம்வெண்ணீறுநெற்றிப்-பொட்டுமிட்டெங்குமெற்றி
லீசங்கையினிற்கத்தி - - -வெள்ளித்தடியும்பற்றி
விண்டலமெனகொலு - மண்டலமலங்கிருத
அண்டருமனகக்கண் - - டிசயிக்கப்பின்
வெகுபராக்குயெச்சரிக்கையென - பாண்டிய - *
மகாராஜன்கொலுவலங்காரஞ்செய்யவேண்டிய (வாசச்)

கட்டியக்காரன் - கட்டியங்கூறல்.

பேரிகைமுழக்கபலமேளதாளத்துடன்பெண்கள்நடனங்களாட *
பேசமறைமுனிவோர்களாசிகூறச் சிலபேர்சோபனங்கள்பாட *

## இராஜன்-கடவுளைப்போற்றிய-விருத்தம்.

ஸ்ரீமூலம்போற்றி அருமறையவர்கள்போற்றி ... *
ஸ்ரீமாலயனுங்காணா ஆனடிகளையென்றும் ... *
ஊழியஞ்செய்யுமன்பர் உருபயிர்குடிகள்போற்றி *
ஊழியவிளையாடற்கும் உமையொருபாகாபோற்றி *

## கட்டியக்காரன்-இராஜனுக்குப்போற்றி கவி.

சட்டமுடனவர்த்தினையிட்ட சிம்மாசனத் தலைவனே எச்சரிக்கை *
தரணியீரேழுமோர்குடைநிழலிலாளுந் தயாபரா எச்சரிக்கை
திட்டமுடனேழிசைமுழவா பட்டணந்தனில்வாழும்தீரனே எச்சரி
க்கை, திக்கெல்லா விரமேனிகளாகுரங்கள்மிகு தேவனே எச்சரிக்
கை, மட்டலருமலர்மாலையணியும்புயாசலமன்னனே எச்சரிக்கை *
மாதுமீனாட்சியிருபாதமலர் துதிசெயுமதிபனே எச்சரிக்கை *
பட்டவர்த்தனர்கள்கைகட்டியெதிர்நின்று பணியாதனே எச்சரிக்
கை, படைமன்னர்ஒருகோடி புடைசூழவேவரும்பாண்டியாவெ
(ருபாக்கு

## முதல்மந்திரி-இராஜனுக்குச்சொல்-மட்டுவிருத்தம்.

ஜெயசீலராசரேபோற்றி ... ... *
நீதிவழுவாநிருபாபோற்றி ... ... *
ஆதரித்தெனையாள் அமுதேபோற்றி ... *
சோதிசேர்பாண்டியனரசேபோற்றி ... *

## இரண்டாமந்திரி-இராசனுக்குப் போற்றி-விருத்தம்

பொதியமலைவளரொருபால் பொற்புனைத்தடமொருபால் *
  பொங்கும்வைகை ... ... ... *
தழைபொருபாலந்திருவினைத்தவனங்களுமொருபால் *
  தவிர்சொக்கேசர் ... ... *
வதியுமொருதலமொருபால்வாழ்மாடக்கூடமுன்னும் ... *
  மதுரையென்றும் ... ... ... ... *
பதியிலிருந்தரசாளும்பாண்டியனே நின்கமலப் ... *
  பாதம்போற்றி ... ... ... *

## இராஜன் தேசவிசாரணையும்-மந்திரிவிடையும்.

சீர்பரவுமிவ்வுலகின்மாதமும்மாரியும் ... *
  தேசமெங்கும்பெய்யுதா ... ... *

தெண்டனிட்டுனசெய்வேன் தொண்டன்மும்மாரியோர்
  திங்களிற்பெய்யுதையா ... ... *

ஜெகதலந்தனின்மன்னர்மண்டலிகர்கப்பஞ் ... ※
செலுத்திவருகின்றார்களா ... ... ... ※

செல்லாமற்காசளவுபாக்கியில்லாமற் ... ... ※
செலுத்துகின்றார்களோயா... ... ... ※

ஏர்பாரவுழுதுலகிலுழுதுபயிர்செய்குடிக ※
ளெல்லாருமிகசுகமமா... ... ... ※

ஏகசக்ரேஸ்வரர்பயிர்செயுங்குடிகளுக் ... ※
கிடரொன்றுமில்லையையா ... ... ※

இன்பமிகுசெம்பொன்றானங்கண்முதலாயன்ன ... ※
மிட்டுண்டிருக்கிறாரா ... ※

இயலாகமுப்பத்திரண்டெருமங்களும்... ... ※
ஈய்ந்துவருகின்றார்களே ... ※

பார்பரவுதேவாலயங்கள்பிர்ம்மாலயப் ... ... ※
படித்துரங்கள்நடக்குதா ... ... ※

பகர்பிர்ம்மோச்சவமுதல்நித்யோச்சவம்பஞ்ச ... ※
பருவமும்நடக்குதையா ... ... ※

பட்டவர்த்தனர்மகுடவர்த்தனர்களுமெனைப் ※
பணிந்துவருகின்றார்களா ... ... ※

பகவனென்றுன்னைத்துதிசெய்துமனமொருமிக்க ... ※
பக்கத்திற்கின்றார்களே ... ... ※

நீர்பரவுமோர்துறையில்கோவும்புலியுஞ்சென்று... ※
நீரைக்குடித்துவருதா ... ... ※

நேயமாக்கிளைகளின்படியதுகள்தப்பாது ... ※
...நிலைநீர்குடிக்குதையா ... ... ... ※

நிலைமையாய்ப்பிராமணருள் ஆசாரித்தியதப ※
நெறியினிற்கின்றார்களா... ... ... ※

நியமமதுதப்பாதுஸ்நானஜெபதபமதில் ... ※
நிற்கிறார்மகாராஜனே ... ... ... ※

இராஜன்-மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்.

மதிமந்திரிமாரேகேளீர் வளமிகுமதுரையென்னும் ... ※
பதியரசாளவென்பின் பட்டத்துக்காளில்லாமல் ... ※
சதையிருந்தென்னசெங்கோல் துரைத்தனஞ்செய்யலாமா ※
விதியிதுதெனக்குநன்றாய் விளம்புவீர்விளம்புவீரே ... ※

வசனம்.

கேளுங்கள் மதியில்மிகுந்த மந்திரிகளே இந்தமதுரைப்பட்
டணம் இளவரசாளும்படியாய் பிள்ளையில்லாமல் பெண்பிறந்தி
ருக்குதே யெனக்குப்பின்பு பெண் அரசாட்சிசெய்வது இந்தபூ
லோகத்திலுண்டா அதற்கென்னசெய்யலாம் முன்னோர்வேதசாஸ்
திரங்களில் மொழிந்திருப்பார்களே இதையறிந்து ஆலோசனை
சொல்லுங்கள் மந்திரிகளே.

முதல்மந்திரிசொல் விருத்தம்.

வெண்ணெயிருக்கநெய்தான்வேண்டியதென்ன அந்தப் *
பெண்ணையோர்மன்னர்க்கீந்துப்பிள்ளையைச்சிராம்பெற்று
மன்னரசாட்சிசெய்ய மணிமுடிதரிக்கலாமென் ... *
றெண்ணியேவேதசாஸ்திரம் எடுத்துரைக்கின்றதையா *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரா வெண்ணெயை வைத்துக்கொ
ண்டு நெய்க்கழவேண்டியதென்ன பட்டத்துக்குப் பிள்ளையில்லா
மல் பெண்பிறந்திருந்தால் அந்தப்பெண்ணை ஒருஇராஜகுமாரனு
க்கு விவாகம்பண்ணிவைத்து அவள்வயிற்றிற்பிறந்தபிள்ளையைப்பு
த்திரசிகாரம்பெற்று இளவரசுபட்டங் கட்டலாமென்று அனேக
வேதசாஸ்திரங்களில் முறையிட்டிருக்குது ஆகையால் அப்படிக்கேசெ
ய்வது சர்வோத்தமம் சுவாமி,

இரண்டாமந்திரிசொல்-விருத்தம்.

சர்க்கரைப்பானைக்கீக்கள் தான்தேடவேண்டியதென்ன - *
அக்கரையாகமன்னர் அனந்தம்பேர்மதுரைவரும் - *
சொக்கரைக்காணவந்துன் சுதையைவேண்டுவர்கள் அதிட *
இக்கணாமொடிக்குள்தாமே ஜெயித்தரசாளலாமே - *

வசனம்.

கேளும்இராஜபரமேஸ்வரா சர்க்கரைப்பானைக்கு ஈக்களைப்
பிடித்துவிடவேண்டுமாவேண்டியதில்லை அதுகள்தனக்குத்தானே
வந்து மொய்த்துக்கொள்வதுபோல மதுராசொக்கநாத சுவாமி
யைத் தெரிசிக்கும்பொருட்டாய் அனந்த இராசாதிபதிகள்வந்து
நமது அம்மாளாகிய சித்திராங்கதையை விவாகம்பண்ணிக்கொள்
ளவருவார்கள் அவர்களில் ஒருவருக்கு விவாகம்பண்ணிவைத்து அ
வள்வயிற்றிற்பிறந்தபிள்ளையை புத்திரசிகாரம்பெற்று இளவரசுப
ட்டங்கட்டினால் அதிட்டமிக்கும்செயித்து அரசாளலாம்சுவாமி.

இராசன்மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்.

யோசனைசரிதான்சொன்ன தொன்றுக்கொன்றுயர்ந்தவார்த்தை *
வாசனைமலரொடுத்து மதுரைவாழ் சொக்கலிங்கம் ... *

சனையநீசயற்கன்னை துரைமையவனோ நாளும் ... *
பூசனைச்செய்துபெற்ற புத்திரியையழைத்துவாரீர் ... *

வசனம்.

வாருங்கள்மந்திரிகளே மதிமந்திரிமார்களென்பது உங்களுக்கேதகும்; ஆ-ஆ-ஆ-நல்ல ஆலோசனையளித்து சொன்னீர்கள் இதுவேசரி இந்த மதுரா சொக்கநாதசுவாமி மீனாட்சியம்மன் இவர்களது கிருபாகடாட்சத்தினாலே நான்பெற்றபுத்திரியாகிய சௌந்தர சவுபாக்கியவதி சித்திராங்கதை இந்தஆலோசனைக்குச் சம்மதிக்கவேண்டுமே ஆகையால் அவளை அதிசீக்கிரமாய் இச்சபைக்கு அழைத்துவரும்படிசெய்யுங்கள் மந்திரிமார்களே,

மந்திரி-கட்டியனுக்குச்சொல்-விருத்தம்.

கையினிற்றடியைக்கொண்ட கட்டியக்காரகேளாய் ... *
ஐயன்பாண்டியன்றன்றன்செய் அருந்தவமதனால்வந்த *
தையல்சித்திராங்கதையைத் தந்தைதானழைத்தானென்று *
வையகம்புகழ்சபைக்கு மகிழுடனழைத்துவாராய் ... *

வசனம்.

வாராய் கையிற்றடியுடைய கட்டியக்காரா - பாண்டியமகாராஜன் அழைத்துவரச்சொன்னாரென்று சித்திராங்கதை யம்மாளை அதிசீக்கிரமாய் இச்சபைக்கு அழைத்துவாரும்பிள்ளாய் (அப்படியே அழைத்துவருகிறேன்சுவாமி.)

கட்டியக்காரன் சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

உருவளரங்கயற்கண் ணுடையவளருளினாலே ... *
மருவளர்கமலமேவும் மாதெனவுனையளித்த ... *
தருவளர்மதுரையாளுநர் தந்தைபோலவைக்கிப்போது *
திருவுளமகிழ்ந்தெழுந்து சித்திராங்கதையேவாராய் ... *

கட்டியக்காரன்சொல்-வசனம்.

கேளுங்சித்திராங்கதைத்தாயே உன்னையுங்கள்தகப்பனார் சபைக்கழைத்துக்கொண்டுவரச்சொன்னார் அதிசீக்கிரமாய்வாருமம்மா.

சித்திராங்கதை கட்டியக்காரனுக்குச்சொல்-மட்டுவிருத்தம்.

தந்தைசொல்லுக்குத்தாட்சிபொன்றுண்டோ *
விந்தையாயிப்போ விரைந்துமேபோவோம் *

வசனம்

கேளும்கட்டியக்காரா எனதுபிதாவழைத்தாரென்றால்பேச த்திற்கும் வாய்வருமா ஆகையால் இடனேபோவோங்கட்டியக்காரா

### சித்திராங்கதை-சபைக்குவருகிற-பொது-விருத்தம்.

வலம்புரிதவழுஞ்செந்நெல் வயல்கள்சூழ்மதுரையென்னும்
தலம்பயில்சொக்கநாதர் தாளிணைபணிந்தென்றென்றும் *
நலந்தருமங்கையற்கண் ணம்பிகைபாதம்போற்றி *
சிலம்பொலிகலகலென்னச் சித்திராங்கதைவந்தாளே *

### கட்டியக்காரன்சொல்-வசனம்.

அகோதெப்படியென்றால் இராஜராஜேஸ்வரனாகிய பாண்டியமகாராஜன் புத்திரியாகிய சித்திராங்கதையம்மன்கொலுவுக்கு வருகிறவிதங்காண்க.

### சித்திராங்கதைவருகிற தரு-இ-ம் பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மாரனிரதியெங்கி-தாரணியெழில்தாங்கி
மாதுசித்திராங்கதைவந்தாள்- வடிவழகி - மாதுசித்திராங்கதைவந் [தாள்

அநுபல்லவி.

பாரினிலிவட்கிணையாரென அர ... சாட்சி
பண்ணப்பாண்டியனொரு பெண்ணைவேண்டிமீனாட்சி
சிரினிலுயர்பாதாம்போருகமலர் ... காட்சி
தினமுங்கண்டுதரிசிக்க ... உமையவள்தந்த
வனமிதென்னவடி ... வழகதனில்மிகுந்த (மார)

சரணங்கள்.

கொண்டலளகபாரம்-கண்டலரிக்கஸீரை
குலவபந்தனித் ... ... துளிக்க இளங்
குழவிவெண்டிங்களுத-லெழில்கண்டுதனிமுதல்
கொன்றைவேணியி ... லொளிக்க - சேந்
கெண்டைகளிருவிழிக்- கஞ்சடையிலனுகாமல்
கேணிநீரினிற் ... ... குளிக்க - நல்ல
கிளர்பூரணச்சந்திரன்- ... ஒளிமுகங்கண்டஸ்த
கிரியிற்சென்றுதத் ... தளிக்க - இந்த
மண்டலத்திற்செவ்வாம்பல்மலர்வாய்மொழிக்குப் பஞ்ச
வர்ணக்குயில்களுந்தே மாங்குயில்களுங் கொஞ்சத்
தண்டரளமணிக்குந் தந்தங்களெழின் .. மிஞ்ச
தடமலைகளுந்தங்கக் குடமுலைகளுக் ... கஞ்ச
தாமலர்மலர்செங் ... கையும் - மாந்
தளிரொளவொளிர் ... மெய்யும் - வல்லி
சாதக்கொடியினு ... தையும் - இடை
தனில்மின்னலுந்தாழ ... செய்யும்-அல்குல்

சற்பப்படத்தையும் ... பழிக்கும் - மணித்துடை
பொற்பின்வாழையிற் ... செழிக்கும் - கணைக்கால்
கெற்பவிரால்களை ... நகைக்கும் - மெல்லடைச்
சொர்ப்பிலையனமென ... சொற்பதத்தனிலணி
தண்டைசதங்கை ... கலீலெனமனமகிழ்
கொண்டுவந்தவள்தனைக் ... கண்டுசந்தாந்திகழ்
தந்தைசொற்றவராமல் - சிந்தையில்மகிழ்ந்து கொண்டு
வந்தவள்தன்னைக்கண்டு ... பந்துவராளியிண்டு (மார)

சித்திராங்கதை - தந்தையைப்போற்றுகிற - பத்தியம்.

இ-ம்-புன்னுகவராளி.

ஐயனேயெழின்மேவுமெய்யனேயென்னையருள்
அப்பனேயுன்றனிணையடிகள்போற்றி
அரசனேமணிமகுடசிரசனேபரமசிவன்
அன்பனேயுன்றனிணையடிகள்போற்றி
அத்தனேதேசபரி சுத்தனேயெனையாளும்
அன்னையேயுன்றனிணையடிகள்போற்றி
ஆதியேபுகழ்மனுநீதியேவழிவார்த்த
அம்புஜநிகர்த்தவுன் அடிகள்போற்றி
சிந்தைமகிழ்வாய்ப்பரம சிவன்பதத்தொழு
சந்ததமுந் துதிசெய்தென்றனையளித்த
எந்தையேபோற்றியிணையடிகள்போற்றி
தந்தையேநின்கமல சரணம்போற்றி

இராஜன்-குமாரத்திக்குச்சொல் - விருத்தம்.

மந்திரமுனிவர்போற்றும் மதுராவாழ்சொக்கநாதர் ... *
சுந்தரியெனுமீனாட்சி சுகத்துடங்கயப்பதத்தை ... *
ஐந்தருமலர்களாலே யருச்சனைசெய்துநாளும் ... *
செந்திருவெனவுதித்த சித்திராங்கதையேவாழி ... *

வசனம்.

வாழிவாழி சித்திராங்கதைத்தாயே எழுந்திருமம்மா.

சித்திராங்கதை தந்தைக்குச்சொல் - கொச்சகம்.

மதிநதியும்புனைசடையர் மதுராசொக்கநாதனையும் ... *
கதிதருமீனாட்சியையுங் கருதிநெடுங்காலமதாய் ... *
துதிசெய்தென்றனையளித்த துரைகள்சிரோமணியே ... *
அதிசயமேதென்னையழைத்த தியவுரைசெப்பீரே ... *

வசனம்.

சந்திரனையுங்கங்கையையுந்தரித்தசடாபாரத்தோடுங்கூடியமது
ராசொக்கநாதசுவாமியையும் மீனாட்சியம்மனையும் நெடுங்காலம்

நினைத்து அரியதவஞ்செய்து என்னையளித்தஐயனே அடியாளை
இச்சபைக்கு அழைத்ததென்ன அருளிச்செய்யும் என்றந்தையே,

இராஜன் சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

திருமகள்நிகராய்வந்த சித்திராங்கதையேயுன்னை ... *
மருமணஞ்செய்வித்துன்றன் மைந்தனைச்சிகாரம்பெற்று *
திருமசாஸ்த்திரப்படிக்குத் தங்கமாமகுடஞ்சூட்ட ... *
ஒருமையாய்மனதில்நல்ல யோசனைசெய்தேனம்மா ... *

வசனம்.

திவ்வியமங்களமாணிக்க மகாலட்சுமிக்கு நிகராய்வந் தவதரி
த்த சித்திராங்கதைஅம்மணி உன்னையொருஇராஜகுமாரனுக்கு வி
வாகம்பண்ணிவைத்து உன்வயிற்றிற்பிறந்தபிள்ளையை நான்புத்தி
ரசிகாரம்பெற்று இளவரசுபட்டங்கட்ட எண்ணங்கொண் டிருக்கி
றேன் அம்மணி,

சித்திராங்கதை-தந்தைக்குச்சொல்-விருத்தம்.

சிவசிவாசொக்கநாதா தெய்வமேகதியென்றெண்ணி ... *
பவனிவாரணஞ்செய்நல்ல பதிவிரதங்கள்பூண்டு ... *
தவனிலைதன்னில்யானும் சங்கராவென்றிருக்க ... *
அவனியிற்றந்தைசொன்ன அன்னீதிக்கென்னசெய்வேன் *

வசனம்.

சிவசிவா சொக்கநாதசுவாமி மீனாட்சித்தாயே தெய்வமேக
தியென்று பாபநிக்கிரகம் செய்யும் நல்லபதிவிரதத்தில் நானிரு
க்க என்றந்தையாகிய பாண்டியமகாராஜன்சொன்ன அன்னீதிக்கு
நான் என்ன செய்வேன்தெய்வமே.

சித்திராங்கதைசொல்-தரு-இ-ம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

தந்தைசொல்வார்த்தையைத்தள்ளி விந்தைவேறுரைக்குஞ்சள்ளி
நானவன்றானுகிலேனே சங்கரா - இந்தத்
தாரணியெங்கும்புகழும் - நீறணிக்கடவுளேஎன்
சத்தியம்பொய்த்துப்போகாதோ ... சங்கரா
என்றனையொருவர்க்கீய்ந்தென் - மைந்தனைசிகாரம்பெற்று
இளவரசினைச்செலுத்த ... ... சங்கரா - தந்தை
எண்ணின ஆலோசனைக்குபுண்ணிற்கோலிட்டாற்போலானேன்
எதிர்மொழியென்னசொல்லுவேன் சங்கரா
பதிவிரதங்கள்பூண்டு - மதுரையிளவரசு
பட்டமுந்தான்கட்டிடவல்லோ ... ... சங்கரா - இந்த

பாரெலாமொருகுடைக்கீழ்-ஆளலாமெனவிருந்தேனே
பாமனேதின்செயலோ ... ... சங்கரா

மதிபிசகோளன்றலை-விதிவசமோதந்தைசொல்
வார்த்தைக்குநானென்னசெய்வேன் சங்காபெற்ற

மாதாபிதாவுஞ்சொக்க நாதாநீயாயிருக்க
மருமனையென்றறுக்கேன் ... ... சங்கரா

நிமதியணிவேணி-பதிபதியாய்க்காணி
நானரசாளவெனும் ... ... சங்கரா

ஞானந்தலிதுயரும்-ஆனந்தமடையாவி
நாசமருளச்செய்வாய் ... ... சங்கரா

சித்திராங்கதை-தந்தைக்குச்சொல்-விருத்தம்.

அப்பனேயென்னையீன்றஐயனேபொய்வாழ்வென்னும் *
இப்பிறப்பிறப்பொழிக்கசன்பொற்பாதந்தேடிக் .. *
கற்பெனும்விரதம்பூண்டேன்காமக்குரோதத்தையென்றன்
சொற்பனத்தனினுமற்றதச்சகத்தைநான்நினைக்கமாட்டேன் *

வசனம்.

கேளும் என்தந்தையே பூலோகமாயைகையென்னும்பொய் வாழ்வுக்குட்பட்டு இப்பிறப்பையொழித்து பேரின்பத்துக்குரிய பரமசிவன் பாதாரவிந்தத்தைச்சேர பதிவிரதமென்னும் தவநிலை யைக்கைக்கொண்டிருப்பதாலே அல்லாமல்-காமம்-குரோதம் லோபம்-மோகம்-மதம்-மாச்சரியமென்று சொல்லப்பட்ட சிற்றின்பசகத்துக்குட்பட்டு ஒருவருக்கும் மணமாலையிடமாட்டேன் என்றந்தையே.

இராசன்கடவுளைநினைத்துசொல்-விருத்தம்.

அரகராசொக்கநாதா ஆட்சிமீனாட்சித்தாயே ... *
பெருமைசேருலகையாளப் பிள்ளையீந்திடாமல் ... *
மருமணம்வேண்டாமென்னும்மகளையென்றனுக்களிக்கத் *
திருவுளந்தனிலிசைந்தச் செயலிதானறிகிலேனே ... *

வசனம்.

அரகரா சொக்கநாதஸ்வாமி மீனாட்சித்தாயே இந்தமதுரை ப்பட்டணம் இளவரசாளும்படியாய் ஆண்பிள்ளைவேண்டியதற்கு ஒருபெண்பிள்ளையை அருளிச்செய்தீர்களே திருவுளச்செயலிப் படியிருந்தால் நானென்னசெய்வேன் தெய்வமே.

இராவும்-பாண்டியன் கடவுளைநினைத்து-விசனப்படுகிறது-தரு-

இ-ம்-புன்னாகவராளி-அட-தாளம்

கண்ணிகள்.

வெங்கயமுகனையருள் ... கங்கையொடுதிங்களணி
வேணியே-சூல ... ... பாணியே-வடி.

வேல்முருகனையுதவும் ... சேல்விழியுமைமருவும்
மெய்யனே-என்று ... ... ஐயனே

பங்கயனுமாலுமுல ... கெங்குந்தேடரியமலர்ப்
பாதனே-சொக்க ... ... நாதனே-ஒரு

பாலனில்லாப்பாக்கியமின்மையெனக்கிலச்சயமென்றான்
பட்டமும்-செங்கோல் ... ... இட்டமும்

நிகரில்லாஎழின்மதுரை ... நகரில்பொன்முடிதரித்து
நிலத்திலே-சந்திர ... ... குலத்திலே

நீதிவழுவாமலிந்த ... மேதினியாள்வதென்னுடன்
நின்றதே-காலம் ... ... சென்றதே

பகருமென்வார்த்தையைக்கேளாய் மகவைப்பெற்றும்
பிள்ளையில்லாப்-பாவிநான்-படி ... பாவிநான்-இந்தப்

பாரினிலெனக்குப்பின்னிந் ... தாரணிராச்சியபாரம்
பண்ணுவார் பின்னை ... ... யெண்ணுவார்

சித்திராங்கதைக்குமனது செப்பவும்அனேகவார்த்தை
செப்பினேன்யிருந்த ... தப்பினால்-அவள்

சிவனிருபாதத்தைக்காணும் - தவநெறியைக்கண்டுமனத்
தேறினாள்-வார்த்தை ... ... கூறினாள்

மகள்வயிற்றினிற்பிறந்த ... மைந்தனைப்புத்திரசிகாரம்
வாங்கவே-செங்கோல் ... தாங்கவே-இந்த

மன்னிளவரசுசெய்ய எண்ணினைஎன்னமும்பொய்யாய்
வாக்கதே-தப்பிப் ... ... போக்கதே

இகபரந்தனிலுமின்பம் சுகந்தருங்கலிமையக்கண்ட
மெய்ப்படிமுன்னோர் ... சொற்படிசெய்யால்

என்றுந்தன்னிருவிழிக்குப் பிள்ளையில்லாப்பாவியானேன்
ஈஸ்வரா-ஜெக ... ... தீஸ்வரா

பாலனற்றப்பாவியென்று ... பாரிலென்னைப்பேசலாம்
பதைத்துதோ-மனது ... சலித்துதோ-வீட

பன்னகாபரணனே நான் ... புன்னாகவராளிராகம்
பாடினேன்-மெத்த ... வாடினேன்

இராஜன் சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்,

கதிதரும்சொக்கநாதர்சரணப்பூவிணையைக்காண ... *
பதிவிரதங்கள்பூண்ட பாவைசித்திராங்கித்தாயே ... *
நிதிபெறுநமது செங்கோல் துரைத்தனமழிந்துதானால்
மதிபெறுமுன்னையாரும் மன்னர்கள்நகைத்திடாரோ

வசனம்.

பேரின்பத்துக்குரியசொற்கபதவியைக்கொண்டிருக்கும்சொக்கநாதசுவாமி திருவடியைக்காணத் திவ்விய பதிவிரதங்கொண்டிருக்கும் சித்திராங்கதை அம்மணி இந்த மதுரைப்பட்டணம் அரசாளும்நமது செங்கோலும் துரைத்தனமும் அழிந்துபோச்சுதானால் நம்மைப் பூலோகத்திலிருக்கப்பட்ட இராசாதிபதிகள் நகைக்கமாட்டார்களா நானென்னசெய்வேன் அம்மணி

சித்திராங்கதை-தந்தைக்குச்சொல்-விருத்தம்.

நகைத்துமுப்புரமெரித்த நாதர்தன்னருளால்நம்மை ... *
பகைத்தசத்துருவைவென்று பாராசாள்வேனல்லால் [ச்
வதைத்திடுமுலகிலிற்பொய்வாழ்வைமெய்யெனச்சிற்றின்ப
சுகத்திற்குட்பட்டுமாலைச் சூட்டவுமாட்டேனையா ... *

வசனம்.

கேளும்என்றந்தையே நம்மைநகைக்கின்றவர்களும்பூலோகத்திலிருக்கின்றார்களா நானென்ற ஆணவங்கொண்ட முப்புராதிகளைச் சிரித்தெரித்த பரமசிவன்கிருபையிருக்க நம்மைப்பகைத்த சத்துராதிகளைச்செயித்து இளவரசுபட்டங்கட்டிக்கொண்டு இராச்சியபாரம்பண்ணுவனேயல்லாமல் பூலோக மாய்கையென்னும் பொய்வாழ்வுக்குரிய சிற்றின்பசுகத்திற்குட்பட்டு ஒருவருக்கும் மணமாலைசூட்டமாட்டேன் என்னுடைய தந்தையே,

சித்திராங்கதை தந்தையினருகில்வியசனப்படுகிற-தரு

இ-ம்-புன்னாகவராளி-அடதாளம்

[கண்ணிகள்,]

சிவசிவாநானிந்தமொழிக்கேட்கவோ - தந்தையே-பெண்
ணெனைப்பெத்துத்தெருவில்வந்தேனோ தந்தையே-இந்தப்
புவனத்தில்நானொருபுருஷனைத்தேடவே ... தந்தையே - நல்ல
பூமாலைசூட்டிப்புணரவுமாட்டேனே ... தந்தையே- காமக்
குரோதலோபமோகமதமாச்சரியமெனுந்தந்தையே,பொல்லாக்
கர்மவலையினிற்கட்டுப்பட்டுழலாமல் ... தந்தையே-சோம

சேகரனென்றசொல்சொக்கநாதசுவாமி ... தந்தையே-மலர்த்
தூளையடிகண்டவர்க்கிணையுண்டோசொல்லுமென் - தந்தையே
மாயஞ்சேருமுலகவாழ்வினைமெய்யென்று... தந்தையே - நல்ல
மருமணஞ்செய்வதில்வருகுணமேதையா தந்தையே - ஒரு
சேயைப்பெறுவதும்செல்வத்தைப்பெறுவதுந்தந்தையே-வருஞ்
செனனமரணமென்றதிவினைக்கிடமல்லோ தந்தையே - நல்ல
பதிவிரதங்கொண்டிப்பாவத்தைப்போக்கினால் தந்தையே - ஆதி
பரமசிவனுநல்லவரமெனக்குத்தருவார் ... தந்தையே - ஆதி
மதுரைமீனாட்சிபொற்பாதமலரைக்கண்டு ... தந்தையே - இந்த
மாநிலமுன்றன்பின்நானரசாளுவேன் ... தந்தையே - நீர
மன்னர்க்குப்பட்டமணிமுடிசூட்டுமென் - தந்தையே-செங்கோல்
கன்னிச்செலுத்தப்புன்றகலவாளிச்சொல்வேன்-தந்தையே

இராசன்-சித்திராங்கதைக்குச்சொல் விருத்தம்,

இளவரசாளுவேனென்றியம்புமென்மகளேநீதான் *
உளமகிழ்ந்தலகையாளுமீசனுக்கனித்தியம்பேறு
களங்கறுத்தவருக்காளாங்காலத்திலுனக்குப்பின்பு - *
வளமிகுமதுரையென்னும் மாநகராள்வதாரோ .. *

வசனம்,

கேளாய் சித்திராங்கதை அம்மணி நல்ல பதிவிரதத்திலிருந்து இந்தமதுரைப்பட்டணம் இளவரசாள்வேனென்று சொல்லுகிறாய் உனக்கு அனித்தியகாலஞ்சம்பவித்து கண்டங்கறுத்த பரமசிவன் ஆட்கொள்ளவருங்காலத்தில் இந்தமதுரைப்பட்டணம் அரசாள்வது ஆர் எனக்குத்தெரியச்சொல் அம்மணி.

சித்திராங்கதை தந்தைக்குச்சொல்விருத்தம்

பதிவிரதங்கள்கொண்டிப்பாரரசாளுநாளில் - *
நதிமதியணியுஞ்சொக்கநாதர்மீனாட்சியம்மன் ... *
கதிதரத்தென்றனையாட்கொள்ளுங்காலம்வந்துற்றபோது
மதிமந்திரிகுமாரர்கட்கு மணிமுடிசூட்டிவைப்பேன்

வசனம்,

கேளும் என்தந்தையே நான்கொண்டபதிவிரதா தபோபலத்தால் இந்தமதுரைப்பட்டணம் இளவரசாளும் எனக்கு அனித்தியத்தில் கங்கையும் மூன்றாம்பிறைச்சந்திரனையுந்தரித்தகடவுளாகிய சொக்கநாதசுவாமி மீனாட்சியம்மன்சமேதராய் எழுந்தருளிவந்து பாததரிசனந்தந்து என்னையாட்கொள்ளவரும்போது நம்முடைய மந்திரிகுமாரர்களுக்கு இந்த மதுரையைப் பட்டங்கட்டிவைப்பேன் என்தந்தையே,

இராசனுக்கும் சித்திராங்கதைக்கும்-சம்வாதம்-மூகாரி இ-ம்-அட [தாளம்

மந்திரிகளித்தமதுரையரசாள
மணிமுடிசூட்டுவே ... - னென்றாய்-ஈசன்
அணையடிகாட்டுவே - - னென்றாய்-சொல்லும்
தந்திரமிகுந்தமகேந்திரசாலவித்தைத்
தானெங்கேகற்றாய் - - என்மகளே

சித்திராங்கதை-இராசனுக்குச்சொல்-தரு-ஷ-ராகம்-தாளம்.

கற்றசித்திரஜாலவித்தையென்றீர்முடி
காணியையாளசூட் - - டேனே-கொன்றை
வேணிகளாகமாட் - - டேனே - என்னைப்
பெற்றதகப்பனுடன்கற்றவித்தைகளைநான்
பேசுதெவ்விதம் - தந்தையே

இராசன்-சொல்லல்;

பேசினதாலொன்றும்மோசமில்லையென்றன்
பெண்ணரசே - - நீயிப்போது-இந்த
மண்ணரசாளத் - - - தகாது புகழ்
காசினிதன்னிலேராசகுமாரனைக்
கல்யாணஞ்செய்துகொள் - - - மகளே

சித்திராங்கதை-சொல்லல்

கல்யாணமென்றுநீசொல்லவேண்டாம்வரும்
கணவனுக்குட்பட - - - மாட்டேன்-ஒரு
மணவனுக்கேமாலை - - சூட்டேன்-இந்த
எல்லையிற்பிறப்பென்னுமல்லலுற்றென்ஜென்மம்
ஈடேறவேணுமென் - தந்தையே

இராசன்-சொல்லல்

சென்மக்கேடறநற்சின்மயமாம்பொருள்
தேடவுமெய்ந்நெறிக் - - கண்டாய்-முடி
சூடவும்பொய்வெறி - - கொண்டாய்-இனி
உன்மனதின்படிபொன்முடிசூட்டிறேன்
உலகரசாள்வாயோ - - - - மகளே

சித்திராங்கதை-சொல்லல்

உலகரசாளநான்பலகலைக்கியானங்கள்
ஒதிக்கல்விக - - - ளித்தேன்-மது

நீதியெல்லாந் - - - தெரிந்தேன்-பதி
கொலைகளவுசெய்வோர்தலைகளைக்கொய்துசெங்
கோலுஞ்செலுத்துவன் - - - தந்தையே

இராசன் சொல்லல்,

செங்கோல்செலுத்துமுன்னே இக்கோர்மன்னவனுன்னைத்
தேடிவந்தாலென்ன - - செய்வம்-விதி
கூடிவந்தால்சொன்ன ... - தெய்வம்-ஒருவர்
பங்கோடன்றனுக்கென்னபொங்கோமுகாரிராகம்
பாடிப்படிவேண்டா - - - மகளே

சித்திராங்கதை-சொல்லல்.

என்பங்கில்மீருட்டிஅன்பிலிருக்கத்தாட்சி
எளிதமோசம் - - - வராது-வந்தால்
தூளிதமாகும் - - - சோறு - பேர்
இன்பங்கிடைக்கும்திரோகம் அன்பாய்முகாரிராகம்
இயம்புவன்கேளுமென் - -தந்தையே

இராசன்மந்திரிக்குச்சொல் விருத்தம்

காலமோர்மூன்றுமுள்ளங் கைநெல்லிக்கனிபோற்றேர்ந்து
ஞாலமாள்பவர்க்குரைக்கும் நல்லமைச்சர்களேகேளீர் ❋
சீலமாம்எனதுபெண்ணும் சித்திராங்கதைக்கிப்போது... ❋
கோலமாமகுடஞ்சூட்டக் குறிப்பறிந்துரைசெய்வீரே ❋

வசனம்,

வருங்காலம்-நிகழ்காலம் செல்காலம் என்னும்திரிகாலமும்உள்ளங்கை நெல்லிப்பழத்தைப்போலக் காண்பிக்கும்மந்திரிகளேவாருங்கள் எனதுபெண்ணாகிய சித்திராங்கதையைவிவாகம்பண்ணிக்கொள்ளச்சொல்லித்தனைச்சொன்னதும்கேளாமல் நம்முடைய இராச்சியம் நானே ஆள்வேனென்றுபிடிவாதமாய்ச்சொல்லுகிறாள் ஆகையால் காத்தருடைய செயல்இப்படிக்கிருந்தால்நாமென்னசெய்வோம்நீங்கள் ஒருயோசனைசொல்லுங்கள்மந்திரிகளே,

மந்திரி-இராசனுக்குச்சொல்-விருத்தம்,

சொல்லியவார்த்தைதள்ளிச்சடர்முடிசூட்டுமென்ற ... ❋
மெல்லியையென்னசெய்வோம் மேதினிமுழுதுமாள... ❋
வல்லவள்போலேசொன்ன வார்த்தையால்தெரியாதித்த ❋
சல்லியந்தமக்கேன்பாரத் தலையினிலிரக்குமோமே ... ❋

வசனம்.

கேளும் இராசபரமேஸ்பரா நாம் விவாகம்பண்ணிக்கொள்ளென்றுச் சொன்னவார்த்தையைத்தள்ளிப்போட்டு நானே இராச்சியபாரம்பண்ணுகிறேனென்று சொன்ன சித்திராங்கதையம்மாள் திறமையைச் சிலகாலம்பார்ப்போம் அமை எடுத்தபிறகல்லவோ தெரியும் எதுக்காமதுபோனால் சொல்லுக்குசுகுவுதான்சும்மாமகுடாபிஷேகஞ்சூட்டுவீர் சுவாமி.

இராசன்-சித்திராங்கதைக்குச்சொல்- விருத்தம்,

திருமகள்நிகராய்வந்த சித்திராங்கதையேநீயும் ... *
ஒருமகளாயெனக்கு உதித்ததால்உன்றனுக்கு ... *
தருமசாஸ்திரப்படிக்குத்தக்கமாமகுடஞ்சூட்டி *
பெருமைசேருலகமெல்லாம் பெண்ணரசாளவைப்பேன் *

வசனம்,

கேளாய் என்னம்மாசித்திராங்கதையே உன்மனதின்படியே மகுடாபிஷேகந்தரித்து இராச்சியபாரம்பண்ணும்படி செய்விக்கிறேன் நீ ஒன்றுக்கும்அஞ்சவேண்டாம் அம்மணி,

சித்திராங்கதைசொல்-வசனம்,

அப்படியேசெய்வதுஎனது பாக்கியம்ஐயாசுவாமி

மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்,

பத்தனைச்செய்ததிற்குமந்திரிமாரேகேளீர் *
செந்திருநிகராய்வந்தசித்திராங்கதைக்கிப்போது ... *
சுந்தரமகுடஞ்சூட்ட சோதியம்பார்த்துச்சொல்லும்
அத்தனைத்தம்மையிப்போஅழைப்பிப்பீரமைச்சமாரே

வசனம்.

கேளுங்கள்மந்திரிமார்களேநமது அம்மாள் சித்திராங்கதைக்கு இந்தமதுரைப்பட்டணத்தை பரசாளும்படியாய் பட்டந்தரிக்கவேணும் ஆகையால்-திதி-வாரம் நட்சத்திரம்-யோகம்- கரணம் என்றுசொல்லாநின்ற பஞ்சாங்கப்பிராமணரை அதிசீக்கிரமாய் அழைப்பியுங்கோள்-மந்திரிகளே,

மந்திரிகள்சொல்-வசனம்.

அப்படியே அழைப்பிக்கிறோம்மகாராசனே

மந்திரிகள்-கட்டியக்காரனுக்குச்சொல்விருத்தம்

இட்டமாத்தன அமைத்திரி யினியசித்திராங்கதைக்குப் *
பட்டமுங்கட்டிவைத்தப்பாரராளச்செய்ய *

வட்டவாரிதிசூழ்ந்த வளமைசேர்மதுரைமன்னன் - *
பொட்டெனவழைத்தானென் றபுரோகிதர்க்கறிவிப்பாயே *

வசனம்,

ஆரடா அடா ஆசாரவாசற்காக்குங்கட்டியக்காரா நமதுஇரா ச்குமாரத்தியாகிய சித்திராங்கதையம்மாளுக்குத் திருமுடிசூட்ட வேண்டுமென்றுசொல்லி நமதுபுரோகிதரை அதிசீக்கிரத்திலழை த்துக்கொண்டுவாடா,

கட்டியன்-மந்திரிக்குச்சொல்-வசனம்,

அப்படியே அழைத்துவருகிறேனையா.

கட்டியன்-வேதியருக்குச்சொல் விருத்தம்,

வண்மையாம்மதுரைநாட்டில் வாழ்புரோகிதரேபோற்றி ... *
பெண்மையிலெழுந்தசித்ராங்கதைக்கேபெருங்காளவேண்டி ... *
உண்மையாய்சாஸ்திரங்கள் ஓதபாண்டியன்றனும்மை ... *
திண்மையாயழைத்துக்கொண்டுகடிதில்வரச்சொன்னாரே ... *

வசனம்.

தெண்டம் தெண்டம்சுவாமி புரோகிதரே பாண்டியமகாரா சன் தங்களுக்குப் பட்டங்கட்ட நல்லநாள்பார்க்கவேண்டியிரு ப்பதினால் உம்மை அழைத்துவரச்சொன்னார்வாருமையாசுவாமி,

புரோகிதர்சொல்-வசனம்.

அப்படியே இதோவருகிறேன் கட்டியக்காரா.

புரோகிதர்வருகிற-பொது சந்தவிருத்தம்,

பூசியசந்தனவாசமுமார்பிலிலித்தபொற்புரிநூலொடுகை ... *
வீசியபுத்தகதேசமுமெய்யில்விளங்கியவெண்ணீறும் ... *
சேசியபொனும்விசுவாசபிரகாசமும் சொற்பசராமுன்னம்
ஆசையனேகமும்பேசியபுரோகித அந்தணர்வந்தனரே ... *

புரோகிதர்வருகிற-தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்,

பல்லவி,

புரோகிதர்நாங்களே-வேத-புரோகிதர்நாங்களே

அநுபல்லவி,

பிராமணகுலசிரோன்மணியென
பேசும்புகழ்த்தெங்கவிசும்பஞ்சாங்க ... -(புரோகி)

சரணங்கள்.

அகத்தில்நினைத்தப்பொருளையின்னதென் ... *
றறிந்துசொல்லுவோம்-இந்த- ... *
ஜகத்திலெங்களைப்பலகத்தஅத்தனைரீ ... *
இவனைவெல்லுவோம் நாலு ... *
யுகத்திலுமணமுகூர்த்தம்பார்ப்போம் ... *
ஊரிலொருபிழைவாராமல்கார்ப்போம் ... *
சுகத்தில்கர்மஞ்செய்தவத்தைத்தீர்ப்போம் ... *
அட்சத்திலேமுத்திமோட்சத்திற்சேர்ப்போம் ... (புரோ)

ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம் ... *
நல்லவெள்ளிசனியை-மிக்க ... *
நியாயருக்கக்கலையுள்ளங்கைக் ... *
சேரும்நெல்லிக்கனியைப்-போல ... *
தூயமேஷமுதலரிஷபமிதுனம் ... *
அங்கக்கடகமுஞ்சிங்கங்கன்னிதுலாம் ... *
சாயும்விருச்சிகந்தனுசுமகரம் ... *
சம்பிரமதாகியகும்பமீனமெனும் ... (புரோ)

பட்சத்திலேசரிபதினைந்துந்தினாதி ... *
பன்னிரண்டிற்குதித்து வான ... *
நட்சத்திரம்பரிருபத்தேழு ... *
நாள்களையும்பிரித்து-நல்ல ... *
சொட்கேஷத்திரத்திற்சுபகிரகமேவ ... *
துஷ்டகிரகங்கள் அஷ்டமூர்த்தாவ ... *
லட்சத்தெண்பத்துநாலாயிரஞ்சீவ ... *
ராசிபேதங்களைப்பெருங்கல்யாணியித் ... (புரோ)

இராஜன்-புரோகிதருக்குச்சொல்-விருத்தம்.

ஜயபோபோற்றிபோற்றிஜகமெக்கடலேபோற்றி ... *
பொய்புணராதவேதபுரோகிதவாழ்வேபோற்றி ... *
மையிருவிழிச்சித்திராங்கிமகுடாபிஷேகஞ்செய்ய ... *
தையலாள்பேர்வழிக்குச் சாஸ்திரம்பார்த்துச்சொல்வீர் *

வசனம்.

நல்லம் நல்லம் அவாயிரண்டம் வாருங்கள் இந்தசிம்மாசனத்தில்உட்காருங்கள் எம்மகளாகியசித்திராங்கதைக்கு இளவரசபட்டம்தரிக்கவேணும் ஆகலால் அவள்பேர்வழிக்குப் பஞ்சாங்கம் பலன் பார்த்துச்சொல்லவேணும் சுவாமி.

புரோகிதர்வசனம்

அப்படியேபார்த்துச்சொல்லுகிறேன்மகாராசனே

புரோகிதர்-இராசனுக்குச்சொல்-விருத்தம்

பட்டமுந்தரிப்பேனென்றபாண்டியாஆசீர்வாதம் ... *
மட்டவிழ்குழல்சித்திராங்கிமாதுபேர்வழிக்குப்பார்த்தால் *
அஷ்டமசுத்தியில்லை ஆதலால் அவள்தன்செங்கோல் ... *
முட்டவுமில்லாதென்றேமொழியுதுசோசியங்கள் ... *

வசனம்.

ஆசீர்வாதம் பாண்டியமகாராசனே உன்மகளாகியசித்திராங்கதைக்கு இளவரசுபட்டங்கட்டும்படியாய் அவள்பேர்வழிக்குப் பஞ்சாங்கப்பலனைப்பார்த்தால் எட்டாமிடஞ்சுத்தியில்லை ஆதலால் அவள்பட்டம்முழுதிலும் நிற்கமாட்டாது அவள்வயிற்றிற்பிறந்த பிள்ளை இளவரசாளும்படியாயிருக்குது அவ்வரவெத்தனம் எப்படிக்கூடியுமோதெரியாது ஆகிலுங்குறைவில்லை பட்டங்கட்டலாம மகாராசனே

இராசன் வேதியருக்குச்சொல்-விருத்தம்.

குறைவில்லையென்றபிர்ம்ம குலசிரேஷ்டர்களே அந்த
இறைவனுக்கடிமையான என்மகள்சித்திராங்கிக்கு ... *
மறைமொழிப்படிக்குரத்தினமகுடாபிஷேகஞ்செய்ய
நறைமலர்விரியுமார்பா நல்லநாள்பாருமையா. ... *

வசனம்

கேளுங்கஸ்வாமிபுரோகிதரே பரமசிவன்பாதாரவிந்தத்திற் கடிமையானபதிவிரதத்திலிருக்கும் சித்திராங்கதைக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய நல்லநாள்பார்த்துச்சொல்லுமையாஸ்வாமி

புரோகிதர்-வசனம்

அப்படியேசொல்லுகிறேன்மகாராசனே.

புரோகிதர்-பட்டாபிஷேகத்திற்கு-நாள்பார்க்கிற தரு

இராகம்-மோகனம் தாளம்-டீசரம். [கேளாய்

பட்டாபிஷேகநாளாய்ப்பஞ்சாங்கத்தைப்பார்த்துச்சொல்வோம்

அஷ்டாங்கயோகங்கண்டாகாதநாள்போக்கி ... ... *
மட்டாரும்பூங்குழல்மாதுசித்திராங்கதைக்கு... (பட்டாபி)

சித்திரையஸ்தமிருகசீரிஷம்ரோகணிசுவாதி ... ... ❋
உத்திரமாதிரையுந்திருவோணமவிட்டம்ரேவதி ... (பட்டாபி)

திதியிற்பஞ்சமியுடன்திரையோதசிதனைநாடி ... .. ❋
விதித்திருதிதைபச்சத்தமிவியாழம்வெள்ளிவாரத்தேடி (பட்டா)

அஷ்டகோளாறும்பன்னிரண்டும்சொல்லிலுமல்லிதுமதிக்க
இஷ்டகோளொன்பதுபன்னிரண்டேழுமோகணம்பழிக்கப்(ப)

புரோகிதர் நாள்வைத்துச்சொல் ஆசிரியவிருத்தம்!

சித்திரைமாதந்திடத்தொருபத்தாந்தேதியின்மேதினியில் ... ❋
சீர்பெறுநற்குருவாரமுநற்றிரையோதசியாந்திதியில் ... ❋
உத்திரமெனும்நட்சத்திரமுஞ்சுபயோகமும் கொற்கரணம் ❋
ஊனமிலாமலேமானவதனில்வந்துதித்திடும்நாழிகைனப் ❋
பத்தியிலக்கணம்வைத்தமுகூர்த்தமோர்பதினெழுநாழிகைமேற் ❋
பார்புகழ்கடகவிலக்கினமெனமறைபகருமிச்சுபதினத்தில் - ❋
க்ஷத்திரியகுலத்திலுதித்திடும்பாண்டியன்றன்மகள் சித்திராங்கதை
சதுர்மறைசொற்படிமதனையில்மணிமுடிதாங்குவதின்றுவே

இதுவுமது

சேயுநல்லிராகுகேதுசேய்சனியிரவிமூன்றும் ... ... ❋
ஆறும்பன்னிரண்டுநிற்க அஷ்டமஞ்சுத்தியாக ... ... ❋
தேறுசந்திரன்வியாழந்திகழ்வெள்ளிபுதன்நாலேழும் ... ❋
கூறுமொன்பதும்பன்னிரண்டுங் கொள்ளலாமகுடந்தானே ... ❋

வசனம்.

கேளும்பாண்டியமகாராசனே-சித்திரைமாதம் பத்தாந்தே
தியியாழக்கிழமை திரயோதசிநாழிகை உஅவரை- உத்திரநட்சத்தி
ரம்-௩௰நாழி- சுபநாமயோகம்-உஅதுவரை-கவுலவாகரணம்-உகூது
வரை-திவா-இராத்திரி-மிருதுஇ-மேல்-தியாச்சியம் இராகுகாலம்பூச்
சியம்-லக்கினத்திலேசுக்கிரனிற்க, அஞ்சாமிடத்தில்சந்திரனிற்க,ஏ
ழாமிடத்திலே குருநிற்க ஒன்பதாமிடத்திலேபுதனிற்க,இப்படிச்
சுபக்கிரகங்கள்நிற்க, பாபக்கிரகங்களாகிய-இராகு-கேது சனி-செ
வ்வாய் சூரியன் இவர்கள்மூன்றாமிடத்திலும் பாபக்கிரகங்களும்
நிற்க இப்படிக்கிரகங்கள் பகைநீச்சமில்லாமல் உச்சத்தில்நிற்க எ
ட்டாமிடம்சுத்தியாயிருக்க இச்சுபதினத்தில் உதித்தபதினேழுநா
ழிகைக்குமேல் கடகலக்கினத்தில் பட்டாபிஷேகத்திற்குநாள்பார்
த்துவைத்திருக்கிறேன் இனிமேல்நடக்கவேண்டியகாரியம் பார்க்
கலாம் பாண்டியமகாராசனே,

சமஸ்தமங்களானிபவந்து.

இராசன்மந்திரிக்குச்சொல்-விருத்தம்

எழில்பெறுமந்திரிமாரேயென்னிடமகட்கிப்போது *
அழகுளமுடிதரித்து அவனியையாளச்செய்ய ...... *
பொழிலயிருவேதங்கற்றபுரோகிதர்சொன்னதாலே *
இழிவுளதானம்வாங்குமெல்லோர்க்குந்தெரிவிப்பாயே

வசனம்.

கேளும் எனதுடத்திக்கிசைசர்ந்த உத்தமமந்திரி எனதுகுமார த்தியாகிய சித்திராங்கதையம்மாளுக்குப் பட்டாபிஷேகஞ் செய் விக்கும்படியாய் சோதியப்பிராமணர் சொன்னபடியினாலே ஆ துலர்முதலாகிய அனைவரையும் இவ்விடம்வரும்படியாய்த்திட்ட ஞ்செய்வியுமந்திரி.

மந்திரி-இராசனுக்குச்சொல் வசனம்

அப்படியேமகாபாக்கியம் பாண்டியமகாராசனே

மந்திரிகட்டியனுக்குச்சொல்-விருத்தம்.

கட்டியக்காரனேநீகேள்விசித்திராங்கதைக்கும் ... *
பட்டமுந்தரித்துவேண்டும் பரிசமுங்கொடுக்கவேண்டும் *
மட்டிலாப்பிச்சைக்காரர்மறையோரும்வருவீரென்றும் *
திட்டங்கள்செய்வதன்றிஜெயகண்டியறைவிப்பாயே...... *

வசனம்.

ஆடாவாசற்கட்டியக்கார நமதுசித்திராங்கதைஅம்மாளு க்குப்பட்டாபிஷேகஞ்செய்து அநேகதானதருமங்கள் கொடுக்க வேண்டும் ஆதலால்பூமியிலுள்ள பிராமணர்முதலாகிய பிச்சைக் காரர்கள் வரும்படியாய்த்திட்டஞ்செய்வதுடன்றியில்ஜெயகண் டிபோட்டுவையும் பிள்ளாய்,

கட்டியன்சொல்-வசனம்.

அப்படியேசெய்துவைக்கிறேன் சுவாமி.

கட்டியக்காரன்-யாவருக்குஞ்சொல்- விருத்தம்.

பூசலமெங்கும்புகழும்பாண்டியன்றன் புத்திரிசித்ராங்கதைசொக்க நாதர்தன்னாளால்மணிமுடிதரித்துதவில்பலதானஞ்செய்கின்று ர், ஆதலாலிவ்விலிவாழ்மறையோர்கள் அனைவரும்வருவதல்லாமல் காதலாயன்னமளிக்கின்றேம்பிச்சைக்காரரும்வந்தருள்வீரோ... *

வசனம்.

பாண்டியமகாராசன்குமாரத்தியாகிய சித்திராங்கதை அம்மைக்குநாளையதினம்பட்டாபிஷேகமானபடியினாலே அநேகதானங்கள் கொடுக்கப்போகுறார்கள் ஆதலாலந்தத்தானங்கள்வாங்கிக்கொள்ளும்படியாய் பூமியிலுள்ள பிராமணகூட்டங்கள் வருவதல்லாமல் அனேகம்பிச்சைக்காரர்களும் வரக்கடவீர்கள்

பொதுமட்டுவிருத்தம்.

பறையறைந்துரைத்த-உரையதுகேட்டு ... *
நிறையவேயெங்கும்-மறையவர்வந்தார் ... *

கட்டியக்காரன்சொல்-வசனம்.

ஆகோதெப்படியென்றால் சித்திராங்கதையம்மாளுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யப்போகிறபடியினாலே அதற்காகச்சர்வத்திராளும்வருகிற விதங்காண்க.

பிராமணாள் இயாவரும்வருகிற-தரு நி-ம் மோகனம் அடதாளம்.

கண்ணிகள்.

சித்திராங்கதைபட்டாபிஷேகத்திற்கெல் ... லோரும்
திரளாய்ப்போக ... ... . வேணும் - நல்ல

சத்தியசம்பன்னனும்பாண்டியமகாராசன்
சற்புத்திரனுங் ... ... காணும்

குருட்டுக்கண்ணனுவரதா முறட்டுக்குப்பாகிருஷ்ணு
கூடநடந்து ... ... வாரீர் -பொல்லாத்

திருட்டுத்தனமும்கெட்டப் புறட்டுத்தனமுஞ்செய்யும்
சேஷன்வாரானே ... ... பாரீர்

நீண்டவழியெல்லாம்தாண்டிநடந்தொரு
நிமிஷத்திற்போக ... ... வேணும்.தொம்பைக்

கூண்டுபோலசைக்கவேண்டாம்நடந்துநீர்
கூடவாருங் ... ... காணும்

கொள்ளைகொள்ளையாகவெள்ளியுஞ்செம்பொன்னும்
கோடிகொடுப்பா ... ... னும் - வந்த

கள்ளரையப்புறத்தள்ளிமூக்கோணத்தில்
கட்டியடிப்பா ... ... -னும்

கட்டுவர்க்கங்களில்பட்டஞ்சுதோவத்தி
சட்டமாக ... ... ... எடுப்பான்-இந்த

கீ

அந்நீடிக்கும்புகழ்பாண்டியராசன்
அனைவருக்கும் .. .. கொடுப்பான்

தட்சணையென்னவேசரிலட்சம்பொன்னைவாரித்
தட்டிலெடுப்பா ... .. .. ரும்-எடுத்த

தட்சணம்பிராமணருள்பட்சமுடன்சொன்னதி
தாராளமாய்க்கொடுப்பா .. .. ரும்

தன்னமையதாய்க்கட்டிப்பொன்முகப்பல்லக்கை
நமக்களிக்கச்சொன் .. .. .. னல்-அலை

எம்மகளுக்குமெனக்கும்தந்தாற்குறை
எப்படிபோகு .. .. .. மெல்லா

ஆத்திரமென்னகாண்சுரோத்திரியஅப்பன்னை
ஐயங்காரே .. .. நீரும்-வயதில்

மூர்த்திகிருப்பண்ணை சாஸ்திரியையுடன்கூட்டி
முன்னம்நடந்து .. .. வாரும்

விக்கினமில்லாமல்தங்கப்பவுத்திரம்
விரலுக்கிடுவா .. .. .. ரும்-ஜெய

மங்களம்பாடியமாதருக்குமுத்து
மாலைகள்போடுவா .. .. .. ரும்

இத்தனைதானம்அளித்தும்மனதுபோனா
இன்னமுந்தேடுவா .. .. ரும்-கவி

கற்றபுலவர்க்குரத்தினக்குண்டலம்
காதிற்குப்போடுவா .. .. ரும்

பைம்பொன்அணிகளும்சம்பிரமதாயள்ளிப்
பாரித்துக்களிப்பா .. .. ரும்-நத்தி

நம்பனடியவர் செம்பொற்பதங்களை
நன்மோகனத்தாற்பாடி .. னுன்

கட்டியன்சொல்-பொது விருத்தம்

ஜெகதலமைம்பத்தாறு தேசத்தில்வாழுமன்னர் ... *
சகலரும்வந்து சித்திர சபைதனிற்சேர்ந்தபின்பு ... *
நகரலங்காரஞ்செய்து ஞானசித்திராங்கதைக்கு ... *
மகருலகங்களாளப் பட்டமுந்தரிக்கின்றாரே ... ... *

சரணங்கள்.

வேழமுகனைப்போற்றினார் திகழொளிதருநவமணி ... *
விளக்கனைத்தங்கவேற்றினார்-செழிக்குமிள ... *
வாழைக்கமுகுநாட்டி-மரகதப்பந்தல்பூட்டி ... *
காழகிற்புகைபூட்டி-கமழ்பரிமளங்கூட்டி ... *
கற்பகப்பூமலர் - பொற்பதியெனசிலர் ... ... *
சொற்பகருமநேக-அற்புதமாக ... (பட்டணம்)

புண்ணியதீர்த்தங்கள் அமைத்தார்-வேதபூசானந்தம்பொற்
பூரணகும்பங்கள்சமைத்தார்-புரோகிதர்கள் ... *
நண்ணியதர்ப்பையைக்கொய்ய நவக்கிரகவோமஞ்செய்ய *
புண்ணியகுண்டத்திற்றுய்ய - பொற்பசுவின்நெய்யைப் [பெய்ய
பரிகரியிரத-பதமனத்தங்கள்சூழ ...
வருசிலையேந்திவரும் மாதரசுகத்துவாழ (பட்டணம்)

அத்தாதுந்துமிமுழக்க-இந்திமிதிமியென ... *
அழகியவாத்தியங்கள்வழங்க--விளங்குஞ்செங்கோல் ... *
தந்தைகொடுக்கவாங்கித்-தங்கமகுடந்தாங்கி ... *
மந்திரிகளானபாங்கி மார்களுடனேயோங்கி ... *
மண்டலமெங்கும்புகழ்-கொண்டரசாட்சிசெய்ய ... *
பண்டிதர்தோடிராகம்-பதமலர்மழைபெய்ய (பட்டணம்)

முதற்றோழி அரசிக்குப்போற்றி-விருத்தம்.

பார்புகழ்மதுலாயாளப் பட்டாபிஷேகங்கொண்டு ... *
கார்குழல்தனைமறைத்து கதிர்மணிமகுடந்தாங்கி *
ஏர்பெறுமாசனத்தில் இருந்துசெங்கோலொன்றேந்தி *
சீர்பெறும்அரசுசெய்யுஞ் சித்திராங்கதையேபோற்றி ... *

இரண்டாவதுதாதி நாயகிக்குச்சொல்-விருத்தம்.

க்ஷேமத்தைத்தருஞ்சொக்கேசர் தேவிமீனாட்சியம்மன் *
நாமத்தையோதியிந்த நகரரசாள்வேனென்று ... ... *
நேமத்தைமறவாதிந்த நெஞ்சினில்நினைத்துப்பொல்லாக் *
காமத்தையொழித்தசித்ராங் கதையெனுந்தாயேபோற்றி *

சித்திராங்கதை-தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

மந்திரிகளென்னுந்தாதிமார்களேசொல்லக்கேளீர் ... *
சுந்தரிபாகனான சொக்கேசருளாலென்றன் ... *
சிந்தையில்நினைத்தவெண்ணம் சீக்கிரமாய்முடிந்ததம்மா *
தந்தைதேடினபொன்னெல்லாந்தானங்களிப்போம்வாரீர்

வசனம்.

வாருங்கள் என்மந்திரிகளாகிய தாதிப்பெண்களே மதுரைமீ னாட்சியம்மன்சமேதராய் விளங்காநின்ற சொக்கநாதசுவாமி திரு பாகடாட்சத்தினாலே எனது எண்ணம்முடிந்தது ஈடேறியது இனி என்றந்தையாகிய பாண்டியமகாராசன் சம்பாதித்தத்திரவியமெல் லாம் பிராமணாளுக்கும் இன்னம் மற்றசனங்களுக்கும் பூரிகொடு ப்போம் வாருங்களம்மா.

தோழிகள் சொல்-வசனம்.

அப்படியேகொடுப்போம்வாருமம்மணி.

சித்திராங்கதை-பூரிகொடுக்கிற-தரு-இ ம்-தோடி-தாளம் - ஆதி.

பல்லவி.

பூரிகொடுக்கிறோம் ... ... வாருங்கள்-கையால்
வாரிக்கொடுக்கிறோம் ... பாருங்கள்

அநுபல்லவி.

பாரினில்வாழ்கின்ற பார்ப்பாருக்குமுன்னம் ... *
பட்சமுடன்றந்தட்சணையோடின்னம் ... (பூரி)

சரணங்கள்,

பூதானமுதலான போற்றுமனேகதானம் ... *
கோதானமும்அன்பாய்க் கொடுத்திடுவோம்நாம் (பூரி)

அன்னமும்சொர்ணமும் ஆடைகளும்பூணும் ... *
ஆபரணமும்திவ்ய பூஷணமும்வேண ... (பூரி)

சந்தனந்தாம்பூலம் தாகத்தண்ணீருந்தேடி ... *
அந்தணர்க்கின்ன மளித்தந்தோடியைப்பாடி (பூரி)

சித்திராங்கதை தோழிகளுக்குச்சொல்-விருத்தம்,

நீதிமந்திரிகளென்ன நெருங்கியென்மருங்கினின்ற ... *
தாதிகளெல்லாம்வாரீர் தரணியின்மதுரைசெங்கோல் *
சேதிகள்யாவருக்கும் தெரிந்திடச்செய்வதல்லால் ... *
வீதிகளெல்லாங்கோலம் விளங்கவேவருவோம்வாரீர் *

வசனம்.

நீதிமந்திரிகளாக இரண்டுபக்கமும் நெருங்கி நிற்கின்றதாதி ப்பெண்களே வாருங்கள் என்றந்தையாகிய பாண்டிய மகாராஜ னுக்குப்பிறகு நாம்இளவரசாட்சிசெய்யும் செங்கோற்றிட்டம்யா வருக்கும் தெரிவிப்பதுமல்லாமல் இந்தமதுராப்பட்டணம்தெரு வீதிக்கெல்லாம் சிங்காரகோலம் வருவோம் வாருங்களடிசகிகளே.

மாதவர்முனிவர்போற்றும்மதுரைமீனாட்சியென்னும்
மாதுமைபாகாவுன்றன் மலரடிபோற்றிபோற்றி ❋

சித்திராங்கதை-தேசவிசாரணை.

மதிபரவுமென்மந்திரிமார்களாய்நிற்கின்ற
மாதரேசொல்லக்கேளீர்

மந்திரிகள் விடை.

மேசராசராசபாரமேஸ்வரியுன்றனது
வாய்மலர்ந்தருளுமம்மா

சித்திராங்கதை சொல்லல்.

நிதிபாவுநமதுதிருமதுரையிலரசமுறை
நீதியெங்குஞ்செல்லுதா

மந்திரிகள்-விடை.

நீடாழியுலக-மோர்குடையினிழலில்
நின்றாகசெல்லுதம்மா

சித்திராங்கதை-சொல்லல்.

கதிபரவுதேவாலயங்கள்பிரமாலயக்
கட்டளையெலாம்நடக்குதா

மந்திரிகள்-விடை.

கருணாநிதிக்கோத்சவம் வருபூசையிருமூன்று
காலமுநடக்குதம்மா

சித்திராங்கதை-சொல்லல்.

துதிபரவுமெங்கள் துரைத்தனத்திற்கள்ளர்
சோரரெனுஞ் சொற்களுண்டோ

மந்திரிகள்-விடை.

துஷ்டர்களைவெட்டிபலி யிட்டுதலையைக்கட்டிநீ
தூக்கிவிடுவோம் அம்மணி

சித்திராங்கதை-மந்திரிக்குச்சொல்-விருத்தம்.

வருமதுரைநீதியென்றும் வழுவாமலரசுசெய்ப ... ❋
வரமெனக்கருளுமந்த மதுராசொக்கேசர்பாதம் ... ❋
பரிவுடனினைத்துப்பூசை பண்ணுவோம்நற்றவாரும் ❋
அரன்மனைக்கேகுவோம்பெண் ணழகியரெல்லாம்வாரீர். ❋

வசனம்.

கேளுங்கள் என்மந்திரிகளானதாதிகளே நாயித்தமதுரைப்பட்டணம் இளவரசாளும்படியாய் வரப்பிரசாதந்தந்த சொக்கநாதசுவாமியையும் மீனாட்சியம்மனையும் நினைத்து பூசை பண்ணவேணும், ஆதலால் நமது தந்தையாகிய பாண்டியமகாராஜனிருக்கும் அரண்மனைக்குப்போகலாம்வாருங்களடியம்மா தாதிமார்களே.

மந்திரிகளாகிய பாங்கிகள்சொல்-வசனம்.

அப்படியேபோய்வருவோம்அம்மா.

அர்ச்சுனன்வருகிற பொதுவிருத்தம்

போற்றியதாதிமார்கள் புகழ்சித்ராங்கதையுமிப்போ ... ❋
நாற்றிசையெங்குஞ்செங்கோல் நடாத்தியேவருகுங்காலை ❋
சாற்றியமறையோர்சூழச் சந்நியாசிவேஷங்கொண்டு ... ❋
யாத்திரைப்போகவேண்டி யர்ச்சுனராஜன்வந்தான் ... ❋

கட்டியன்சொல்-வசனம்.

அகோதெப்படியென்றால் இவ்விதமாகச் சித்திராங்கதைதாதிகளுடனே மதுராபுரி பட்டணம் இளவரசாட்சி செய்துக்கொண்டிருக்கும்போது அஸ்தினாபுரத்திலிருக்கும் பாண்டுமகாராஜாவின் குமாரர்களாகிய பஞ்சபாண்டவர்களில் ஒருவனாகிய அர்ச்சுனமகாராஜன் அநேகபிராமணாள் கூட்டங்களுடனே தீர்த்தயாத்திரை செய்யவேண்டிய ஸ்தலங்கள் ஆலயங்கள் தோறும் தரிசனஞ்செய்துக்கொண்டு மதுரைக்குவருகிறவிதங்காண்க.

அர்ச்சுனன்வருகிற-தரு-இ-ம்-கலியாணி தாளம்-மட்டயம்

பல்லவி.

அர்ச்சுனராஜன்வந்தான் - ஜெய
அர்ச்சுனராசன்வந்தான்

அநுபல்லவி.

மெய்ச்சமறையவர் தம்மில்சந் நியாசி
வேஷங்கொண்டுமெய்யில்-வெண்பொடிபூசி (அர்ச்)

சரணங்கள்.

காசிஸ்தலமுதல்மாநிலாத்திருவாலங்
காடும்களஸ்திரியும் - மறை
பேசும்விரிஞ்சிபுரமும் எங்கும்பெயர்
பெற்றகாஞ்சிப்புரியும்-நல்ல
வாசந்தருந்திரு வொற்றியூர்தனில்மேவி

மயிலையீசரிருமலர்ப்பதந்தனைத்தாவி
தேசந்தனிற்புண்யதீர்த்தமும்வாவி
சென்றுதிருக்கழுக்குன்றமுமலாவி (அர்ச்)

திருவந்திப்புரம்பெருந்துறையாரூர்
தில்லைச்சிதம்பரமும்-நதி
பரவுமயூரங்கும்பகோணஞ்சேது
பதிராமேஸ்வரமும்-புகழ்
மருவுந்திருவாவடுதுறைதனைக்கண்டு
மன்னுமடிமுடியென்றுமொருபண்டு
அரியயனுமறியாவழற்குன்றும்
அண்ணாமலையென்னும்வெண்ணெய் நெல்லூர்சென்று(

கங்கையமுனைநிர்மதைகிருஷ்ணை
கன்னிசரஸ்வதியும்-இன்னம்
துங்கபத்திரிகோதாவரிதாமஸாதி
துய்யநவநதியும்-திவ்ய
பங்கயவாவிகள்எங்கணும்நாடி
பார்த்துநல்லதீர்த்தயாத்திரைகளாடி
மங்கைமீனாட்சியோர்பங்கரைத்தேடி
வாணிமகிழ்கலியாணிராகம்பாடி (அர்ச்)

அர்ச்சுனன்-பிராமணருக்குச்சொல்- விருத்தம்.

அருமறையவர்களேநாம்அநேகதூரங்கள்சென்றோம்
திருவளர்மதுரைபோலச்செகத்தினிற்கண்டதில்லை *
உருவமீதென்னசொல்வேன்உமையவளானமீனாட்சி *
மருவியசொக்கநாதர்மலரடிபணிவோம்வாரீர் ... *

வசனம்.

ஆ-ஆ-ஆ-வாருங்கள் என் அருமறையோராகிய பிராமணர்க
ளே நாம் அநேகதூரஞ்சென்று அநேக புண்ணியதீர்த்தங்களி
லேஸ்நானஞ்செய்து தேவஸ்தலமுதலானதரிசனஞ்செய்துவந்
தோம்-ஆ-ஆ-ஆ-இந்தமதுராபுரிபட்டணத்தின் அழகேஅழகு-அ
ரஹரா சொக்கநாதசுவாமியார் திருக்கோபுரதரிசனமேதரிசனம்
ஆ-ஆ-ஆ-இந்தப்புண்ணியதீர்த்தமாடிமதுரைசொக்கநாதசுவாமி
யையும் மீனாட்சியம்மனையுந்தரிசனஞ்செய்து வருவோம் வாரு
ங்கள் பிராமணர்களே,

பிராமணர்சொல்-வசனம்.

அப்படியேபோவோம்வாருங்களையா

அர்ச்சுனன்-கடவுளைத்துதிக்கிற-தரு-இ-ம்-நீலாம்புரி-ஆடதாளம்

கண்ணிகள்

ஆரேனுநின்பாதமலர் சரணம் இன்று
வரமெனக்கருளநீவாவிது தருணம்
திரிபுரமெரிசெய்த நாதா மது
கரியுரித்தரிக்கயத்தசேனிசா மேதா
ஆலகாலவிஷமுண் டாய்-திரு
ஞாலபாலநீலக ண்டா
அம்புலிக்கொண்டையுந்தரித் தாய்-வரும்
வெம்புலியெனுஞ்சொல் வேங்கையையுரித்தாய்
சங்கராசாம்ப சிவனே-மகிழ்
கங்காதரதேவர்கடவுளென் பவனே
பொங்கும்அரவா பரணா மரு
தங்கும்அரவிந்தத்தங்கச்செஞ் சாரா
பங்கயதனைமெரித் தோனே-நல்ல
மாதுமருவும்வளர்கரத் தோனே
சென்மவினைகளைத் தீராய்உன்றன்
சேவடியைக்காணத்தெரிசனந் தாராய்
சதிகாளியொடுசெய்த வாதா-இத்
தரணியையெல்லாமான்சொக்க நாதா
மதுரைமீனாட்சியென் றுமே-என்றன்
வல்வினைதீர்த்தாவாதாரு வாயே
நாலாம்பதவிக்கு நாதா-சொல்லும்
மேலாம்பதவியில் விளங்கும்வி நோதா
பாலாம்பிகைமணாதீ தாயே-திவ்ய
நீலாம்புரிராகம்நீயருள் வாயே

இதுவும்-அர்ச்சுனன்சொல்-கொச்சகம்.

மதுராசொக்கநாதனையும்மாதுமீனாட்சியையும்...... ...*
சதிருடனேவொருப்பதிசனஞ்செய்தோமுலகில்... ...*

எதிரொருவரில்லெனப்பெண்ணினவாசசெய்துவைத்த... *
கதிர்முடிசேர்பாண்டியனைக்கண்டுவருவோம்வாரீர்;... ...*

வசனம்

வாரும்மறையவர்களாகிய பிராமணர்களே நாமிந்தமதுரை
ச்சொக்கநாதனையும் மீனாட்சியம்மனையும் தரிசனஞ்செய்துவந்
தோம் இனிநாமிங்கிருக்கவேண்டியதென்ன புண்ணியஸ்தலங்க
ள்தோறும்போகவேணும் ஆதலால் இந்தமதுராபுரியாளும்படித்
தன்மகளுக்கு இளவரசுபட்டங்கட்டிவைத்த பாண்டியமகாராச
ன் இதோயிருக்கிறார் பார்த்தீர்களா-ஆ ஆ ஆ-இவருடைய தரும
மெதருமம் இவனையுங் கண்டுபோகலாம் வாருங்கள் மறையவர்
களே.

பிராமணருக்கு இராஜன்சொல்-விருத்தம்.

வந்தமாதவரோயுங்கள் மலரடித்தெண்டஞ்சுவாமி ... *
எந்தத்தேசங்கள்நீங்கள் எங்கிருந்திங்குவந்தீர்... ... *
முந்தமாதவமெனக்குமுடிந்ததோதேவரீர்கள் ... *
அந்தமாம்அடியேன்வாழும்அரண்மனைக்குள்ளேவாரீர்

வசனம்,

தெண்டம் தெண்டம்சுவாமிகளே-தேவரீர்கள்எந்தத்தேசங்க
ளிலிருந்துவந்தீர்களோ சுவாமிகள்வந்தபோதேஅடியேன் ஜன்ம
சாபல்யமாச்சுது அடியேனுடைய அரண்மனைக்கு எழுந்தருள
வேணும்சுவாமிகளே

அர்ச்சகன்-இராஜனுக்குச்சொல்விருத்தம்

தெண்டமென்னலாத்தமன்னுசிரஞ்சிவிஆசீர்வாதம்... ...*
அண்டர்கள்புகழுங்காசிபெருமறையவர்கள்நாங்கள் ... ...*
தென்டிசைநதிகள்தோறுந்தீர்த்தங்களாடியிந்த... ... ... *
மண்டலமுழுதுஞ்சென்றுன்மதுராமாநகர்க்குவந்தோம்*

வசனம்.

சிரஞ்சீவி சிரஞ்சீவி ஆசீர்வாதம்மகாராஜனே நாங்களெல்லாங்
காசியாத்திரைப்பிராமணருள் இந்தப்-பூலோகமுழுதும் புண்ணியதீர்
த்தம்ஆடி மதுரைசொக்கநாதசுவாமியையும்- மீனாட்சியம்மனையு
ம் தெரிசனஞ்செய்யவந்தோம்மகாராசனே,

இராசன்-பிராமணருக்குச்சொல்-விருத்தம்,

சொற்பகாசிகூறும் ஐயமாதவரேநீங்கள் ... ... *
தற்பகவனங்கள்போல நடந்திந்தத்தூரம்வந்தீர் ... *

தற்பரசொக்கநாதர்தரிசனஞ்செய்துநாயேன்...... *
கற்பகக்காவில்கொஞ்சக்காலங்களிருக்கலாமே...... *

வசனம்.

வாருங்கள் ஆசீர்வாதம் கூறும்அருமறையோர்களே-நீங்கள் காசிதேசம்விட்டு அநேகதூரம்திரிந்து தென்மதுரைக்கு வந்தீர்களே இவ்விடத்தில் சொக்கனாதசுவாமிதரிசனம் செய்துக்கொண்டு அடியேன்கற்பகப்பூங்காவில் சிலகாலமிருந்து தங்களுடையஆலயங்களுக்குப்போகலாம்சுவாமிகளே.

பிராமணாள்சொல் வசனம்.

ஆனால்கற்பகப்பூங்காவுக்குப்போவோம்வாரும்பாண்டியமகாராசனே,

பிராமணாள்-நந்தவனத்துக்குப்போகிற தரு

இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

கற்பகப்பூங்காவுக்கேகுவோம்-பிராமணாளெநாம்
கற்பகப்பூங்காவுக்கேகுவோம்

அநுபல்லவி.

தற்பரனெனுஞ்சொக்கநாதனைநாடி — ஆய்ய
பற்பலமலர்களைப்பறித்துப்பூசை — செய்ய(கற்பக)

சரணங்கள்.

சங்கரன்பூசையும் சம்பிரமாய்ப்பண்ண — லாம்
மங்களமாகஇவ்வ வனபோசனமுண்ண — லாம் (கற்பக)

இளந்தென்றல்வந்துநமக்கிளப்பாறும்படி — வீச
குளிர்ந்ததிழலிலிகக்கொடுக்கும்பூஞ்செடி — வாச(கற்பக)

அந்தணர்களெல்லோரும் அழகாய்வாரீர் — மிகுந்த
சந்தனமாமெங்கும் தழைத்துவளர் — சுகந்த(கற்பக)

பயிரவமலர்வாயார் கனவல்லியைக் — கடந்து
பயிரவிராகத்தைப் பாடிக்கொண்டு — நடந்து கற்பக)

இராஜன்மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்.

வருதுறையதிர்தாக்கும் மதிமந்திரிமாரேகேளீர்... *
அருமறையவர்களிங்கே பமுதுசெய்திருக்கறாரும் ...*

திருமறைசாமக்கிரிகள் தந்திடனம்மேவதெல்லாம் ✻
ஒருகுறைகளுமில்லாமல் புண்ணியமாயளித்திடவே ... ... ✻

வசனம்.

கேளுங்கள் நானேவருவதறிந்துசொல்லும் மந்திரிகளேவாரு ங்கள் காசியாத்திரைப்பிராமணாள் நமதுகற்பகப்பூங்காவனத்திலி ருக்கிறவர்களுக்கும் அவர்களுக்குவேண்டியஅமுதுசெய்யும்சாமா ன்கள்முதல் வஸ்திரபூஷணங்களுங் குறைவுவராமல் வேண்டியவை யாயினும் கொடுத்துவைத்திருங்கள் மதிமந்திரிகளே.

மந்திரிகள்சொல்-வசனம்.

அப்படியேமகாபாக்கியம்சுவாமி.

கட்டியன்சொல்-பொதுவிருத்தம்.

காசிவேதியனைப்போல காளையர்ச்சுனனிருக்க...... ✻
மாசிலாமுடிதரித்து வரிசிலைவாளுமேந்தி ... ✻
பேசியநாதிமாரும் பெண்சித்திராங்கதையும்வாசம் ✻
வீசியகற்பகக்காவினமாமலரெடுக்கவாரார் ... .... ✻

வசனம்.

அகோதெப்படியென்றால் இவ்விதமாக காசியாத்திரைப் பி ராமணாள் வடிவங்கொண்டுவந்த அர்ச்சுனமகாராஜன் அந்தக்கற்ப கப்பூங்காவிலே அநேகம்பிராமணாளோடும் தானும் ஜெபதப நேமநி ஷ்டைகள் வனபோசனமுதலாகியதும் செய்துக்கொண்டிருக்க சித்திராங்கதையம்மன் தன்மந்திரிமார்களான நாதிமார்கள் ஜோடு ம்படியாய் மாணிக்கமகுடமும் வாளாயுதமுந் தரித்துக்கொண்டு அனேகநாதிகளுடனே புஷ்பவிளையாடக் கற்பகப்பூங்காவனத்தி ற்கு வருகிறவிதங்காண்க.

சித்திராங்கதை தன்னுமந்திரிகளுக்குச்சொல்-கலிப்பா

மந்திரிகளெனுநாதிமார்களேநாமெல்லோரும் ... ... ✻
கந்தமிகுங்கற்பகப்பூங்காவனத்திற்சென்றுமுத்து... ... ✻
புஷ்பவிளையாடிமலர்ப் பறித்துமீனாட்சியம்மன் ... ✻
சித்தமகிழர்ச்சனைநாம்செய்துவருவோம்வாரீர்... ... ✻

வசனம்.

வாருங்கள் என்மந்திரிகளான நாதிமார்களேநாமெல்லோரு ம் கற்பகப்பூங்காவனத்திற்குப்போய்ச் சற்றுநேரம் புஷ்பவிளை யாடி பொற்றாமரைத்தடாகத்தில் குளித்து நந்தவனத்திற் குட்பு குந்து திவ்வியசுகந்தபுஷ்பங்களைப்பறித்து உலகமாதாவாகிய மீனா ட்சியம்மன் பாதத்தில் அர்ச்சனைசெய்து பின்பு நமதாண்டவனைக்

ளுப்போகலாம் வாருங்கள் தாதிமார்களே (அப்படியேபோகலா
ம்வாரும் அம்மணீ)

சித்திராங்கதை-தாதிகளுக்குச்சொல்-தரு
இ-ம்-தோடி ஆதிதாளம்.

பல்லவி.

வனத்திற்குவாருமாதரே-பரிமள-சுகந்தமலர்களும்பலவுள-நந்த
வனத்திற்குவாருமாதரே

அநுபல்லவி.

இனத்துடன்கூடிக்கொண் டிருக்கும்பெண்களிற்கிளி
தனித்திப்பத்தழிக்கலாம் சண்பகப்புட்பங்கலவர் (வனத்)

சரணங்கள்.

வாசமல்லிகைமலரெடுக்க லாம் நல்ல
வண்மையுடனேசாத்தொடுக்க லாம்-வெரு
நேசமுடன்கிளிகள்பேசுமொழியைப்பார்க் காய்
நின்றுகேட்க்கலாம்நாம்இன்றினிவாரும் பூங்கா(வனத்)

மன்னையரேயொன்றாய்க்கூட லாம்-அங்கே
மனதின்படியேவிளையாட லாம் இனி
சங்கைவென்னடிபாதபங்கயமீ னாட்சி
சருவமெப்பெறலாநம்மருவனிரு வாட்சி(வனத்)

மச்சமுல்லைமலரைக்கொய்ய லாம்-மணி
மேடையிற்சிபூசைசெய்ய லாம்-திரு
சொக்கர்மீனாட்சியைத்துதிசெய்வதற் குகந்த
தோடிராகப்பதங்கள்பாடிக்கொண்டு சுகந்த-(வனத்)

சித்திராங்கதை-மந்திரிகளுக்குச்சொல்-கொச்சகம்.

இம்மாதிலங்கள் புகழ் ஏர்பெறுங்கதம்பவனத்தில் ... ❋
நம்மால்நினைந்துசொக்க நாதரடியிணைப்பணிந்து ❋
சும்மாயிராமலழகுதோகையரேயிப்பொழுது ... ❋
அம்மானையாடிபொற்பந் தாடிவாலாம்வாரீர் ... ❋

வசனம்.

வாருங்கள் என்மந்திரிகளெல் லாந்தாதிகளே நாமெல்லோரு
ம் இந்தக்கற்பகப்பூங்காவனத்திற்குவந்துசும்மாயிருக்கப்போகா
மல் சற்றுநேரம் அம்மானையாடிப் பிறகு பொற்பந்தடிக்கலாம்வா
ரும்அம்மா.

மந்திரிகளாகிய பாங்கிகள் சொல்-வசனம்.

அப்படியே நல்லது அம்மணி

சித்திராங்கதை-அம்மானையாடுகிற-தரு

இராகம்-புன்னாகவராளி அடதாளம்.

பல்லவி.

ஆடுவோம்வாரீர் அம்மானை
ஆடுவோம்வாரீர்

அநுபல்லவி.

நாடும்பரனைமீனாட்சியுமையவளைப்
பாடும்பதங்கள்கொண் டாடும்பெண்களேவினை (ஆடு)

சரணங்கள்.

பம்பரம்போல்சுழன் றம்பரிஅரு — கவே
அம்பரத்தனிலிருந்திம்பரில்வரு — கவே (ஆடு)

கொங்கைக்குடங்கள்குலுங்கமனத்தன் — னில்
சங்கையில்லாமல்இச்சண்பகவனத்தன் — னில் (ஆடு)

பின்னைபார்க்கென்றநாம்பேசியதோராட் — டம்
மென்னப்பத்தெடுத்திங்கேவீசியதாராட் — டம் (ஆடு)

விசையாகநானிதோவீசியெறிந்தசெ — ண்டை
அசையாமற்பிடித்துக்கொண்டாலதற்கென்னச — ண்டை (ஆடு)

வள்ளல்சொக்கேசரை மருவுங்கயற்கண் — ணியை
உள்ளத்தனிலென்றன்றனுட்டுண்மையாயெண் — ணியே (ஆடு)

இத்தாகமாத்திரஞ்சேர்இருத்தனைவருங் — கூடி
புன்னாகவராளியிற் புகழும்பதங்கள் — பாடி (ஆடு)

சித்திராங்கதைசொல் கலிப்பா.

அத்தமுள்ளமாதர்களே அம்மானையாடிவந்தோம் ... *
இத்தவிளையாட்டெல்லாம் இருக்கட்டுமினியொருக்கால் ... *
சித்தமகிழ்ந்திருவகுப்பாய்ச்சேர்ந்துநாமனைவோரும் *
பத்தவிளையாடிமலர்ப் பறித்தினிதாய்நாம்வருவோம் ... *

வசனம்.

வாருங்கள் அழகின்மிகுந்த நாரிமார்களே அம்மானையாடின
து இருக்கட்டும் இனிமேல்நாம்அனைவரும் இருவகுப்பாய் எதிர்
த்து சற்றுநேரம் மூத்தப்பந்தடித்துப் பிறகுதிவ்ய சுகந்தபரி
மளமானபுட்பத்தைப்பறிப்போம் வாருங்களடியம்மா.

தோழிகள்சொல்-வசனம்,

அப்படியேபோவோம்வாரும்-அம்மணீ,

சித்திராங்கதைபந்தாடுகிற-தரு இ-ம்- மத்தியமாவதி - அடதாளம்,

பல்லவி,

பந்தெடுத்தாடுவோம்வாரீர்-பொற்பதுமைகள்போல்நற் - புதும
பந்தெடுத்தாடுவோம்வாரீர் [லர்ச்சாலையில்

அநுபல்லவி,

வந்தெடுத்தவர்க்குப்பொன்வழங்குங்கற்பகக்காவு
இந்திடங்களுக்குமேலெங்கிருக்குது தாவு (பந்)

சரணங்கள்.

பிள்ளையார்க்கென்றுநான்போடுகிறேனே நாட்டம்
பெண்களேயிதன்மேலேஉங்களுக்குமன நாட்டம்
வள்ளல்சொக்கேசர்மருவுங்கயற்கண் ணிமைய
உள்ளந்தனிலென்றுமுண்மையாயெண் ணியே(பந்)

விசையாகநானிதோவிடுகிறேன்பார் பந்து
வித்தகிமார்களேயித்தனைபே ரிருந்தும்
அசையாமலெதிர்நின்றடிபிடிக்கவு முங்களால்
ஆகாதயிந்தாட்டம்போகாது பெண்களா(பந்)

இதுவும்சித்திராங்கதைசொல்-விருத்தம்,

ஆவியொன்றுடலிரண்டாய் அமர்ந்ததாதிகளேயித்த ... *
காவிபங்களுஞ்செவ்வாம்பல் கமலமும்நிறைந்துநின்ற *
வாவியிற்குளித்துநந்த வனத்தினிற்புகுந்துதிவ்ய ... *
பூவினிலதிசுகந்த புஷ்பங்களெடுப்போம்வாரீர் ... *

வசனம்.

உயிரொன்று உடலிரண்டென்று சொல்வதுபோல் என்உயிருக்குயிராய்நின்ற சகிகளேவாருங்கள் நாம்பந்தடித்த இளைப்புதீரும்படி நீலோற்பலபுட்பங்களும் செவ்வியபுட்பங்களும்- செந்தாமரைப்புட்பங்களும் செங்கழுநீர்புட்பங்களும் நிறைந்துகுளிர்ச்சிபொருந்திய இந்தத்தடாகத்திலே குளித்துநந்தவனம் புகுந்துகற்பகப் புட்பங்களெடுத்து சொக்கநாதசுவாமியையும் மீனாட்சியம்மனையும் பூசைபண்ணியபின்பு நமதரண்மனைக்குப் போகலாம் வாருங்கள்சகிகளே,

இதுவும் சித்திராங்கதைசொல்-தரு-இ-ம்-மோகனம்- அடதாளம்

பல்லவி.

கற்பகப்பூப்பறிப்போம்- அம்மா நாம்
கற்பகப்பூப்பறிப்போம்

அநுபல்லவி.

நற்பாவை னுஞ்சொக்கசுவாமியங்கயற் கண்ணி
பொற்பதநளினங்கள்பூசைசெய்யவு மெண்ணி (கற்பக)

சரணங்கள்,

பல்பேசைமுல்லைமருவுங்குரு வேரும்
மெல்லியசெபலவிதமாயெடுப்பம் வாரும் (கற்பக)

பாரிசாதமலர்பறித்தோடி வாருங்கள்
நாரிபாகன்பாதநளினத்திற் சேருங்கள் (கற்பக)

மந்தாரபுஷ்பங்கள்மடியினிற் கட்டுங்கள்
சுந்தரமேனோரிடஞ்சேரவே கொட்டுங்கள் (கற்பக)

கோகநகமாதுகுலவுமிந்தத் தினத்தில்
மோகனராகத்தைமொழிந்தந்த வனத்தில் (கற்பக)

பொது - வசனம்.

இவ்விதமாய் சித்திராங்கதை விளையாடிக்கொண்டிருக்கையில் அர்ச்சுனராஜன் வருகிறவிதங்காண்க.

அர்ச்சுனன் பிராமணனுக்குச்சொல் - விருத்தம்.

காசிவேதியரேயிந்தகற்பகவனத்தைக்கண்ட ... ... *
ஆசையால்முழுதும்பார்க்க அகத்தினில்நினைக்குதென்றன் *
பூசைமுடித்தப்பொற்பூம்பொய்கையில்மூழ்கிதிவ்ய *
வாசனைமலரெடுத்துவருகிறேனிருந்திடீரே. *

வசனம்.

ஆ-ஆ-ஆ-வாருங்கள் காசிப்பிராமணனே- நானிந்தக்கற்பகவனத்திலிருக்கின்ற அற்புதத்தைக்கண்ட ஆசைமுழுதும் போய்ப் பார்க்கலாமென்று என்மனம் எண்ணுது ஆகையால் இந்தப்பொற்றாமரைத்தடாகத்தில் தீர்த்தமாடி தேவதார்ச்சனைக்கு உகந்ததிவ்ய பரிமளமான புஷ்பங்களைக்கொண்டு வருகிறேன் நீங்களெல்லோரும் இவ்விடத்தில்தானே யிருங்கள் சுவாமிகளே,

பிராமணன்சொல் - வசனம்.

அப்படியேபோய்வாரும் பிராமணசத்தியாசியே.

### அர்ச்சுனன்சொல் - வசனம்.

ஆ-ஆ-ஆ-இந்தவனம் இந்திரலோகத்தி லிருக்கின்ற நந்தவன
மோ-ஆ ஆ ஆ-என்னசுந்தரமோ-ஆ-ஆ-ஆ ஆஇந்தபுஷ்பவிருக்ஷங்
களெல்லாம் கற்பகவிருக்ஷங்களோ-ஆ-ஆ ஆ-ஆ என்னலக்ஷணம்-
ஆ-ஆ-ஆ-ஆ-பாரிசாத புஷ்பத்தின்பரிமளமேபரிமளம் இதைவிட
வேறொருவனமுண்டா ஒருவனம் ஆ ஆ-ஆ-ஆ இந்தமந்தார மலரி
ன்மணமேமணம்-ஆ-ஆ-ஆ-ஆ இதுவேநல்லகுணம்-ஆ-ஆ-ஆ-ஆ
இந்தமுல்லைமலரின்முகையே முகை-இதுவேநல்லவகை ஆ-ஆ ஆ-
ஆ இந்தமல்லிகைமலரின்வாசமேவாசம், இதுவேநல்லபிரகாசம்-
ஆ-ஆ-ஆ ஆ இந்தவனத்திலிருக்கின்ற இருவாட்சியே இருவாட்சி,இ
தைவிடவேறுண்டாஒருகாட்சி, ஆ-ஆ-ஆ ஆ - இந்தவனத்தின் மரு
வேமருவு, இதுவேநல்லதிருவு, ஆ-ஆ ஆ-ஆ-இவ்வனத்திலிருக்கின்ற
சித்திரப்பதுமையேபதுமை, ஆ ஆ-ஆ-ஆ இதோவிச் சித்திரப்பது
மைபோல் தோற்றுதே இதென்ன ஆச்சரியம்.

### கட்டியன்சொல்-பொதுவிருத்தம்.

கற்பிலிதுயர்த்தசித்திராங்கதையுந்தாதிகளுங்கூடி ... *
பற்பலவிதபுட்.பங்கள்பறித்துக்கொண்டிருக்கும்போது *
வெற்பினுமுயர்ந்ததோளான்விஜயனுமிவளைக்கண்டு *
அற்புதமென்னவென்றுஆசைகொண்டுருகுவானே. ... *

### வசனம்.

இந்தப்பிரகாரம் சித்திராங்கதையும் தன்தாதிகளும் கற்பகப்
பூங்காவனத்திலே புஷ்பமெடுத்து விளையாடிக்கொண் டிருக்கும்
போது அவ்வனத்தில் யாத்திரையாய் வந்திருக்கின்ற அர்ச்சுனமகா
ராஜன் சித்திராங்கதையினுடைய அதிரூபசவுந்தரியங்களைக் கண்
டு மோகிக்கிறவிதங்காண்க.

### அர்ச்சுனன்சொல்-கொச்சகம்.

பார்மகளோவரைப்பசுங்கிளியோபாவதிரை ... ... *
நீர்மகளோரத்தினமோநித்திலமோவிளம்புசாரி ... *
ஊர்மகளோநல்லஉரகர்மகளோயிவளே ... ... ... *
ஆர்மகளோவென்றிங்கதியமொழிகூறுவனே. ... ... *

### வசனம்.

ஆ-ஆ-கா-இவள்பார்மகளோ, பார்மகளாகிய பூமிதேவியோ
பச்சைசப்பசுமைபொருந்தியகிளியோ, பாத்திரையல்லவோடுங் கூ

டிய திருப்பாற்கடலிற் பிறந்தமகாலட்சுமியோ, அல்லது-மாணிக்கப்பிரதமையோ, ஆணிமுத்தோ, கார்முகளாகிய தேவகன்னியோ உரகர்மகளென்றுஞ் சொல்லப்பட்ட நாககன்னியோ, ஆ-ஆ-ஆ- இவளாரோ, இவளுடைய அதிரூபசவுந்தரியம் எவ்வெவ்வாறு சொல்லுவேன். ஆ-ஆ.

அர்ச்சுனன்-சித்திராங்கதையைக்கண்டுமோகிக்கின்ற-தரு.

இ-ம்-அசாவேரி தாளம்- ஆதி.

பல்லவி.

அதிரூபசவுந்தர்ய-ரதிசிரோன்மணியிவள்
ஆரெனத்தெரியேனே-இனிநாமித்தப் - பரிவிற்பிரியேனே

அநுபல்லவி.

சதுருதயம்போல்முழு-மதிவதனமாகவும்
காவிற்பாவைபோலு-லாவிதன்சகிகளைக்
கூவிமேவியபூவைத் தாவிக்கொய்யுகின்ற (அதி)

சரணங்கள்,

பத்தரைமாற்றுத்தங்கத்தை யொத்தெழிலிவளங்கத்தைப்
பார்க்கக்கண்கள் கூசுதே நல்ல
பாரிசாதமலரை வாரிமுடித்தகூந்தல்
பரிமளங்களும் வீசுதே
சித்திரப்பதுமையென்ன உச்சிதலட்சணமாது
சேடியருடன்கூடிவிளையாடியிங்குவந்தாள் நான்
செய்தயாத்திரையின் எய்தியபலனுள்ளங்
கைதனில்நெல்லியங் கனியெனக்கண்டுகொள்ளும் (அதி)

துவளுங்கொடியிடை- இவளுக்குண்டோயில்லையோ
துணையிளமுலைப் பாரம்-நாளும்
சுமந்தெந்தவிதமாக திமிர்ந்துநடந்துவந்தாள்
தோளைசயித்ததனை ஆரம்-கரும்
குவளையங்களுஞ்செம் பவளவாயும் பல்லும்
கோத்தமுத்துக்களைப்போல் வாய்த்ததிலெந்தச்சொல்லிடம்
மட
குயில்போலமொழிகூறுகிறாள்
மயில்போலமின்னுமலர்வனமன்ன நடை (அதி)

கொண்டையினழகுஞ்செக்கல் கடைவிழிகளும் பொன்
குமிழைமுக்கடிந்த மூக்குளும்-தக்க

குடமுலைகளாயிருதடமலைகளு ... மிளங்
குயிலைப்பழிக்கும் ... வாக்கும்-பொற்
றண்டையுஞ்சதங்கையும்வெண்டயமும் ... ஒலிக்கும்
சரணியிவளல்லவிதாளியெண்ணம் ... பலிக்கும்
தசாவதாரநாராயணன்றங்கைக்கு ... கந்த
அசாவேரிராகம்ஆலாபிக்க ... வந்த (அதி)

அர்ச்சுனன் சொல்-கலிப்பா.

மானோமரகதமோமடமயிலோமால்குயிலோ ... ... *
தேனோமதுரமிகுஞ்செங்கரும்போசெண்பகமோ ... *
வானோர்க்கமுதோவளர்மதியோமதன்ரதியோ ... ... *
ஏனோமலர்வனத்தில்இருக்கின்றாளேந்திழையே. ... *

இதுவும் அர்ச்சுனன் சொல்பத்தியம் இ-ம்-புந்நாகவராளி.

கொண்டைகருமேகமோகண்டரிளம்பூகமோ
குழைகளும்வள்ளையோகுமிழிலட்டு
முண்டகக்கண்கள்சேற்கெண்டையோயிவள்முகம்
முழுமதியென்னவேமொழியலாகும்

வெண்டாளமணிகளோதொண்டையிதழ்வாய்நகை
விற்புருவமோயித்தமெல்லியற்கு
செண்டுநேர்குரும்பையோஇரண்டுமாமலைகளோ
செங்கமலமோகரங்கள்செயிலழக்கு-இந்த

மண்டலத்திலிவட்குமருங்கொன்றில்லை
உண்டெனவுமுண்மையாயுரைக்கலாமோ
கண்டுபேசாதிருந்தால்என்காமம்விடுமோ
அண்டையிற்போய்நீயாரடியென்றறிகுவேனே.

இதுவும்-அர்ச்சுனன்சொல்- இரட்டை-சீசபத்தியம்.

கொண்டலைவண்டினத்தண்டலைவென்றகார்
கூந்தலழகுக்கொருகோடிசரணம்
குழவிப்பிறைநெற்றியில்கழைவிற்புருவத்தினில்
குலவுமழகுக்கொருகோடிசரணம்
கூறயிலைக்கயலைநேர்விழிகளுக்கும்பொன்
குமிழ்மூக்கழகிற்குமுக்கோடிசரணம்
குளிர்வள்ளைக்காதிற்கும்ஒளிர்மதிமுகத்திற்கும்
கோவையிதழ்வாய்க்குநாற்கோடிசரணம்

குயில்கள்கிள்ளைகள் நாணயபயின்மொழிகட்கும்வேண
கோவைநகைக்கோவைந்துகோடிசரணம்
குன்றுகள்குயிழ்தியிழைமென்றுடம்பாம்பூண்ட
கும்பமலைக்கிருமூன்றுகோடிசரணம்
கோளரியுமின்னலைமேலுநடம்பையும்வென்ற
கொடியிடைக்கோரேழுகோடிசரணம்
கொடிஞ்சித்தேருநட்டையுமடக்குசெய்அரவப்பையை
கூறுமல்குலுக்குளெண்கோடிசரணம்
சரணம்நவகோடிசெந்தாமரைப்பூம்
சரங்களமிற்குஞ்செங்கரநலவிரல்கட்கும்
சரணம்அன்னநடைக்கும்மயிலெனக்சாயலுக்கும்
சரணமொருகோடிசரணமீதே
தருணமினியென்மீதில்தயைசெய்யுமானே

இதுவும் அர்ச்சுனன்சொல்-தரு - இம்-தோடி-தாளம்- மட்டயம்

பல்லவி.

நீயாரடி பெண்ணே - உன்றன்
நிலையைக் கூறடிகண்ணே.

அநுபல்லவி.

தாயார்தந்தையாரவர்கள்பேயர்
தானென்னமோனந்தனந்தத்தினில்வந்த (நீயாரடி)

சரணங்கள்.

உன்றன்பெய
ருரைப்பதுவன்றுக்
கந்தாஞ்சே
சோதியைத்தருஞ்
நந்தவனத்தில்கைந்தபுட்
நாடிப்பந்துவிளையாடிய
மந்திரிகளாய்க்கொண்டதந்திர
மங்கையேநீர்சொல்லும்அங்கஜனை

ரென்னமோ-எனக்
கின்னமோ-மிகச்
ரன்னமோ-நாளும்
சொர்ன்னமோ-நிலய
பங்களை
பெண்களை
விதங்களை
வெல்லும்(நீயாரடி)

செங்கையினில்வில்
தேவலாயும்வெல்
தங்கமகுடம்
தையலேசெங்கோற்
மங்களமிகுசபங்களைக்

லேதா-கரிசெய்
லாதா-இந்தத்
நில்லாதா-அடி
செல்லாதா
கண்டு

சித்திராங்கதை-தோழிகளுக்குச்சொல்- தரு-ஸ்ரீராகம்-ஆதிதாளம்.

பல்லவி,

சகிகளேயிக்கிவ னாடி-கற்ற
சமர்த்தெல்லாம்பேசுகிறான் பாரடி.

அநுபல்லவி,

மகிதலந்தனைப்பெண்கள்ஆளக்கூடுமோ வென்றான்
மையலைத்தீர்க்கஅடிதையலேவா வென்றான் (சகி)

சரணங்கள்.

தங்களுமடியுனக்குத்தகாதடி யென்றும்
தாரணியாளவுந்தொலாதடி யென்றும்
செங்கோற்செல்லாதென்றும்உன்கையில்லேதென்றும்
செப்புகிறான்கல்விஅப்புறம்போகச் சொல்லீர் (சகி)

தந்தைதாய்பெயருமென்றன்பெய ரிலவோ
தனித்துக்கேட்க்கின்றவன்சந்நியாசி யெவனோ
இத்திடத்திலிவனை இருக்கவொட்டாமற் கையை
இழுத்துப்பிடித்துக்கொள்ளீர் கழுத்தைமடக்கித்தள்ளீர்.

குடுமிக்கன்னமில்லாமல்முடியெடுத்தெந் நாளும்
குவலயமெங்குந்திரிந்திவனிங்கேன்வந்தான்கேளும்
பிட்சைக்குவந்தவன்பெண்டுக்கழைத்தா னென்ற
பேச்சிதுபோல்ஸ்ரீராகம்வாச்சதிங்கிருக் கின்ற (சகி)

இதுவும்-சித்திராங்கதைசொல் - கலிப்பா.

மெல்லியரோமக்கிந்த மேதினியிலேயொருவர் ... ... *
இல்லையெனச்செங்கோ லோச்சிமணிமுடிதரித்து *
மல்லிகையுமுல்லை மலரேக்கலந்திடத்தே ... ... ... *
சல்லியமிதென்னமோ தானெதிர்த்துவாரீரோ, ... ... *

வசனம்.

வாருங்கள் மந்திரிகளானசகிகளே நமக்கிந்தபூலோகத்திலெ வரும் எதிரில்லையென்று இளவாசபட்டமும் தங்கமகுடமுஞ் செங்கோலுமேற்றிக்கொண்டு மதுரைப்பட்டணம் ஆண்டு இந்தநந்தவனத்திற்குவந்த நம்மைக்கண்டு சற்றும்பயமில்லாமல் பெண்ணேயென்றுங் கண்ணேயென்றும் சற்றேபேசடியென்றும் மெத்தமோசடியாய்ப்பேசுகிறான் இந்தபிராமணசந்நியாசியை நியாயொன்றுகேட்போம் வாருங்கள் என்சகிமார்களே,

சகிகள்சொல்-வசனம்.

அப்படியே கேட்போம் வாரும் அம்மணி.

சித்திராங்கதை-சந்நியாசிக்குச்சொல்-கலிப்பா.

மாதரசுசெய்யுமிந்த மதுரையெனுந்தலத்திற்சொக்க ... *
நாதரையும்அங்கயற்கண் நாயகியையுந்துதிக்கும் *
காதலன்மிகுமெங்களைநீ கண்டுமையல்கொண்டுநின்ற ... *
ஞூதென்னமௌனியரே சொல்லும்பிராமணரே ... *

வசனம்.

பெண்ணரசாட்சிசெய்யும் இந்த மதுராபுரி பட்டணமென்னும் ஸ்தலத்தில்வாழ்கின்ற சொக்கநாதசுவாமியையும் மீனாட்சியம்மனையும் தரிசிக்கும்பொருட்டாய் வந்த நந்தவனத்தில் எங்களைக்கண்டு மையல்கொண்டேனென்றும் வம்புவார்த்தைப்பேசிய பிராமணா நீயார் எங்கிருந்துயிங்குவந்தாய்சொல்லுஞ்சந்நியாசி.

சித்திராங்கதைக்கும் - அர்ச்சுனனுக்கும் - வாது - தரு.

இ-ம்-நாதநாமக்கிரியை-அடதாளம்.

அந்தணன்போலிந்த நந்தவனத்தில்வந்த
திருடன்நின்னாதாம் காசியோ-உன்றன்
பெரும்பிராமணசந்தி யாசியோ - இங்கே
வந்திடத்திலுனைக் இந்தக்கேடுமதி
வந்ததென்னடாசொல்லும்பிராமணா

அர்ச்சுனன்சொல்-தரு-இ-ம்ஷை

சொல்லுவதென்னடி மெல்லியேகேள்வெகு
தூரமென்னாதகாசி நான்-என்றன்
பெரும்பிராமணசந்நியாசி நான் - இந்த
எல்லையில்யாத்திரை நல்லதீர்த்தமாடி
இங்குவந்தேனடி பெண்ணே

சித்திராங்கதைசொல்லல்.

அடிப்பெண்ணேயென்றுங்கள்குடிபெண்ணைப்போலெண்ணி
அழைக்கிறாயென்னடா வேதியா-தப்பிப்
பிழைக்கமாட்டாய்மரியாதை யாய் ஒரு
நொடிப்போதினின்றுயிர் மடிப்பார்கள்முப்புரி
நூலோனென்றுஞ்சொல்லும் பிராமணா

அர்ச்சுனன்-சொல்லல்.

முப்புரிநூலோனென்றிப்புவியெங்கும்
மொழிவனம்திஜந் தானடி-உன்னைத்

தழுவியணையவந் தேனடி இந்தக்
கற்பகவனத்தில் சப்பிரமஞ்சத்தினிற்
கலந்தணைவோம்வாடிகண்ணே

சித்திராங்கதை- சொல்லல்,

கண்ணேயென்றும்அடிபெண்ணேயென்றுங்கற்ற
கல்வியெல்லாமிங்கேகன் கழட்டுறாய்-வித்தை
சொல்லியேயென்கண்ணே கழட்டுறாய்-நீ
பெண்ணிலத்தெண்ணைநீகுனியிந்தமண்ணில்
இறப்பாயிருபிறப்பாளாய்

அர்ச்சுனன் சொல்லல்,

இருபிறப்பாளாவுஞ் உருவிறப்பாயென்றின் பாரு உன்றன்
இசுழ்ச்சியாய்ப்பேசத்தப் போதுஜக்
பழிஞ்சியழிப்பேனிப்
தருமறப்பாயிருவருஞ்சிறப்பாயிங்கே
தழுவியணைகுவோம்வாடி.

சித்திராங்கதை- சொல்லல்,

அழுவுங்கைகளுக்கிழித்தொழுவம்விழுமடா
தப்பிலாப்பார்ப்பானென்னும் மாதவா-உன்னைத்
திப்பாதிப்பவென்ன மோதவாகாலுக்
கழுவிலங்கிட்டுயிர்கழுவில்மாட்டியுன்றன்
ஆண்மையையழிப்பேனுன் அந்தணா

அர்ச்சுனன்- சொல்லல்,

அந்தணனென்றெனைவந்தனஞ்செய்யாமல்
ஆண்மைக்குலைப்பேனென்று, நொடிக்கிறாய் அம்மா,
வீண்மலைப்பேனிங்கே யடிக்கிறாய்-இந்த
நந்தவனத்தினில்தந்தனுன்மோகமே
நாததாமக்கிரியை ராகமே

சித்திராங்கதை- அர்ச்சுனனுக்குச்சொல் விருத்தம்,

இவ்விடம்விட்டுப்போகா திருந்தானுன்வாயில்மண்ணில் *
கவ்விடத்தள்ளியுன்றன்காலுக்குவிலங்கைப்பூட்டி ... *
எவ்விதத்தாலிவ்வாறுக் கிளாயிடுவார்கள்பெண்கள் ... *
அவ்விடம்விட்டுநீங்கி யறிவுகெட்டவனேபேடா ... *

வசனம்.

ஆரடா அறிவுகெட்டபிராமணா நீ இந்தக்கற்பகவனத்தில் இ
ன்னஞ்சற்றுநேரம் வம்புவார்த்தைகள் பேசிக்கொண்டிருந்தாயே

யானால் உன்னால் உன்வாய் இத்தமண்ணிற் கவ்விக்கொள்ளும்படி க்கழுத்தைமடக்கித்தள்ளிக் காலுக்கு அழுவிலங்குபூட்டி. எவ்விதத் தாலும் எனது தாதிமார்கள் உன்னை இவ்வாறுக் கொயிடுவார்கள் ஆகையால் இப்பொழுதே ஓடிப்போடாபிராமணா.

அர்ச்சுனன் சித்திராங்கதைக்குச்சொல் - விருத்தம்,

ஓடிப்போவென்றாயின்னம் ஒருநொடிதனிலேயுன்னைக் ... ❋
கூடிப்போகாமற்போனால் குவலயந்தனில்லென்றாவி ... ❋
வாடிப்போகத்தோயாவி மன்மதபாணம்பட்டுத் ... ❋
தேடிப்பூங்காவனத்திற் சேர்ந்தனேந்திநேவம்வாராய் ... ❋

வசனம்,

வாடிபெண்ணே - என்கண்ணே - என்கண்மணியே - இன்னம் என்னை ஓடிப்போவென் றுசொல்லுவது உனக்குத்தர்மமா, உன்னைக்கூடிப்போகாமற்போனால் மழையில்லாதபயிர்போல் எனதுஉயிர்வாடிப்போகாதா, இனியாகிலும் என்பேரில்தயவுசெய்து இந்தக்கந்தபகவனத்தில் என்னை நீ மருவியணையாமற்போனால் என்மையல்மட்டுப்படாதடி. என்கண்மணியே,

இதுவும் - அர்ச்சுனன்சொல் - வாது - தரு
இ-ம்-மத்தியமாவதி - அடதாளம்

மட்டுப்படாதென்றன் மையலே - என்னை
மருவியணையடி. தையலே - இனி
கட்டியணைத்துமுத்தம்இட்டுக்கொள்ளடி. சற்றே
கட்டிச்சட்டாற்போற்கைவிட்டுவிடாதேதழுத்தே (மட்டுப்)

சித்திராங்கதைசொல் - த-ரு-இ-ம்-தை.

தத்தித்தவிக்கிறாய் விழுகிறாய் - காம
சமுத்திரத்திலேண்டா முழுகிறாய் என்னைச்
சுற்றிவருகின்றமாதர்கண்டால் மேலே
தாக்கிமண்ணுக்கிரையாக்குவரொருக்காலே (தத்தி)

அர்ச்சுனன் - சொல்லல்,

ஒத்திரக்கிரண்டாகப் பேசுறாய் - இன்னம்
ஓலைவண்ணடிமேத்த வீசுறாய் - இந்த
மண்ணுக்கிரையாக்கவெண்ணியிருந்ததெல்லாம்
மாதாசெயுன்றன் ஆதரவில்லாமல் (மட்டுப்)

சித்திராங்கதை - சொல்லல்,

ஆதரவென்னடா வேதியா - சும்மா
அப்புறம்போமரி யாதையாய் எம

நாதகனென்றொருநாதிகண்டால் கன்னம்
கலங்கஅடிப்பாருன்னைமலங்கப்பிடிப்பார்சொன்னேன் (தத்)

அர்ச்சுனன்-சொல்லல்.

கன்னங்கலக்கஅடி பாரோ-பெண்கள்
கையால்மலங்கப்பிடிப்பா ரோ மட
அன்னமேநீயென்னைச்சொன்னதெல்லாஞ் சொல்லு
அங்கஜன்கைவில்லும்மங்கையே நீவெல்லும் (மட்டுப்)

சித்திராங்கதை சொல்லல்,

என்கைவில்லாலுன்னைக் கொல்லுவேன்-இன்னம்
எதிர்த்தவனாக்கூட வெல்லுவேன்-இந்த
தங்கமகுடமுஞ்செங்கோலுங்குறியாமல்
தாரணியாளுவதாரென்றறியாமல் (தத்)

அர்ச்சுனன்-சொல்லல்,

மாதரசாளுவ தேது-தாதி
மந்திரிகளென்னத் தகாது இந்தப்
பூதலமாதர்கள்காதினிற்கேட்கவும்
புத்திகெட்டவளென்றுகுத்துவர்தவைடயில் (மட்டுப்)

சித்திராங்கதை-சொல்லல்,

தவைடயில்குத்துவ ராரடா-இன்னம்
சற்றுநேரமிருந்து பாரடா-நீ
இவடத்திலென்னமோகவடத்தனஞ்செய்ய
எண்ணிமந்திரியாவதினையநண்ணியதைநீமெய்யை (தத்தி)

சித்திராங்கதை-தோழிக்குச்சொல்-விருத்தம்.

சகிகளேகேட்டீரோ விச்சத்திரியாஜிசொன்னசொல்லை ... *
மகிதலந்தனையாளை மந்திரிகள்நீங்களாக ... ... *
விகிதமிதெல்லாஞ்சும்மா வீணென்றுனிவனைக்கொல்ல *
வகையதுவென்னநீங்கள் வார்த்தையொன்றுரைசெய்வீரோ,

வசனம்.

வாருங்கள்என்சகிகளே,இந்தப்பிராமண சத்திரியாஜிசொன்ன வம்புவார்த்தையைக்கேட்டீர்களா, நானிந்தமதுரைப்பட்டணம் ஆளக்கூடாதென்றும் நீங்களெனக்கு மந்திரிகளாகத்தகாதென்றும், தன்னைமருவியபின்வாடியென்றும்-போடியென்றும்-இன்னம் வம்புவார்த்தைகளைப் பேசுகிறதைப்பார்த்தால் நமதுபட்டணத்திற்கு என்னமோ கபடமாய் மோசஞ்செய்யவந்தவனைப்போ

க்காணுமம்மா, ஆகையால் இவனைக்கொல்லவேணும் இதற்கொரு
உபாயஞ் சொல்லுங்கள் சகிகளாகியமந்திரிகளே.

சித்திராங்கதைக்கு- முதல்தாதிசொல்-விருத்தம்.

சிசுவைவேதியனையின்னஞ் சிறந்திடுங்கந்தைதாயைப் ... *
பசுவையுங்கொன்றாற்பஞ்ச பாதகமென்பார்முன்னோர் *
அசைவிலாநமதுசெங்கோற் கனித்தியம்வாராதம்மா ... *
இசையவேயிவனைத்திட்டி யிவிடம்விட்டோட்டுவோமே *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி குழந்தையை-பிராமணனை தா
ய் தந்தையை-பசுவை-இவ்வைந்தையுங் கொல்வதுமகாபஞ்ச பா
தகமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் ஆகையால் நாம் இ
வனைக்கொல்லலாகாது நமதுபட்டணத்தித்து ஒருதாழ்வும் வரா
து இவனைத்திட்டிவிரட்டி இந்நந்தவனத்தை விட்டோட்டிவிடு
வோமம்மணி,

சித்திராங்கதைசொல்-வசனம்,

ஆனால் உங்கள்மனதிற்குச்சம்மதியெப்படியோ அப்படியே
செய்யுங்கள் சகிகளே.

இரண்டாவதுதோழி-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்,

அஞ்சமாதரசேசித்திராங்கதை யெனுந்தாயேசொன்ன ... *
பஞ்சமாபாதகத்திற் பார்ப்பானைக்கொல்வதென்ன ... *
கொஞ்சமாங்கொலையொன்றல்லாற் கோள்பொய்க்கட்களவும்
வஞ்சமாம்பாவமெல்லாம் வரும்நமக்கிதுநன்றல்ல [பொல்லா

வசனம்.

கேளாய் செந்தாமரைக்கமலத்தில் வாசஞ்செய்யும் ஸ்ரீமகா
லட்சுமியைப்போலும் விளங்காநின்ற சித்திராங்கதையம்மணி-கு
ழந்தை-பிராமணன்-தாய்-தந்தை-பசு-இவ்வைந்தையுங் கொல்லப்
போகாதென்று இவள் சொன்ன வார்த்தை சரிதான் இதனினும் பி
ர்ம்மஹத்திசெய்வதென்ன கொஞ்சமா, மேலும்-கோள்-பொய்-கள்-
களவு-என்றுசொல்லும் பஞ்சபாதகம் வருவதுமன்றியில் பொல்
லாத வஞ்சனைதுரோகஞ்செய்த பாதகமும் வருமாகையால் பிர்
ம்மஹத்திசெய்வது தர்மமல்லதாயே,

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

யோசனைபல்வுமெண்ணி யுனதுதாதிகளோடின்னம் ... *
பேசினிருந்தாற்காமம் பிராணனைவாட்டுதென்றன் ... *

ஆசைதீர்க்கவெண்ணி அகமகிழ்ந்தணையவாராய் ... ⁕
காசினிபுகழுஞ்சித்திராங் கதைபெணுமயிலென்கண்ணே ⁕

வசனம்.

வாராய்பெண்ணே நீயுனதுதாதிகளுடனே பலபல ஆலோசனைபண்ணிக்கொண்டிருந்தால் என்னுயிர்பிழைக்குமா, இனிமேலாகிலும் என்காமவிகாரத்தைத்தீர்த்து என்னுயிர்பிழைக்கச் செய்கின்றவளானால் நாமிருவரும் மருவியணைவோம் வாராய்பெண்ணே என்கண்ணே,

அர்ச்சுனனுக்கும்-சித்திராங்கதைக்கும்- வாது- தரு-
இ-ம்-தந்நியாசி- அடதாளம்.

ஏதுக்கோயோசனை பண்ணுறாய் பெண்ணேயின்னம்
என்னடிமோசங்க ளெண்ணுறாய்
மாதர்க்கரசியேயுன்மணவாளனு னல்லவோ
மையலாயின்னமுமடிமையைபேலெயென்னைக்கொல்லவோ (ஏது)

சித்திராங்கதைசொல் - தரு-இ-ம் ஷை

வாதுக்கிடமு மாக்கதே-ஐயையோவென்றன்
மதியுங்குலைந்து போச்சுதே
சூதுக்காரனென்றுன்னைத் தொழுவிலங்கிற்போடாமல்
காதுமூக்கையுங்கொய்துக்கடக்கவோட்டிவிடாமல் (வாது)

அர்ச்சுனன்- சொல்லல்,

ஓட்டிவிட்டாலும் போவனோ உன்னைக்கூடாமல்
உயிரைக்கொன்றாலுஞ் சாவனோ
நாட்டிலுள்ளோரறியநல்லமணம் நடத்த
கூட்டியுன்னையுங்கூடக்கொண்டுபோகாமற் கடக்க (ஓட்டி)

சித்திராங்கதை- சொல்லல்.

இதற்கோவுனைவைத் திருந்தார்-என்றன்தந்தை
என்னதுன்மதி நினைந்தார்
சதிக்காரநீயென்றார்தன்மனதிற் சற்றும்
மதிக்காமலிவனுரோமமைநயவனென் றழைத்து (இதற்)

அர்ச்சுனன்- சொல்லல்.

வைத்திருந்ததற் கென்னமோ-பெண்ணேநானுந்தன்
மணவாளனென்பதற்கின்னமோ
உற்றதுசொல்கிறேன் உண்மையாயிதுதா னடி
க்ஷத்திரியக்குலத்திலிந்தநந்சயறு னடி (வை)

சித்திராங்கதை சொல்லல்.

தனஞ்செயப்பெருமா னுக்கு-நீயேடாஅவர்
தாமலரப்பாதத் துளிற்கு

தினஞ்செய்வோனுதயம்போல் திரேகத்தழகுக்காளை
மனஞ்சலிக்குமேகன்கள் மாதர்க்கனேகம்வேணும்(தின)

அர்ச்சுனன் சொல்லல்,

நடவனே நான் ளுனடி-பிராமணவேஷம்
எடுத்தாத்திரைவந் தேனடி.
தேடவுங்கிடைக்குமோசேயிழையே நானேக்
கூடவருவாய்நல்லக்குணத்தில்மிகுந்த காளை(நட)

சித்திராங்கதை- சொல்லல்.

கொண்டவன்போலழைக்கி றாய்-பொல்லாதபண்டார்
குலப்பிழைப்பேன்பிழைக்கிறாய்
உண்டவீட்டிற்கொருநாளும்ரெண்டகஞ்செய்ய நாடி
சண்டைசெய்யவேவந்தாய்சந்நியாசிராகம் பாடி (கொ)

அர்ச்சுனன் சொல்- விருத்தம்.

மறையவனென்றாசற்று மனதினிலெண்ணவேண்டாம் *
குறையொன்றில்லாமல்வாழும் குருகுலத்தரசர்தம்மில் *
பொறையினின்மிகுந்ததர்மபுத்ரன்பின் னுதித்தோன்தம்பி *
அறையுமென்பேரெல்லோரும் அர்ச்சுனனென்பார்பெண்ணே

வசனம்.

கேளடிபெண்ணே சித்திராங்கதைநான்பிராமணனென்று எ
ன்னை வேண்டாம் எங்கள் பூர்வோத்திரஞ்சொல்லுகிறேன்கேள் எ
ங்கள்குலம் குருகுலம், என்தகப்பன் தேவேந்திரமகாராஜன் என்
தாய் குந்திபோஜராஜன் குமாரத்தி-என்றமையன் தர்மபுத்திரமகா
ராஜன்-வீமசேனன் என்தம்பிமார்கள்-நகுலன் சகாதேவன்-எங்க
ள்பட்டணம் இந்திரப்புரி-என்பெயர்-அர்ச்சுனமகாராஜன்- என்று
சொல்லுவார்கள் நான்பிராமண சந்நியாசிவேஷங்கொண்டு பு
ஷ்கரத்தில் புண்ணியதீர்த்தயாத்திரைக்கு வந்தேன் ஆகையால்எ
ன்னைமுஷ்டியெடுக்கிறபிராமணனென்றெண்ணிச் சந்தேகப்பட
வேண்டாம் இனிமறுவார்த்தைப்பேசாமல் என்னைமருவியணைய
வாடிபெண்ணே.

சித்திராங்கதை-தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

மறையவனென்றவன்றான் மகிழ்வுடன்அன்னபானம் *
குறைபறக்கொண்டபின்னும் குருகுலமன்னனென்றான் *
முறையிதுதம்மைக்கூடி மோகமுந்தீர்த்தாற்பின்பு *
பறையனென்றாலப்பாவித்தப்பாவியையென்னசெய்வோம்

வசனம்.

கேளுங்கள்எனதுதாதிகளே இவனைக்கொன்றுபோடுங்களே
ன்றுசொல்லுதல் பிரமஹத்திசெய்யப் போகாதென்று சொன்னீர்

களே இப்போது இவன்சொன்ன சொல்லைக் கேட்டீர்களா முன்
னேவரும்போது பிராமணசந்நியாசி வேஷங்கொண்டுவந்தான்
வந்தவனுக்கு என்றந்தையாகிய பாண்டியமகாராஜன் சாயக்கிரி
யைகள் வஸ்திரபூஷணமுதலானதும் கொடுத்து நமதுகற்பகவன
த்தில் வனபோசனஞ்செய்துக்கொண்டு சிலகாலமிருந்துப் போ
கலாமென்று சொன்னார் அப்படியிராமல் அடிமடியிற்கையைப்
போட்டதுபோல் நாம் பூபறிக்கவந்தயிடத்தில் எங்களைக்கண்டு
மோகித்து நான்பிராமணனல்ல குருகுலவங்கிஷசிகாமணியாகிய
அர்ச்சுனமகாராஜனென்று சொல்லுகிறான் அதைக்கேட்டு பூலோ
கமாயைக்குள் அகப்பட்டு இவன்பேச்சை நம்பிச் சம்மதித்தா
ல் பின்பு நாங்களெல்லாரையும் விட்டுநீக்கும்பொருட்டு நான்
பறையருச்சேயென்று சொல்லுவான் போற்காணுது இந்தப்பா
வியை யென்னசெய்யலாம் சகிகளே.

முதல்தோழி நாயகிக்குச்சொல்-விருத்தம்.

கொக்கினுந்தோஷிக்கொக்குங் கூட்டத்தைக்கெடுத்ததென்று
திக்கில்வாழ்பார்ப்பார் தம்மில்திருட்டன்போலிவன்பிறந்து ❋
அக்குலந்தனையனைத்துங் அழிக்கவந்திருவின்னம் ... ❋
சக்கிலியென்றுஞ்சொல்வான் சந்தேகமில்லையம்மா ... ❋

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி கொக்குக்கூட்டத்தில் ஒருதோ
ஷிகொக்கிருந்து அதன்குலத்தனைத்தையும் கெடுத்ததென்றுசொ
ல்லுவார்கள் அதற்குச்சரியாய் தான் இவன்நல்லபிராமணகுலத்தி
ற்பிறந்தவனைப்போலே காணுது அப்படிக்கிருந்தும்தான்க்ஷத்திரி
யனென்றுசொல்லுகிறபடியிருல் இவனை நம்பக்கூடாது இன்னஞ்
சக்கிலியென்றும்சொல்லுவான் இதற்குச்சந்தேகமில்லை அம்மணி.

இரண்டாந்தோழி- அரசிக்குச்சொல்-விருத்தம்.

சைவசொக்கேசர்நாட்டில் சாதியிலுயர்ந்தோனென்றும் ❋
ஐவர்சோதரனென்றும்பேர் அர்ச்சுனனென்றும்உன்னைக் ❋
கைவசப்படுத்தவேண்டிக் காரணமென்னவிப்பார்த்தால் ❋
வைசியனென்றும்சொல்லு வானென்றுந்தோணுதம்மா ❋

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி திவ்யசைவசிவசொக்கநாதசுவா
மிவிலாசஞ்செய்யும் திருமதுரையென்னும் புண்ணியக்ஷேத்திரத்தி
ல் தீர்த்தயாத்திரா பிராமணசந்நியாசியாய் வந்தவன் இந்தகற்ப
கவனத்தில் உன்னைக்கண்ட தட்சணம் க்ஷத்திரியகுலமென்றும் தர்
மபுத்திரமகாராஜனுக்குத் தம்பியென்றும் அழகில்மிகுந்த அர்ச்
சுனமகாராஜனென்றும் உறவின்முறைகொண்டுவந்தவலைமோக

ஞ்செய்ய நினைத்தவன்க்ஷத்திரியகுலமென்றுமாத்திரமா சொல்லு
வான்போலேதோணுது அம்மணீ.

முதல்தோழி-நாயகிக்குச்சொல்-விருத்தம்,

சாஸ்திரமறையோனென்றும் சத்தியாசியென்றுமின்னம் *
கோத்திரமுரைக்கின்றானற் குருகுலத்தரசர்தம்மில் ... *
யாத்திரைப்போகவந்த அர்ச்சுனனெனன்றவன்றான் ... *
சூத்திரனென்றும் நாளைச் சொன்னாலுஞ்சொல்வானம்மா *

வசனம்.

கேளும்இராசபரமேஸ்வரி இவன்பிராமணசந்நியாசியாய்வ
ந்தவன் இப்போது க்ஷத்திரியகுலமென்றும் தர்மபுத்திரமகாராச
னுக்குத்தம்பியென்றும் அர்ச்சுனமகாராசனென்றும் சொல்லத்
துணிந்தவன் வைசியகுலமாத்திரமா சொல்லுவான் சூத்திரகுல
மென்றும் சொன்னாலுஞ்சொல்லுவான் அம்மணி.

இரண்டாவதுதோழி- அரசிக்குச்சொல்-விருத்தம்.

வானச்சந்திரன்போல்வந்து வளர்சித்திராங்கதையேநல்ல *
ஞானசங்கரர்சொக்கேசர் நகரில்அந்தணனைப்போல்வந் *
தானசக்கிலியல்லாமல் தனஞ்செயனென்றானின்னம் ... *
ஞானசக்கிலியென்பானை யிவனைநம்பொண்ணாதம்மா ... *

வசனம்.

கேளும்பரமேஸ்வரி சீதளப்பிரகாச சந்திரனைப்போல்தின
மொருமேனியாய்வளர்ந்த சித்திராங்கதையம்மணி நல்லசிவஞா
னசொக்நாதசுவாமி வாசஞ்செய்யுந்திருமதுரைப் பட்டணத்தில்
இவன்பிராமணனைப்போலே வந்து நம்மைக்கண்டச்சமென்கிற
பயமுங் கிலியும் இல்லாமல் க்ஷத்திரியகுலஅர்ச்சுனனென்றுசொ
ன்னவன் சக்கிலியென்றுஞ்சொல்லுவான்இன்னஞ்சற்றுநேரமிரு
ந்தால் ஞானச்சக்கிலியென்றுஞ் சொல்லுவான் இவன்பேச்சை எவ்
வளவும் நம்பப்போகாதம்மணி.

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

மலைக்கும்பாரியக்கல்மேலே வழுதலைக்காய்க்குமோவென்றால் *
சொலைக்குமோராயிரக்காய்க் கொத்துக்கோராயிரக்காய் ... *
இலைக்குமூவாயிரங்காய் எனச்சொலிக்குடித்தனத்தைக் ... *
கலைக்குமாதர்கள்தன்பேச்சைக் காதிலுங்கேட்கலாமோ *

வசனம்.

கேளடிபெண்ணே சித்திராங்கதை மலைக்கும்பெரிதா யுயர்
ந்த கல்லின்மேலே வழுதலைக்காய்க்குமோவென்றால் சொலைக்கா

யிரங்காய் கொத்துக்கிரண்டாயிரங்காய் இலக்கு மூவாயிரங்காய்
இப்படிக்கெல்லாங்காய்க்குமென்று சொல்வதுபோல்பிரமனை கு
லத்திற்பிறந்து க்ஷத்திரியகுலமென்று சொல்கிறுனென்று நீசொன்
னவார்த்தை நயக்கேட்டதாதிப்பெண்கள் க்ஷத்திரியகுலமென்று
மாத்திரமாசொல்லுவான் வைசியனென்றுஞ் சொல்லுவானென்
றுஞ் சூத்திரனென்றுஞ் சொல்லுவானென்றுஞ் சொல்லிக் குடி
யைக்கெடுத்து ஒருகுடியை ஒம்பதுகுடியாக்கும் பெண் பெண்
சாதிகளுடைய பேச்சைக்காதிலுங்கேட்க்கலாமா உன்னுடையதா
திப்பெண்களுக்கும் உனக்குந்தெரிந்தது இவ்வளவுதானு இனிநா
னுஞ்சேற்கொண்ட ஆசையைத்தீரடிபெண்ணே

சித்திராங்கதை-புலம்பல்-தரு-இ-ம்நீலாம்புரி-ஆதிதாளம்.

அரகராசிவனேயென் விரதந்தப்பிருவித்த
அசிலம்பநகைத்திடாதோ தெய்வமே-இனி
ஆராவுன்றனையின பாதமலரன்றிவேறில்
காணெனக்குத்துணை தெய்வமே
புரமெரியச்சிரித்த பரமசிவனேயுன்றன்
பொற்பாதத்தனைநாளுந் தெய்வமே-சிவ
பூசைசெய்பவுமெண்ணி வாசமிருக்கற்பகப்
பூபதிக்கவந்தேனோ தெய்வமே
காமக்குரோதலோப மதமோகமாச்சரிய
கர்மவலையிற்சிக்கித் தெய்வமே-என்
கற்பழிந்துபோகாமல் தற்பராசொக்கநாதா
சரணம்னக்கெனக்காரும் தெய்வமே
மாமலர்ச்சோலையுஞ்செந் தாமரைவாவியுஞ்சூழ்
மதுரைமீநாட்சியென்றுந் தெய்வமே
வாலாம்பிகைபொற்பாக நீலாம்புரியிராக
மறைபோதியவிவேக தெய்வமே

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

மங்கைபங்காளனென்றாய் மதுரைவாழ்சொக்கநாதர் ❋
அங்கயற்கண்ணியென்னும் அம்மையும் அருகிருக்க … ❋
கங்கையைச்சடையில்வைத்த கதையை நீகேட்டிருந்தாம் ❋
சங்கைபெண்ணடியுனக்குத் தழுவநாம் அணைவோம்வாடி. ❋

வசனம்.

கேளடிபெண்ணே சித்திராங்கதை அந்த மங்கைபங்காளரா
கிய மதுரைசொக்கநாதசுவாமியை நினைத்து அழுகிறுயென்னடி

அவர்இடப்பாகத்திலேயேத்தானும்பிரியாமலிருக்கின்ற மீனாட்சிய ம்மனை அறியாமல் கள்ளத்தனமாகக்கங்காபவானியைச் சடாபார த்தி லொளித்துவைத்திருக்கின்றதை நீகேட்டிருந்தும் இன்னமே ன் சந்தேகப்படுகிறாய் என்னைத்தழுவியணையடிபெண்ணே,

சித்திராங்கதைக்கும் அர்ச்சுனனுக்கும்-வாக்கு தரு

இ-ம் கேதாரகௌளம்-ஆதிதாளம்.

மாதவாவுனக்கென்ன வேட-நந்த
வனத்தைவிட்டப்புறம் போடா
பாதகாஉன்முகம் பார்க்கவும் போகாது
பாரிப்பானுக்குவழி கூப்பவும் போகாது (மாதவா)

அர்ச்சுனன்சொல் - தரு-இ-ம்-டை,

பெண்ணேஉன்னைவிடு வேனோ-மற்றப்
பேதையைநான்தொடு வேனோ-எந்தன்
கண்ணேயுன்னைத்திருக் கலியாணஞ்செய் யாமல்
மண்ணுளநீபெற்ற மைந்தனைவை யாமல் (பெண்)

சித்திராங்கதை- சொல்லல்,

கலியாணஞ்செய்யவோவந் தாய்-இந்தக்
கற்பகக்காவிலிருந் தாய்
அல்லிஅரசாணியாரென் றுநீபார்த் தாய்
அபிமாயோம்சதிவெறியாயிங்கேன்பார்த் தாய் (மாதவா)

அர்ச்சுனன் சொல்லல்,

அல்லியரசாணி நீயே-பூமி
ஆளவர்மோபெண் பேயே
வில்லிலுயர்ந்தவன் விமத்தினோ யவன்
விஜயனல்லவோ நிசமாகச்சொல்ல வோ (அல்லி)

சித்திராங்கதை- சொல்லல்,

விசயனென்றுவிருக்குச்செல்லவை யோ-மாய
வேஷங்கொண்டுவாயால் வெல்லவை யோ-நன்றாய்
இசையுப்பிட்சைபெற்றாலும் இரப்பவர்க்கே கொடுக்கும்
இம்சயெங்கும்கீர்த்திமெனம்வசமாய்முகிழ்டியெடுக்கும் (வி)

அர்ச்சுனன்- சொல்லல்,

முகிழ்யெடுப்பேனென்றெண்ண னுமே எனனை
முழுதும்பரியாசம்பண்ண னுமோ-பார்க்கும்

யம் சோலைக்கனியிதழ் தேனூறலைக்குடிக்கின்றதே மருந்தா இ
தைவிட வேறே வயித்தியமில்லை என்னைமருவி அணையவாடியென்
கண்ணே கண்மணியே,

சித்திராங்கதைக்கும்- அர்ச்சனனுக்கும்-வாது-தரு

இ-ம்-தோடி - அடதாளம்,

| | |
|---|---|
| வாடியென்றென்னை மதியாதழைக் | இருப் |
| வம்புகள்பேசியுன் வாயேன்புழுக் | கிருப் |
| சேடியாளுன்றன் செம்மை ஒழிக | இருப் |
| திருடன்போலண்டாதீ தெங்கெமுழிக் | கிருப் |
| சொற்றவனேதவம் அற்றவனே | மத |
| முற்றவனே பேச்சுக் கற்றவனே | சிசி |
| போடாபோடாபிராமணா வுன்றனுக்கென்னா | * |
| போங்காலமேயாபிராமணா | * |

அர்ச்சனன்சொல்-தரு-இ-ம் ஷை.

| | |
|---|---|
| சீச்சீப்போவென்றென்னைச் செப்பினாலும் | முன்றன் |
| சேடியாலென்னைத்தெரிந்திருந்தும் | இந்தப் |
| பூச்சிக்குறாதேருடிப் போகமாட்டேன் | சொந்தப் |
| புருஷனாகியுன்னைப் புணரவுந்தான் | வந்தேன் |
| பூவினிலற்புத வாவிருந் | கற்பகச் |
| காவிலிருவோருங் கூடிமேவியத்தோடினைப் | பாடி |
| வாரும்வாரும் அன்னமே மருவினையல் | * |
| திரும்திரும் சொரிணமே | * |

சித்திராங்கதை புலம்பல்-தரு இ-ம்-ஆனந்தபைரவி - அடதாளம்.

புருஷன் வேண்டாமென்று பெண்ணாசாட்சிசெய்து
பூரிப்பாயிருந்தேனே — தெய்வமே-ஒரு

பூசாலிவருவாரோ புணருவோம்வாடியென்று
புங்காவிலழைக்கிறான் — தெய்வமே

ஒருட்சணப்போதிலிவன் உயிரைக்கொல்லாமற்சும்மா
ஓட்டிவிட்டேனையானால் — தெய்வமே இனி

உள்ளப்படியிவட்குகள்ளப்புருஷனென்றில்
லலெகெங்கும்பழியாதோ — தெய்வமே

செங்கோலும் ஆக்கினையும் இக்கேடெனக்கெந்நாளும்
செல்லுமென்றிருந்தேனே — தெய்வமே-இந்த

செகதலமன்னனென்னை நகைக்கவுடம்பெடுக்கத்
    தீவினையெல்செய்தேனோ — தெய்வமே

மங்களமாகத்தாதிப் பெண்களுடனேமன
    மகிழ்ச்சியாயிருந்தேனே — தெய்வமே

மதுரைமீனாட்சித்தாயே சதிசெய்யலாமோநீயே
    வந்தெனைக்காக்கவேணும் — தெய்வமே

மாநிலமெங்கும்புகழ் ஆனந்தபைரவி
    ராகமருளவேணும் — தெய்வமே

அர்ச்சுனன்சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

மதுரைமீனாட்சியம்மன் மகேசரைப்பிரிந்தாளென்றே ... *
கதிதருதவஞ்செய்தந்தக் கடவுள்தன்னிடப்பாகத்தில் *
சதிருடன்கலந்துவாழும் சங்கதிகேட்டிருந்தும் ... *
எதிர்மறைபேசவேண்டாம் இருவரும்அணைவம்வாடி. *

வசனம்.

கேளடிபெண்ணே சித்திராங்கதை இந்த மதுரைமீனாட்சியம்
மனுகிய மகேஸ்வரிக்குத் தகப்பனென்று சொல்லப்பட்டதக்கன்
ஆகங்கொண்டுசெய்த மகாவேள்வியில் அவன்தலையாட்டுத் தலையா
ன படியினாலே அப்பேர்ப்பட்டவன் மகள்நமக்காகாதென்று சு
வாமிதன்னிடப்பாகத்திலேயிருக்கின்ற நல்பரியைப்பிரித்தபோ
து அம்மனுனவள் இமோர்க்கிரிபர்வதராசன்வயித்திற்பிறந்து பா
ர்வதியென்றும் பேர்பெற்றுபரமேஸ்வரனைநோக்கி அநேககாலந்
தவஞ்செய்து பிறகு சுவாமியிடப்பாகத்தில் எப்பொழுதும்போ
லே ஏகத்திரேகமாய்க் கூடிக்கலந்திருக்கிறதும் அறிந்திருந்தும் எ
திர்மொழி பேசவேண்டாம் நாம் இருவரும் கூடியணைவோம்வா
டிபெண்ணே.

சித்திராங்கதைக்கும்-அர்ச்சுனனுக்கும்வாது தரு

இ-ம்-தோடி-அடதாளம்

எதிர்மொழிபேசா திருக்கவுன்றன் — குணம்
    எல்லாந்தெரிந்துதே பொல்லாதபிரா — மறு
பதரேயுன்னைப்போலே பட்டுவிழுப் — பிணம்
    பாரினித்சொல்லவும் ஆருமில்லையோரே — ணை!
பாதகனேயெம காதகனே — தீட
    சாதகனைகெட்ட மாதவனே — செதி

போடாபோடாயிராமனே உனக்கென்ன *
போங்காலமோயிராமனே *

அர்ச்சுனன்சொல்-தரு-இ-ம்-ஷெ

சித்திராங்கதையெனும்பேர் சொல்லுமோயா — ஒரும்
செப்புமொழியென்றும் தப்பல்லவே — பாரும்
க்ஷத்திரியகுலத்தினிற் றனஞ்செயனென் — பேரும்
சங்கையில்லையடிவுனக் கிங்கிதமா — மாம்
காட்டிவைப்பேன்மாலை சூட்டிவைப்பேன் — கோலம்
காட்டிவைப்பேன்விலைப் பூட்டிவைப்பேன் — இனி
யாரும்வாரும்அன்னமே விலைசெப்பி *
பாரும்பாருங்கொரினமே *

சித்திராங்கதைபுலம்பல்-தரு-இ ம் ருகாரி-ஆதிதாளம்.

அரிகரிகோவிந்தா முராஅரிவைகுந்தா
அச்சுதானந்தமுகுந்தா — ரகுநாதா-சொல்லும்

ஆதிமூலமேவுன்றன் பாதமலர்நம்பினேன்
ஆபத்தைக்காருமையா — ரகுநாதா

திருமகளுறைமார்பா மருவளர்பத்மநாபா
ஜெகம்புகழும்பிரதாபா — ரகுநாதா

தேவதேவமணாளபால தேவகிதந்த
சேயாமாயா சகாய — ரகுநாதா-மணி

வல்லசுரமல்க்கல்லனே கேசவகிருஷ்ணா
மச்சக்கூர்மாவதாரா — ரகுநாதா

ஸ்ரீதராதாமோதராசொல் லாதாவுன்பாதமல்லாமல்
செகத்திலெனக்காராயா — ரகுநாதா-வெகு

சென்மவிகாரமோகம் கண்டவுன் தீர்வாகம்
செய்யுமுகாரிராகம் — ரகுநாதா

அர்ச்சுனன் - சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

இரகுநாதனைப்பணியத்த நந்தகோபாலன்வீட்டில் ... ... *
மிகவுங்கள்ளரித் திருடல்லோ மாதனைமருவிக்கூடி ... ... *
லெகுவாச்சமட்டித்தாப்பால்மோர் வெண்ணெயுந்திருடியுண்டு
செகமதிலின்னுஞ்செய்த சேதிநீபயில்லையோ ... ... *

வசனம்.

கேளடிபெண்ணே இராகுநாதசுவாமியை மிகவும் நம்பிக்கை செய்கிறாய் என்னடி அவர்தானே ராதாருக்குமணி - சத்தியபாமாமுதலாகிய அஷ்டபட்டஸ்திரீகள் இருக்க அதுவுமல்லாமல்தன்மார்பில் எந்நாளும்பிரியாமல் மகாலட்சுமியிருக்க அதுவேயாகாமல் அனந்தகோபாலனென்றும் சொல்லப்பட்ட இடையர்வீட்டில் பிள்ளையாய்ப்பிறந்து பால் மோர்-தயிர் வெண்ணெய் முதலாகியதும் திருடித்தின்பதுமல்லாமல் பதினாயிரங்கோபஸ்திரீகளை வகையோகஞ்செய்து மருவிடனேத்தும் இன்னம் பூலோகத்தில் அனேர்செய்தகபடவஞ்சனைகள் உனக்குத்தெரியாதா அப்பேர்ப்பட்டவனை நம்பியழுகிறாய் என்னடி நான்பிச்சையெடுக்கிறபிராமணன் அல்ல என்னைமருவிஅணையவாடி பெண்ணே மைதிலாடகண்ணே

சித்திராங்கதைக்கும் அர்ச்சுனனுக்கும் - வாது - தரு

இ-ம் - தோடி - அடதாளம்.

பிச்சையெடுப்பாய் பிழைத்ததையுந்தின்னு — வாய்
பெருகுசமுத்திரத்தைப் பேய்போலேயுன்னு — வாய்
நட்சத்திரங்களை நன்றாகஎன்னு — வாய்
நமனேபுக்கூடப்பலகாரம்பண்ணு — வாய்
நம்புவேனோசொல்லியம்புவேனோ — மெத்த
வம்பனல்லால்சத்திய சம்பன்னனோ — ரிச்சி
போடாபோடாபிராமணா உனக்கென்ன — *
போங்காலமோபிராமணா — *

அர்ச்சுனன் - சொல்லல்.

மருக்குமரியாதைவையாமற்றிட்டு — றாய்
மாதரேசொல்மழையெனக்கொட்டு — றாய்
குரங்குபோலென்றனைக் கூத்தாட்டமாட்டு — றாய்
கொல்லுவேனென்றுநீ சொல்லிமிரட்டு — றாய்
கொம்பனேயேசத்திய சம்பன்னியே — சந்திர
விம்பவதனியே நம்பினே — னன்னையே
வாரும்வாருமன்னமே மருவியென் — *
மையல்திருஞ் சொர்ணமே — *

சித்திராங்கதைசொல் - தரு - இ-ம் ஆனந்தபைரவி ஆதிதாளம்.

வேதியனல்லஞ்விரதம் பாதியித்யோகத்தலையில்
விதித்தவிதியிதுவோ — பிர்ம்மதேவா - நல்ல

வெற்றியுமெனதுசெங்கோல் சத்தியமும்இவ்வுலகில்
விளங்கப்போகுமையோ — பிர்மதேவா

ஆதியில்லாதத்தை ஓதியவாசகமும்பொய்
ஆச்சுதென் செய்வேனய்யா — பிர்மதேவா-சொல்லும்

அன்னைவாகனமென்றாகம் தன்னையறிதும்விவேகம்
ஆனந்தமயிராவிராகம் — பிர்மதேவா

அர்ச்சுனன்- சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

சதுர்முகப்பிர்மாவுக்குநான் சரஸ்வதிதேவியைப்பிரித்து ... ❋
தான்சிருஷ்டித்த ... ... ... ❋
மதிமுகமார்திலோத்தமையை மகளென்றுபாராமல் ❋
மையல்கொண்ட ... ... ... ❋
புதுமைகள்நீயறிந்திருந்தும்புத்தியில்லாப்பேதையைப்போல்
புலம்புகின்றாய் ... ... ... ❋
விதிசெயமெல்லாம்படைத்த விதிதனையும்ஒருநாளும் ❋
விடுமோபெண்ணே ... ... ... ❋

வசனம்.

கேளடிபெண்ணேசித்திராங்கதை என்னடி நீயின்னம்பிரம தேவனைநினைத்து அழுகிறாய் அந்தபிரமதேவன்தானே தன்நாவில் என்றென்றும் பிரியாமலிருக்கின்ற சரஸ்வதிதேவியைப்பிரிந்து தே வேந்திரன்சொற்படிக் கொருகாரணமாய்த்திலோத்தமை யென் னொருபெண்ணைச்சிருஷ்டித்துத் தன்மகளென்றும்பாராமல் அவ ள்பேரில் அதிகமையல்கொண்டு தன்னைமருவி யணையச்சொல்லி அனேகநாள் வாதுசெய்த கதையை நீ கேட்டிருந்தும் இன்னம் ஏன் அந்தபிர்மதேவனைநினைந்தழுகிறாய் விதிப்பயனாகப்பட்டது இந்திரன்முதலிய புவனத்தையும் அதிலுண்டாகிய எண்பத்து நான்குலட்சத் தேவராசிகளையுஞ் சிருஷ்டிக்கும் பிர்மதேவனைக் கூட காமவிகாரம் விடமாட்டாது சும்மா என்னைமருவியணையவா டி பெண்ணே என்மையல்தீரடி என்கண்ணே என்கண்மணியே,

சித்திராங்கதைக்கும்-அர்ச்சுனனுக்கும்-வாது-தரு

இ-ம் தோடி- அடதாளம்.

வார்த்தைதக்கனேசும் வகைசொல்கிறாய் — ஈடு
மனிதனும் அல்லாதி மாட்டிறந்திடா — மாடு
பார்த்திபனென்றுன்னைப் பகரலாமோ — சோடு
பார்ப்பானுக்கேசித்தப் பாரில்படும் — பாடு

பட்டவனே-வீடு விட்டவனே — கேடு
கெட்டவனே-காடு சுட்டவனே — சீசீ (போ)

அர்ச்சுனன் சொல்லல்,

ஒத்தித்திரண்டாய் உதாசினம்பேசு — றாய்
ஓ ஓ ஓ என்ன ஒருக்காலிலவிசு — றாய்
எண்ணிப்பாராமல்நீ எதேதோபேசு — றாய்
எரிநெருப்பில்மெழு கிட்டாற்போற்காச்சு — றாய்
எப்படியுமுன்றன்-சொற்படியுன் — மன
தொப்பிடச்செய் துன்றன்கைப்பிடிப்பேன் — இனி (வாரு)

சித்திராங்கதை-புலம்பல்-ரு இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

காசிதேசப்பிராமணசன்னி யாசிவேஷங்கொண்டிருந்தது
காவினில்லோச்செய்தாயோ — தெய்வமே-என்றன்
கற்புநிக்கநீபேசதி சற்பனைசெய்தாயிதென்ன
காரணமோ ஐயோபாவி — தெய்வமே
வேசியைப்போலென்னையிவன் பேசியவார்த்தைக்குண்மனம்
பிகமகிழ்ந்திருந்தாயோ — தெய்வமே-இனது
மேதினியிற்பெண்கள்காம் போதினையப்பாடிநகைக்க
விதித்தாயோ ஐயோபாவி — தெய்வமே

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

தெய்வமேன்செய்யும்பெண்ணே தேசத்திலில்லாவாழ்க்கை
ஓகையினித்தெங்கோவேற்றி சணவனில்லாமல்வீற்றாய்... *
வையகத்தன்னேயாள மணிமுடிதரித்துக்கொண்டாய்... *
நையவேயிவனுக்குத் தருமோசொல்லடியென்கண்ணே

வசனம்,

கேளடிபெண்ணேசித்திராங்கதை என்னடி. இன்னம் தெய் வம் தெய்வமென்று தெய்வத்தைநொந்தழுகிறாய் ஆதியில்நீயொ ரு ராசகுமாரனை விவாகம்பண்ணுகிறதை அந்ததெய்வம் வேண் டாமென்றுசொல்லிற்றோதான் ஆகிலும் பெண்ணாய்ப்பிறந்த வள்புருஷனில்லாமல் பூலோகம் ஆளத்தகுமா சொல்லடிபெண் ணே என்விரகதாபத்தை வெல்லடி கண்ணே,

சித்திராங்கதைக்கும்-அர்ச்சுனனுக்கும்-வாது-ரு
இ-ம் புன்னாகவராளி- அடதாளம்

பிராமணனென்றென்னைப் — போ-சீசீ
பேசினாதேநீநந்தவனத்தைவிட்டப்புறம் போ (பிரா)

பிணைமேயுன்றனுக்கெதிரும் பிராமணசாதி யில்
பெண்ணில்லாமற்சொந்த மண்ணில்லாமல்வந்த (பிராமணு)

அர்ச்சுனன் - சொல்லல்

பெண்ணுனக்கில்லாமல் வே — றில்லை - உன்னைப்
பிரியவென்றுல்லவென்மனம் — வல்லை - அடி
பேதையேகேளென்றன் — சொல்லை - இந்த
பேருலகிலெங்கள் — எல்லை சொந்த
மண்ணித்திராபுரி வாசலன்னமைந்த — றுண்
மைத்துனன்மாவெல்யார் அர்ச்சுனனென்றன்பேர் (ஆசை)

சித்திராங்கதை - சொல்லல்

அர்ச்சுனராசனின் — வேஷம் கொண்டு
யாத்திரைவந்தாலும்பெண் — கோஷம் - இந்த
ஆண்பிள்ளைக்கேனில்லை — ரோஷம் - தந்தை
அறிந்தால்வரும்மெத்த — தோஷம்
அந்தணபிராமணு ஆறில் — இருப்புத்
தானைச்செல்லெறியாது வீணிற்சொற்செறியாது (பிராம)

அர்ச்சுனன் - சொல்லல்

கீறுனைநாயகீசொல் — லாதே உன்றன்
வித்தைகளுபாயம்வெல் — லாதே - என்றன்
விரகத்தின்மாயம்பொல் — லாதே - உன்னை
விட்டாலெனக்காயம்நில் — லாதே - அடி
நாறுமலிருவாய் நந்தவனத்தில் — நல்ல
நாளின்புன்றுகை நாளின்னாகுந் — சொல்ல (ஆசை)

சித்திராங்கதை - விசனப்படுகிற தரு - இ - ம் - பெஹாரி - ஆதிதாளம்,

கற்பகப்பூங்காவனத்தில் எப்படியிவனைச்சில
காலமிருக்கச்சொன்னீரோ — தந்தையே - நல்ல
காசிவேதியன்போல்மாய வேஷங்கொண்டுவரச்சொல்லி
கட்டளையிட்டிருந்தீரோ — தந்தையே
சொற்படிகொளாதபெண்ணைத் திப்படியிவனைக்கொண்டு
சோபனஞ்செய்யச்சொன்னீரோ — தந்தையே - பொல்லாத்
ஆகுபொய்ப்பிரியனேகம் வாதுசெய்கேசிதிராகம்
சொல்கிறுன்பிலாரிராகம் — தந்தையே

அர்ச்சுனன் சித்திராங்கதைக்குச்சொல் - விருத்தம்,

தந்தைபின்செய்வாரித்தத் தாணியையாள்வேனென்றால்
தந்தையிலெண்ணிச்சொல்லாய் சிறுமின்னேக்கேளடியாடாக *

நீயவஞ்சனைசெய்ய வந்தென்மனதிடத்தை ... ... *
நீயழித்திட நினைத்தாய்திருடனென் ... ... ... *
  நெஞ்சத்திறக்க அடிப்பேன்-காற்றிலிலவம் ... ... *
  பஞ்சாய்ப்பறக்க அடிப்பேன் ... ... *
  மிஞ்சிப்பேசும் உன்மூக்கைகழிய அறுப்பதுமல்லாமல் *
  நஞ்சுநஞ்சாயுன்றலைநறுக்கிப்பிழியக்கல்லால் ... (நெஞ்ச)

அர்ச்சுனன்-சொல்லல்.

நறுக்கிநீயெனைப்பிழிந்தாலுந்தானுனைமேற்கொண்ட ... *
வெறிக்குஇன்னமிவ்வுலகினில்மருந்துவேறுண்டோ ... *
முறுக்கியப்படித்திருப்பிமோடிசெய்கின்ற ... *
சிறிக்கியுன்னிடசேயகத்திறமையையறிவேனென்னைச் ... *
  சோரிருப்பதென்னடி-திருப்பிமுகம் ... ... *
  பாராதிருப்பதென்னடி ... ... ... *
  பேரால்நமதுசொந்தப் பின்னைக்குப்பட்டங்கட்ட -*
  பாராய்மோகனாகம் பாடியனையக்கிட்டத் ... ...(சோர)

சித்திராங்கதை - அர்ச்சுனனுக்குச்சொல் விருத்தம்,

திரும்பியுன்முகத்தைப்பார்த்துச் சேர்ந்தணைந்திடுவேனென்று
விரும்பிவந்தெதிரேநின்ற வேறியாவுலக்கிப்போது ... ... *
உருங்கதியறிந்திடாமல் வாயினால்வதறவேண்டாம் ... ... *
கரும்பேயுன்றலையைவெட்டித் தூக்கிடச்சொல்லுவேனே-

வசனம்.

கேளாய் அறிவுகெட்டபிராமணனே நானுன்முகத்தைப்பார்த்து
ப்பேசி உன்னைமருவிடவேனென்று ஆசைகொண்டிருப்பதா
ய்இன்னம் வைகைப்போதிலே வருங்கதியைத்தெரியாமல் மதியய
க்கிக் கெட்டுப்போகவேண்டாம் எனதுதாதிகளைவிட்டு உன்றலை
யைவெட்டிக்கட்டித்தூக்கிப்போடச்சொல்கிறேன்பாரடா.

அர்ச்சுனன் சித்திராங்கதைக்குச்சொல் விருத்தம்.

வெட்டியென்றலையைத்தூக்கி விடச்சொல்வேனென்றாயின்னம் *
அட்டியென்னடியதற்குன் அருகினிலிருக்கமாட்டேன் ... ... *
கெட்டிக்காரிகள்தானென்றுங் கேள்வியுண்டெனக்குமுன்னே- *
கட்டிக்கொண்டணைந்துபொல்லாக் காதலைத்தீராய்பெண்ணே *

வசனம்.

கேளடிபெண்ணே சித்திராங்கதாங்கன்றலையைவெட்டிக்கட்
டித்தூக்கிப்போடச்சொல்லுவேனென்று இன்னம் பொட்டச்சி

மிரட்டுமிரட்டுகிறாய் அதற்கிசைந்தபடிதானமதும் உன்னண்டையிலி ருக்கிற தாதிப்பெண்கள் உன்னைப்பார்க்கிலும் கெட்டிக்காரிகளெ ன்று எனக்குக்கேள்வியுண்டு நல்லதப்படியே ஆகட்டும்தானெக்கட் டியவனாற்று நான்கொண்டகாதலைத்தீர்ப்பாயடிபெண்ணே.

சித்திராங்கதை-தோழிகளுக்குச்சொல்-விருத்தம்.

சதிசெய்தென்னருகில்நின்ற தோழியர்கேளீரென்றன் ... ... ❋
விதிசெய்யும்வாறோ முன்றீ வினையோவந்தவன்சொல்வதை ... ❋
சதிசெய்தானவனைவெட்டித் தலைத்தூக்கச்சொன்னேனென்ன - ❋
அதிசயந்தன்னைக்கட்டியணைத்திடச்சொன்னானம்மா ... ❋

வசனம்.

கேளுங்கள்மந்திரிகளாகிய தாதிகளே என்றலைவிதியோ அல் லது நான்முன்செய்ததீவினையோ என்னுடைய பதிவிரதத்தை ப ழிக்கக்காசிப்பிராமணனைப்போல் மாயவேஷங்கொண்டுவந்தென்னை ச் சதிசெய்யநினைத்தவனாடியென்றும் போடியென்றும் வம்புவா ர்த்தைதப்பேசினவனை மிரட்டி அப்புறத்தையோட்டிவிடுமென்றுநித் தியம் தலையைவெட்டித்தூக்கிப்போடுவேனென்று நான்சொன்ன தற்குத் தன்னைத்தழுவியணையச்சொன்ன அதிசயத்தைக் கேட்டீர் களா.

தாதி-நாயகிக்குச்சொல்-வெண்பா இ-ம்-சங்கராபரணம்.

பத்தியிலேவேண்டாமப்பாலெழுந்துபோவென்றால்... ❋
இத்தலைப்பொத்தலெதியெனச்சொல் - வித்தையிலே ❋
சாதுரியபத்தால் வந்திறையேயின்னமென்ன ... ... ❋
சூத்திரப்பிராமணன்றன் சொல்............................ ❋

வசனம்.

கேளும்இராஜபரமேஸ்வரிநல்லஆச்சரியமிது சாப்பிடுகிறப ந்தியிலே உட்காரவேண்டாமென்று கழுத்தைமடக்கிஅப்புறத்தே தள்ளச்சேஇலைபொத்தல் இலைபொத்தலென்றுசொல்லி வேறேயி லைகொண்டுவாவென்ற சாமர்த்தியமாய் தலையைவெட்டித்தூக்கி ப்போடச்சொல்லுகிறபோது தன்னைத்தழுவி அணையென்றுசொ ன்னபிராமணனுடையசாமர்த்தியமே சாமர்த்தியம் இன்னமெ ன்னபோகுதுநடக்கப்போகுது அறியவேணுமம்மா.

இரண்டாவதுதோழிசொல்-வெண்பா இ-ம்-சங்கராபரணம்.

ஏதிவன்செய்தாலென்ன எதிவனைத்தூக்கொண்டு.... ... ❋
மாதவனோநீங்கள் மதிக்கின்றோம் பாதகனை ... ... ❋

மெல்லியரே நீபிடித்து மேவியெங்கள் கைகொடுத்தால் ... ॥
கொல்லுகிறோம்பார் தலையைக் கொய்து ... ... ... ॥

வசனம்.

கேளும்இராஜபரமேஸ்வரி இவனுடைய துர்மார்க்கம்.செய்யவே ண்டியதென்ன நாங்களெல்லாரும்இவனைச்சுத்திவளைத்துக்கொல்லு கிறோம் நீமெள்ளபிடித்து எங்கள்வசத்துக்கொடுத்துப்போடு ஒருக்ஷண ப்போதில் இவனைச்சிரசாக்கினைச் செய்துப்போடுகிறோம் எங்கள் திறமையைப்பாரும் அம்மா தாயே

அர்ச்சுனன் - சித்திராங்கதைக்குச்சொல் - வெண்பா.

கொக்கின்றலையில்வெண்ணெயைக்கொண்டுபோய்நாங்கள்மெள்ள,
வைக்கிறோம்நீபிடித்து வாவென்ன - டக்குவத்துச்சொல் ... ... ॥
தாதிகளும்நீயும்நல்ல சாமார்த்தியமென்றுசொன்ன ... ॥
சேதிகளும்போச்சே தெரிந்து ... ॥

வசனம்.

கேளும்பெண்ணே சித்திராங்கதை கொக்கின்றலையில்வெண் ணெயைக்கொண்டுபோய்வைத்தால் அந்தவெண்ணெயுருகி அதன்க ண்ணில்விழுந்தக்ஷணம் பிடித்துக்கொள்ளலாமென்று கொக்கு ப்பிடிக்கிறமந்திரஞ்சொல்லுவார்கள் அதற்குச்சரியாய் உன்தாதி கள்சொன்னசாமார்த்தியமும் உன்னுடையசமர்த்தும் இதோவெ ட்டவெளியாய் எல்லாந்தெரிந்துபோச்சு இனிமேலாகிலும் என் னைச்சேர்ந்துஅணையடிபெண்ணே.

சித்திராங்கதைக்கும் - அர்ச்சுனனுக்கும் - வாது தரு

இ - ம் - சங்கராபரணம் - அடதாளம்.

எல்லாந்தெரிந்ததென் றல்லாசமாய்மெத்த
இகழ்ச்சியாய்ப்பேசுறான் — உங்களை - மணம்
இகழ்ச்சியாலேசான் — பெண்களே - இவனைக்
கொல்லாமலிருப்பது பொல்லாதகாரியம்
குடிகெட்டுப்போகுமே — ஐயையோ

அர்ச்சுனன்சொல்லல் - தரு - இ - ம் - ஷை;

குடிகெட்டுப்போகுமென்றடிக்கவோசொல்கிறாய்
கோதையாடிப்பதும் — நோகுமோ - செய்யும்
வாதைகளென்னுயிர்ச் — சாகுமோ
அடிக்கிறேனெனக்கல்வி நொடிக்காதேநான்கொண்ட-
மையலைத்தீரடி. — கண்ணே

சித்திராங்கதை-சொல்லல்,

மைப்பலத்திற்கவே தையலர்கள்காசி
வாங்கிக்கொண்டுவருவார் போடா-என்றன்
பாங்கிமார்களுக்குநீ மீடா அவர்கள்
கையினிலகப்பட்டு ஐயையோவுனக்குப்போங்
காலம்வந்ததடா பிராமணா

அர்ச்சுனன் சொல்லல்,

போங்காலம்வந்ததென் றாங்காரத்தால்மனம்
பொங்கிநீயேசுழி யாதே போடி
தங்கிவாயாலழி யாதே-நின்னும்
மாங்காய்ப்புளித்ததோ வாய்புளித்ததோவென்னும்
வார்த்தைபடிக்கடி பெண்ணே

சித்திராங்கதை-சொல்லல்,

வார்த்தைகளின்னம்வளர்த்தியுன்னைபுயித்த
வாருக்கிளாகொடுப் பேனே-தலை
மூளைச்சிதறஅடிப் பேனே நீர்த்த
யாத்திரைவந்தாலிம் மாத்திரத்தோடின்றுனை
யனுப்புகிறேன் ஓடிப்போ வேதியா

அர்ச்சுனன்-சொல்லல்,

வேதியனல்ல சாதியிற்குருகுல
வேந்தனின்றந்தைக்கிப் போது-இட்ட
சேர்ந்தவுறவிதுவாப் யாது-உள்ள
சேதியையுன்னுடன் செப்பினேனென்றனைச்
சேர்த்தணைத்திடுவாயென் கண்ணே

சித்திராங்கதை-சொல்லல்

சேர்த்தணைத்திடநல்ல வேந்தர்க்குலமென்றும்
செப்பினவார்த்தைகள் மெய்யோ-என்றன்
கற்பழியாதோ ஐயையோ-புகழ்
சார்ந்தகுருகுல வேந்தர்களின்பெயர்
தானென்னமோசொல்லும் பார்ப்போம்

அர்ச்சுனன்-சொல்லல்.

பார்ப்பதென்னபரி யாசமோபஞ்ச
பாண்டவர்தனில்சொல்லு மென்பேர் - புகழ்
நீண்டவில்அர்ச்சுன னென்பேர்-மோசம்

பார்ப்பதும்அன்பனைக் காப்பதும்சங்கரா
பரணாகமென்றன் கண்ணே

## சித்திராங்கதை அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்,

விசயனென்றுரைத்தாய்மாய வேஷிக்கொண்டேவந்தேயிந்த *
திசையெங்குந்திரிந் தபுண்ய தீர்த்தங்கள்ஆடவந்தாய் ... ... *
நிசமல்லஉன்றன் வார்த்தை நிகரிலா அர்ச்சுனன்றன் ... ... ... *
இசைபுஜபலமும்சீரும் எழிலும்நீயியம்புவாயே ... ... ... *

வசனம்.

வாராய்பிராமணசந்நியாசி நல்லகுருகுலவங்கிஷ சிகாமணி யாகிய அர்ச்சுனமகாராஜனென்று சொல்லுகிறாய் நல்லது நீயந்த அர்ச்சுனமகாராஜனென்பது மெய்யானால் பிராமணசந்நியாசிவே ஷங்கொண்டுதீர்த்தயாத்திரைக்குவந்தகாரணமென்ன இப்போது உன்வார்த்தையை நிசமென்று நம்பமாட்டேன் ஆகிலும் அந்த அர்ச்சுனமகாராஜன்அழகையுங்கீர்த்திப்பிரதாபத்தையும் அவர்குல நிசயத்தையும்சொல்லும்பார்ப்போம்.

## அர்ச்சுனன்-தன்வரலாறு-சித்திராங்கதைக்குச்சொல் தரு.

இராகம்-சாவேரி- ஆதிதாளம்.

கேளும்பெண்ணே சித்திராங் கதையே-மதுரை
யாளும்பாண்டியன்பெற்ற சுதையே
நாளும்உலகைவெல்ல நறுமலர்க்கணை வெல்ல
வேளும்இங்கிணையல்லவிளம்பனழகைச்சொல்ல (கேளும்)

வாரணபுரியிந்திரப்பிரஸ்தமே பிரஸ்தம்
மைவந்தியவஸ்திருபுரி க்ஷேத்திரம் நல்ல
வளமிகுந்தஅளகேசன்றனையும் வென்றான்
வழக்கும்பொருளருள்சந் பாத்திரன்-கலை
பூரணச்சந்திரனேநேரான எவராலும்
புகலொணாத்திருமுக குலஸ்திரன்-விற்
புருவமும்பிறைநுதலுருவமும் மிலகிய
புண்டரீகமலர் நேத்திரன்-கலை
ஆரணன்முதற்கல்வி அறிந்தனைக்கும்நன்னேயன்
அபயமென்றடைந்தவர் அனைவர்க்குஞ்சகாயன்
நாரணன்மலர்ப்பாதம்நம்புதினையு பாயன்
நாவில்நட்சத்திரம் மேவுஞ்செங்கனி வாயன்
நவமணியாவி நோதன்-செய்யும்
தவமுயலும்வரப்பிர சாதன்-எழில்

நலமெத்திக்கிணையித்த நலமதி யெனவரும்
புலவர்கள் துதிசெய்யும் பலவித அதிசயம் (கேளும்)

குருமரபினிற்றோன்றிவரும் அரசரென்றெங்கும்
கொண்டாடும்பாண்டு குமாரன்-சொல்லும்
குந்திமாதேவிதன் மைந்தர்க ளைவரில்
கூறும்அழகிய செப்பிரன்-உயர்
தருமராசனுக்கும்வீமசேன னுக்கும்
தம்பிகுணசம்பிரம திரன் இன்னம்
சகாதேவனுக்கும்நகுலனென்பவ னுக்கும்
தமயனர்ச்சுனனென்னும் பேரன்-செந்
திருமருமார்பன் மைத்துனன்நல்லஅனுகூலன்
தேவேந்திரமகாராசன் இந்தித்தருளும்பாலன்
அருமறைமுனிவர்கள் ஆசிர்பெறும்விசாலன்
ஆதிசிவன்றனையும் அன்பாய்ப்பூசைசெய்சீலன்
அழகியமன்மத னுருபன்-ருசி
பழகியஇன்சொற்பிர தாபன்-நல்ல
அற்புதவிற்பனசற்புரு ஷோத்த
பொற்புதுலைமையிலெனும் நற்புதுமைமையினம் (கேளும்)

போருக்குலகினில் யாருக்கும்அடங்காத
புஜபலத்தின்மிகுந்த காளை-செய்த
புண்ணியவசத்தால்திக்கல்வெற்காணக்கிடைத்தான்
போகவொட்டாய் இந்த ஆளை
யாருக்குள்இனியிருப்போருக்கும் அயன்விதிப்
பயன்கூட்டிவைத்ததேயிவ் வேளை-இளம்
பருவத்திற்பயிர்செய்யென்றௌவையுரைத்தமொழி
பழுதுவரப்போகாது நாளை-இன்னம்
தேருக்குளனந்தம் விச்சித்திரங்களுண்டு
சிறுபிள்ளைவிளையாட்டாய்ச் செய்காரியமிரண்டு
நீருக்குள்ளாழத்தை அறியலாங்கோல்கொண்டு
நெஞ்சாழமறிவது கொஞ்சமோநிலைகண்டு
நிகரிலாமதுரைச்செங் கோலை-உன்றன்
மகன்ஆளுவான்இனி மேலே-இது
நிச்சயம்முதலினில்மட்சரேகை பெறும்
அர்ச்சுனன்வைபோகம் சொற்கில்சாவேவிராகம் (கேளும்)

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

கற்பினிலுயர்ந்தசித்திராங் கதையெனுமயிலேகேளாய் ... *
வெற்பினிலுயர்ந்ததோளான் விசயனென்பவனும்நானே *

பொற்பினுக்குவமையித்தப் புவியில்வேறில்லை நல்ல…… *
அற்புதமாகக்கூடி யணைகுவோம்வாராய்பெண்ணே … *

வசனம்.

கேளாய் பதிவிரதத்திற் சிறந்த சித்திராங்கதையென்னும் மயிலே மல்லையப்போலுயர்ந்த புஜபலத்திற் சிறந்த அழகினையுடைய அர்ச்சுனமகாராஜனென்பவனும் நானே இன்னம்யாரோவென்று சந்தேகப்படவேண்டாம் இனி நாமிருவருங்கூடியணையலாம்வாடி பெண்ணே.

சித்திராங்கதை தோழிகளுக்குச்சொல் விருத்தம்.

அணையிளமுலையீரென்றன் தோழியர்கேளீர்ஐற்று - … *
கணைமதன்றன்னைவென்ற காளையர்ச்சுனன்றன்பேரும் … *
இணையிலாஅழகுஞ்சொல்ல எங்கையோகேட்டுவந்திங் … *
கணைகுவோம்வாடியென்று அந்தணனுரைத்தான்பாரீர் … *

வசனம்.

கேளுங்கள் இளமைபொருந்திய இரண்டு ஸ்தனத்தோடேகூடிய தோழிகளே ஐற்புதப்பாளத்தையுடைய மன்மதனமுகைவென்ற அர்ச்சுனன்பெயரையும் அழகையும் புஜபலபராக்கிரமத்தையும் பூலோகத்திலே ஆரோசொல்லக்கேட்டுவந்து நானுன் அர்ச்சுனன் என்னைமருவியணையடியென்று இந்தப்பிராமணன் சொன்ன வார்த்தையைக்கேட்டீர்களா இதற் கென்னசெய்யலாம் பெண்களே.

தாதிகள் சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

சந்நியாசியைப்போல்வேஷம் தான்கொண்டுவருவதுண்டு *
அந்நியானெல்லவென்றின் காலையிட்டுரைப்பதுண்டு … *
கன்னியர்பார்த்துக்கூடிக் கலியாணஞ்செய்தபின்பு…… *
உன்னையார்கண்டதென்ப துலகினிலனேகம்மா … … *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி பூலோகத்திலே சந்நியாசியைப்போல் மாயவேஷங்கொண்டுவருவதுமுண்டு வந்து உங்கள்குலத்திலேபிறந்த பிள்ளையேயொழிய நான்வேறல்லவென்று ஆணையிட்டதுமுண்டு அவாள்வீட்டிலிருக்கிற கன்னிகழியாதப்பெண்களைப்பார்த்து கலியாணஞ்செய்து அந்தப்பெண்ணைச்சேர்ந்து தன் அக்கரைதீர்ந்தபின்பு உன்னையார்கண்டார்களென்று வேறேவேஷமெடுத்துக்கொண்டு ஓடிப்போவது இந்தஉலகத்தில் விஸ்தாரம் ஆகையால் இவனைநம்பக்கூடாதம்மணி

அர்ச்சுனன்-தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

நம்பவுங்கூடாதென்று ஞாயங்கொண் டுரைப்பார்போல்வீண்
சம்பங்களாய்த்தடுக்குத் தள்ளியிங்கிருந் தமெத்த- ... *
கும்பலுங்கூடிக்கொண்டு குடிகளைக்கெடுக்கவாயால் ... *
வம்புகள்பேசுந்தாதி மார்களுங்களைப்போலுண்டோ ... *

வசனம்.

கேளுங்களடி தாதிப்பெண்களே இந்த சித்திராங்கதை உங்களுடனே சொல்லிக்கொண்ட வார்த்தைக்கு நல்லஞாயங்கொண்டு சொன்னீர்களல்லவா இதற்குத்தானு வீண்ஜம்பங்கள் அடித்துத் தடுக்குத்தள்ளிக்கொண்டு மெத்தக்கும்பல்கூடி குடியைக்கெடுக்க நாள்தோறும் வம்புவார்த்தைபேசுந்தாதிகள் உங்களைப்போலிந்த பூலோகத்திலுண்டா-ஆ-ஆ-ஆ-நன்றாயிருக்குது.

தாதிகளுக்கும்-அர்ச்சுனனுக்கும்-வாது-தரு

இ-ம்-மோகனம்-அடதாளம்.

உண்டோவென்றுரைத்தெங்கள் உத்தமிதன்னைநீ ... *
பெண்டாளவந்தாயே பிராமணாபோபோ ... ... *

அர்ச்சுனன்சொல்-தரு-இ-டை.

பெண்டாளவந்தது பிழையோவுங்களைக்கூட ... ... *
கொண்டாளவும்வந்த கொற்றவன்றானே............ *

தோழிகள்-சொல்லல்

கொற்றவனாமென்று கூறிக்கைநீட்டியே... ... *
மெத்தவும்பேசாதே வேதியாபோபோ ... ... *

அர்ச்சுனன்-சொல்லல்.

வேதியாபோவென்று விளம்பவேண்டாஞ்சொன்னேன்
ஆதியாங்குருகுல அர்ச்சுனன்றானே ... ... ... *

தோழிகள்- சொல்லல்,

அர்ச்சுனன்நீயானால் யாத்திரைபுறப்பட்டு ... ... *
தற்சுரூபம்விட்டுச் சந்நியாசியானாய் ... ... ... *

அர்ச்சுனன்- சொல்லல்

சந்நியாசியாய்நதி ஸ்நானந்தனிலே ... ... ... *
கன்னியாஸ்திரீகள் கண்டாடவல்லோ ... ... *

தோழிகள்-சொல்லல்,

கன்னியாஸ்திரீகள் கண்டாடினுனைக் ... ... *
சென்றுபல்லரும் இப்பவாப்பார்ப்போம்... ... *

அர்ச்சுனன் சொல்லல்,

பலனெண்ணமதுரையில் பாண்டியன்றனக்குப்பின் *
குலம்விளங்கப்பாலன் கொடுக்கவந்தேனே ... ...*

தாதிகள்-அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்,

பாலன்போதுருவெடுத்துப் பதிவிரதங்களென்னும் ......*
சீலங்கொண்டிருக்குமெங்கள் சித்திராங்கதைத்தாயிந்த ...*
ஞாலங்கள் ஆள்வேனென்றுநவமணிமகுடஞ்சூட்டி... [யே
கோலங்கொண்டவட்குவேறோர் குழந்தையேன்வுரைசெய்வா

வசனம்.

கேளாய்பிராமணசந்நியாசியே புருஷவேஷங்கொண்டு பதி
விரதமென்னும்சீலத்தை நிலைநிறுத்தவேண்டியிருக்கும் எங்கள் சி
த்திராங்கதைஅம்மையே இந்தபூலோகமுழுதும் அரசாள்வேனெ
ன்றுமகுடாபிஷேகஞ் செய்துக்கொண்டு உலகையாளும் அழகை
க்கண்டு மகிழ்ச்சியடைந்திருக்கின்ற பாண்டியமகாராஜனுக்கு வே
றேகுழந்தைவேண்டியதென்ன வீண்பேச்சுப் பேசவேண்டாம்
அப்புறம்போம் பிராமணசந்நியாசியே

அர்ச்சுனன்-தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

குழந்தையேனென்றீர்மெள்ளக் குந்திறல்முழங்காற்பற்றி
எழுந்திருக்கின்றபெண்களிவ்வுலகாளலாமா ... ... *
தழைத்தபுத்திரர்களில்லாச் சம்பத்தேனென்றுரைத்தோர் *
மொழிந்தவாசகங்கேளாதீர் மூடிகள்நீங்கள்தாமே ... *

வசனம்.

கேளுங்களடி பாண்டியன்குடியை மாளவைக்கவந்த மந்தி
ரிகளான தாதிப்பெண்களே உட்கார்ந்தால் முழங்காலைப்பிடித்து
க்கொண்டு எழுந்திருக்கும் பெண்ணாய்ப்பிறந்தவள் இந்த பூலோ
கத்தையாளத்தகுமா மேலும் மக்களில்லாவாழ்வு எவ்வாழ்வெ
ன்று பெரியோர்கள் சொன்னவார்த்தையைக் காதிலேயுங் கேட்
டறியாத தீர்மூடிகளென்பதும் நீங்களே இதற்குச்சந்தேகமில்லை
போங்களடி பயித்தியக்காரிகளே.

சித்திராங்கதை-தாதிகளுக்குச்சொல்-தரு.

இ-ம்-பைரவி-அடதாளம்.

தீர்மூடிகளென்று ... நிந்தைகடுங்கிறான்
நிட்சயமாகநான் ... ... அர்ச்சுனனென்கிறான்
கர்மத்திறல்நம்மை ... கண்டுமயங்கிறான்
காமங்கொண்டேபோருக் காலிலேன்பொங்கிறான்

குழுமாத்திரிவில்மாட்டக் ... களவுகண்டுழைக்கிறீர்
கண்டபடிபேபேசிக் கொண்டுவாய்ப்புழுக்கிறீர்
கள்ளிகளைதடுக்குந் தள்ளிகளைசித்திரக் ... *
குள்ளிகளைவாய்க் கொள்ளிகளைசிச்சீ ... (போங்களடி.)

சித்திராங்கதைசொல்-தரு.

கள்ளிகளென்று ... ... கடூரமாய்க்காய்கிறான்
காமங்கொண்டொருக்காலே கவிழ்த்துதான்விள்ளுறான்
கொள்ளிகளென்றுசொற் ... கூறியங்கேகிறான்
கொண்டுவிட்டுப்போன பெண்டெனப்பேசுறான்
கூறுங்கடிமனம் தேறுங்கடிகோபம் ... *
ஆறுங்கடிமகிழ் பீறுங்கடியடி ... (ஆரடிமாதிகளோ)

அர்ச்சுனன்சொல்-தரு.

சேதிகளெல்லாந் ... தெரியப்படிக்கிறேன்
சடனத்திற்கலியாணஞ் செய்துமுடிக்கிறேன்
காதிகளைக்கூடத் ... தலைடையிலடிக்கிறேன்
தையலேயுன்னையும் ... கைகயைப்பிடிக்கிறேன்
அள்ளவேண்டாம்மெத்த தள்ளவேண்டாம்பங்கம்
கொள்ளவேண்டாம் வாயால் வெல்லவேண்டாம்சிச்சீ

முதல்தோழிசொல்-விருத்தம்.

கையையும்பிடித்துச்சித்திராங்கதையையுன்றனைக்கலியாணம்
செய்யவும்வந்தேனென்றசேதியையெண்ணிப்பார்த்தால் *
ஐவரிலொருவனான அர்ச்சுனனிவனேயம்மா ... ... *
வையவும்போமோவம்மா மறையவனல்லவம்மா ... ... *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி இவனைநாம்திட்டி மிரட்டினது
க்கு எவ்வளவும்பயப்படாமல் எதிரேநின்றுக்கொண்டு நம்மைநா
லுவிதவித்தியாசமாய்ப்பேசினதுமல்லாமல் கையைப்பிடிக்கிறே
னென்றுங்கட்டியணைகிறேனென்றும் கலியாணஞ்செய்கிறேனெ
ன்றும் இவன்சொல்லுகிறதை ஆலோசனை செய்துபார்த்தால் அ
ந்தஅர்ச்சுனமகாராசனென்பதற்கு யாதொருசந்தேகமுமில்லை இ
னிநாம்திட்டிமிரட்டினால் மோசம்வரும்போலேகாணுதம்மணி.

இரண்டாவது-தோழிசொல்-விருத்தம்

ஆமிதுமெய்தானம்மா அந்தணனிவனேயானால் ... *
நாமிதுவரைக் குழல்லேனர் நவிச்சதுர்விதங்களென்னுஞ் *

சாமபேதங்கள்தான தண்டனைக்கஞ்சிடாரே ... ... *
காமவேதனையால்வந்து காளையர்ச்சுனனென்றுணம்மா ... *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி இவன் பிராமண சந்நியாசியா
ருல் நம்மைக்கண்டு மோகித்து தழுவுதல் இதுவரைக்கும்பெரியோ
ர்கள்சொல்லப்படாதின்ற இராஜநீதிமுறைதமை வழுவாமல்செய்த
சாம-பேத தான-தண்டமென்னும் சதுர்வித உபாயதந்திரங்களு
க்குப் பயந்தோடிப்போகாமல் எதிர்வார்த்தைப்பேசுவானோபே
சமாட்டானே ஆகையால் இனி அர்ச்சுனமகாராச னென்பதற்கு
எவ்வளவுஞ்சந்தேகமில்லை அம்மணி,

சித்திராங்கதை-தோழிகளுக்குச்சொல்-விருத்தம்

அர்ச்சுனனென்றநம்மா லறியமாட்டாமற்சொன்ன ... *
அற்சனவார்த்தையென்றன் தோழிகள்நாமெல்லோரும் *
சற்சன்னபயபத்தியாய்ச் சாஷ்டாங்கதண்டஞ்செய்து ... *
தற்சுரூபத்தைக்கொண்டு தான்வரச்சொல்லுவோமே ... *

வசனம்.

கேளுங்கள்நற்றோழிமாரே நாம்அர்ச்சுனமகாராச னென்ற
றியாமல் துற்பாஷையால் திட்டிமிரட்டிச் செய்தகுற்றம்நீங்கும்
படியாய் அவர்பாதத்திலேயிருந்த சற்சன்னிய பயபத்தியுடனே
சாஷ்டாங்கமாகத் தண்டஞ்செய்வதுமன்றியில் அவர் தற்சுரூபத்
தைக்காண்பிக்கச்சொல்லுவோம் தோழிமார்களே

சித்திராங்கதை-அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்.

சந்தனவனத்திலின்னஞ் சன்னியாசியனந்தம்பேர்கள் ... *
வந்தவரவரில்நீரோர் மறையவரென்றுநாங்கள் ... [ம்
நிந்தையாய்த்திட்டிப்போட்டோம் நிசமதை யறியமாட்டோ
சிந்தையிற்பொறுப்பதல்லால் திருவுருகாட்டலாமே ... *

வசனம்.

இந்தசுற்பகவனத்திலே அனந்தம் பிராமண சந்நியாசிகள்வ
ந்திறங்கிருந்தவர்களில் நீரும் அவரிலொருவராய்இருந்து எங்கள்
பேரில் மோகித்து வாது செய்தபடியினாலே நாங்க ளும்மைத்துர்
பாஷையாய்த்திட்டி மிரட்டினோம் இந்தப்பிழைபொறுத்து இனி
மேலாகிலும் உமது திருவுருதரிசனங்காட்டலாகுஞ்சுவாமி.

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

காட்டலாமென்றசித்திராங் கதையெனுமயிலேபெண்கள் *
நீட்டலாமதிலேவன்வார்த்தை நிசமெனுஞ்சயமாத்தை ... *

நாட்டலாமென்றங்கூடி நாயிருவருமாலை ... *
சூட்டலாமென்றுல்லென்றன் சுருபத்தைக் காண்பிப்பேனே.

வசனம்.

கேளாய்எனதுசுருபத்தைக்காட்டலாமென்றுசொல்லுஞ் சித்
திராங்கதையேயுனதுமயிலேயெனவே மாதிகள்நீயுமென்னைக்கண்
டாகையால் அவசியமென்று நம்மைக்கூப்பிட்டு இனி நாமிருவரும்
இந்தகற்பகவனத்திலே காந்தர்வ விவாகஞ்செய்து மாலையணிந்து
சயமரம்நாட்டிமாலைசூட்டலாமென்று நம்மைக்கேட்கிறாய் சொன்னா
யேயானால் எனது சுருபத்தைக்காண்பிப்பேன் அடிப்பெண்ணே.

சித்திராங்கதை-அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்.

காண்பிப்பேனென்றீர் அந்தக் காண்டீபர்ச்சுனனல்லாமல் - *
தீண்பிறப்புகளில்வேறோர் அழகெங்கேயுண்டுசொல்லும் *
வீண்பிறப்பானபேரை விரும்பமாட்டேனிந்த... ... *
தென்புவிபதியச்சொன்னேன் இருவொன்றும் இல்லையையா

வசனம்.

கேளும் நாமிருவரும் காந்தருவவிவாகஞ்செய்து கூடிக்க
லியாணஞ்செய்வது நிட்சயமென்றாலும் தற்சுருபம் காண்பிப்
பேனென்றுசொல்லினீர் இந்த பூலோகத்தில் அந்த அருச்சுனமகா
ராசனுக்கு நிகரான அழகு மற்றொருவருக்கும் இல்லையென்றுசொல்ல
எனக்குக்கேள்வியுண்டு அப்படியிருக்க வீண்பிறப்பானபேர்களை
நான்விரும்பி மாலைசூட்டுவதெவ்விதம் இதோ ஆகாயம்பூமியறிய
ச்சொல்லுகிறேன் அந்த அர்ச்சுனமகாராசனே புருஷன் நானே
பெண்சாதி இதற்கொருநிருஇல்லை சுவாமி.

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

இருஇல்லையென்றுசொன்ன சித்திராங்கதையே நான்போய் *
வருகிறேனைகாரொருநாழிக்குள் மறையவன்வேஷமாறி ... *
தருகிறேன்தற்சுருபந் தரிசனைமுதலாயின்னும் ... ... *
அருகினிலிருக்கும்மாதர் அனைவரும்அறியத்தானே ... ... *

வசனம்.

கேளாயென்னைச்சேர்ந்தணைந்து இருக்கலியாணஞ்செய்வ
திருயாதொருதடையுமில்லையென்றுசொன்னசித்திராங்கதையே
ன்னுடைகண்மணி இதோ நான் இந்தப்பிராமணவேஷமாறி தற்சுரு
பம்எடுத்துக்கொண்டுவருகிறேன் உத்தனக்குமுகதரிசனை முதலா

கிய இவ்பசுரூபத்தருகிறேன் நீயும் உனதுதாதிகளும் அறியப்பாரடிபெண்ணே.

பொது விருத்தம்.

அருமறையவல்போல்வந்த அர்ச்சுனன்தற்சுரூபம் *
வருமுறையாதிமூல மந்திரமுச்சரித்து ... ... *
உருமறைந்திட்டபோது ஒண்டொடிமாதைக்கூவி- *
திருமகள்நிகராய்வந்த சித்திராங்கதைசொல்வாளே - *

வசனம்.

இவ்விதமாக பிராமணசந்நியாசிவேஷங்கொண்டிருந்த அர்ச்சுனமகாராசன் தற்சுரூபம்வரும்படியாய் ஆதிமூல மந்திரத்தைத்தியானம்பண்ணி மாயசுரூபத்தைமறைத்தபோது எதிரேநின்றிருந்தசித்திராங்கதைமெத்தவும்பயப்பிராந்தியடைந்தவளாய் தன்தாதிகளுடனே சொல்லுகிறவிதங்காண்க

சித்திராங்கதைசொல்-தரு-இம் காம்போதி அடதாளம்.

ஆஆஆஇந்தஆச்சரியங்காணேன் தாதிமாரே-காதி
அந்தணனுருவதெந்தவழிபோனார் தாதிமாரே

தாதிகள்சொல்-தரு-இ-ம்டை

ஓஓஓநாங்களொருவரும்அறியோம் சித்திராங்கதையே - எங்கே
ஓடிப்போனாலும்நான் தேடிப்பிடிப்போம்சித்திராங்கதையே
சித்திராங்கதை-சொல்லல்
தேடிப்பிடிக்கவுந்திருடனோகள்ளனோ தோழிமாரே-நல்ல
திருவுருவங்கொண்டுவருகிறேனென்றாரே தாதிமாரே
தாதிகள்-சொல்லல். [தையே-போன
வருகிறேனென்றுசொன்னவார்த்தையென்றல்லால் சித்திராங்க
வழிதெரியாதிந்தவிழிதிருந்தென்ன சித்திராங்கதையே
சித்திராங்கதை-சொல்லல்.
வழிதெரிந்தாலோடிமறித்துக்கொள்ளலாமடி தாதிமாரே-என்ன
வார்த்தைசொன்னீர்அபகீர்த்திக்காளானேனே-தாதிமாரே
தாதிகள்-சொல்லல். [கொண்ட
அபகீர்த்திக்காளாகிஅவரைத்திட்டினதால் - சித்திராங்கதையே-
ஆசையாலேசும்மாபேசலாமம்மா சித்திராங்கதையே
சித்திராங்கதை-சொல்லல்.
பேசலாமென்றுசொல்லப்பிராமணன்அவரல்ல தாதிமாரே-செய்த
பிழைபொறுத்தவரினியழைத்தாலும்வருவாரோ - தாதிமாரே

தாதிகள் சொல்லல். [யே-நம்மால்
அழைத்தாலும்வரமாட்டார் அர்ச்சுனனென்றால்சித்திராங் - கதை
அறியாமற்செய்தகுற்றம்அனந்தமுண்டம்மா - சித்திராங்கதை

சித்திராங்கதை தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

தாதியர்கேளீரின்று தழைத்தபூஞ்சோலைதன்னில்... *
வேதியனாகவந்த விசயனென்பவனைக்கண்டோம்...... *
நீதிசேரரசுங்கற்பும் நிலைகுலைந்தழிந்துபோச்சு...... *
ஆதியிற்றாதைசொன்ன அநுபோகமுடிந்ததம்மா - *

வசனம்.

கேளுங்கள் என்தாதிமார்களே இந்தநந்தவனத்தில் பிராம்மணசந்நியாசிவேஷங்கொண்டுவந் தென்னுடன்வாதுசெய்தபிறகு நான் அர்ச்சுனமகாராசன்இதோ நற்சுரூபங்காண்பிக்கிறேனென்று இருந்தவர்போனவழிதெரியவில்லை எனதுஇராச்சியபாரமும் பதிவிரதாதருமமும் நிலைகுலைந்து அழிந்துப்போச்சுது இதையெண்ணிப்பார்க்குமளவில் ஆதியில் எனதுதந்தையாகிய பாண்டியமகாராஜன்சொன்ன அநுபோகம் இன்று சரியாய்முடிந்தது இனியென்னவிபரீதமுடியுமோ அறியமாட்டேன்தோழிகளே.

தோழிகள்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

என்னமுன்னுக்குவாரா தென்பதைக்கேட்டிருந்தும்... ... ...*
மன்னரசாட்சிசெய்ய மணவனில்லாமல்நாமே ... ... *
பெண்ணிளவரசுசெய்து பிடித்தவர்க்கெல்லாப்பெண்டாய் ... *
கண்ணின்முன்கண்டோமிந்தக் காட்சியையென்னசெய்வோம் *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி எண்ணம் முன்னுக்குவராதென்று உலகத்தில் சொல்வதைக்காதிலேகேட்டிருந்தும் இந்தப்பூலோகம் அரசாள ஒருபுருஷனையும் விவாகம்பண்ணிக்கொள்ளாமல் சிறுபிள்ளைவிளையாட்டாய்நாமே இராச்சியபாரம் பண்ணினபடியினாலேகண்டவர்க்கெல்லாம் பெண்டென்றுசொல்லுங் கண்காட்சியை இப்பொழுதே திஷ்டாந்திரமாய்க்கண்ணிற்கண்டோம் இனியென்னசெய்வோம் அம்மணி.

தோழிகள்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

காட்சியென்றுரைக்கவேண்டாம் கலியாணஞ் செய்துக்கோ
நாட்சியொன்றில்லையந்தத் தனஞ்சயன் தன்னைக்கூடி [ண்டால்

ஜோதியோடிலங்கியாள அருமைமைத்தரையும்பெற்று ... *
ஜோதியாய்மகுடஞ்சூட்டிச் சுகமனுபவிக்கலாமே ... ... *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி இப்பொழுதிந்தக் கண்காட்சியைக்கண்டோமென்று விசாரப்படவேண்டியதில்லை இனிமேலாகிலும் அந்தஅர்ச்சுனமகாராசனை விவாகம்பண்ணிக்கொண்டால் அதனுக்ஒருதாட்சியும் வரப்போகிறதில்லை இந்தமதுரைப்பட்டணம் அரசாளும்படியாய் மக்களையும்பெற்று மகுடாபிஷேகமுஞ்சூட்டிவைத்து நாமும் திவ்விய சம்போகத்தை அனுபவித்திருக்கலாம்அம்மணி.

பொது-அகவல்-இ-ம்-மத்தியமாவதி.

இவ்விதமாக எண்ணங்கொண்டவளாய் ... ... *
செவ்வியிலிருந்த சித்திராங்கதைதன் ... ... *
தாதிகளுடனே தழைத்திருவனத்தில் ... ... *
சேதிகள்பலவும் செப்பியங்கிருக்க ... ... *
மறையவன்வேஷ மாற்றியர்ச்சுனனும் ... ... *
முறையினல்கிருஷ்ண மூர்த்தியைநினைத்து ... ... *
வேதவியாசர் விளம்பியமந்திரம் ... ... *
ஓதவும்முன்போல் உருவமதாகி ... ... ... *
செகதாபிருக்கும் செவியிற்குண்டலமும் ... ... *
வாகைசேர்செங்கனி வாயும்வெண்டரள ... ... *
பல்லுகளொளிவும் பளபளபளென ... ... *
சொல்லுகள்மதுர சுவையினுந்தொழுக ... ... *
கலைமதிமுகமும் கமலநேத்திரமும் ... ... *
சிலைநுதற்புருவமும் திகழ்குமிழ்மூக்கும்... ... *
பொற்பினிலுயர்ந்த புசநிதிகளும் ... *
விருப்பங்கொளொளியும் வீசவேமார்பில் ... *
மரகதவைடூரிய மணிவடமசைய ... ... *
உரசாத்திணங்களும் ஒளிமிகவீச ... ... ... *
இடையினிற்கச்சை இறுக்கியதுக்கும் - ... ... *
இடையிரண்டினிலும் சொருகுடனே ... ... *
மெய்யெழில்கண்ட வேசிபயந்தோட ... ... *
கையினிலில்வில்லும் கமலபொற்பாதமும்... ... *
தண்டைவெண்டையமும் சதங்கையும்வீர ... *
கண்டாமணியும் கலகலவென ... ... ... *
விரிசலிர்வீசும் மெய்த்திலதங்கி... ... ... *

சரிகைவஸ்திரங்களும் தகதகதவென ... ✻
வாகைசேர் துளப மாலையுமச்ச ... ... ...✻
ரேகையுமுதகில் திகதிகதிகென ... ... ...✻
நாவினிவிலங்கும் நட்சத்திரமுடன்பூங் ... ...✻
காவிலவந்துதித்த கதிரவனென்ன ... ...✻
அர்ச்சுனராஜன் அரிவையர்முன்னே ... ✻
நற்சொருபங்கொண்டு நாளுதித்தனனே ... ✻

அர்ச்சுனன்-நற்சொருபங்கொண்டுவருகிற-தரு-

இ-ம்-கலியாணி அடதாளம்.

பல்லவி.

அர்ச்சுனமகாராஜன் நற்சொருபப்பிரகாசன் ✻
ஆகியிதோவந்தான் ✻

அநுபல்லவி,

சற்சனர்க்கனுகூலன் தரணிபுகழ் விசலான்
துர்ச்சனர்க்குலகாலன் சூரியதியருள் பாலன்
சுந்தரமிலங்கிய செந்திரு மலர
விந்தபதத்தினை அந்தியகலும் நினை
சிந்தையாவிட நல்ல மதியாயிந்தி நந்த
அதிபருந்தருமபு பதிதன் னுடன்பி றந்த(அர்ச்சுன)

சரணங்கள்,

சித்திரப்பிறையிரண்டும் தரித்தவுச்சிக்கொண்டையும்
செகதாபிருச்ச மின்னவே-செந்
தினகரனுதயம்போல் கனமணிகுண்டலம்
செவியிரண்டிலுந் துன்னவே
பருத்தபுஜகிர்த்திகள் திருத்தருடன்மணி
தீபம்போற்பிரகாச மின்னவே-இந்த
பாரெங்கும்விலைகொள்ளும் ஆங்கனுடன்மார்பில்
பதக்கம்பளப ளென்னவே-செங்
கரத்திற்சொருப்புவிர்பூஞ் சினைகைக்கண்டவரும்
காமனும்அழகினைக் கண்டொளித்துவெருவ
வரத்திலேலவந்து தரித்தமன்னைப் பருவ
மாதுசித்திராங்கதையும் காதல்கொண்டு மருவ
மையல்மீறிமதிமயங்கிஅரு கிருந்த
தையல்மாருந்துதி செய்துமிக வுருந்த
மங்கையர்தங்கள் அலங்கிருத குங்குமை

கொங்கையிரண்டும் நெருங்க — புயங்களின்
மருமலர்மாலை — வாட ஐந்
தருமலர்ச்சோலையிற் — கூட-செந்
திருநிகர்பெண்களுந் — தேட-கந்
திருவம்மகிழ்நிலை — நாட-வந்த
மருத்துவமென்னென்று — மிருத்தருநிவர்சொல்ல
செகத்திலத்தனைரும் அகற்றிவந்திடும் — நல்ல (அர்ச்சு)

## பொது விருத்தம்.

அதித்தனுதயமென்ன அர்ச்சனன்றற்சுரூபம் ... ... *
சோதிச்சித்திராங்கதைக்குத் தோற்றமெய்ம் மறந்துசோர்ந்து
வதித்தனைப்பிரகாசம் என்றவள் அருகிருந்த ... *
தாதிக்கூட்டங்களெல்லாந் தலைகுனிந்துரைசெய்வாரே ... *

## வசனம்.

அசோதெப்படியென்றால் இவ்விதமாக சூரியபகவானுதயமானதுபோல்அர்ச்சுனமகாராசன்தற்சுரூபங்கொண்டுநின்றசோதியைச் சித்திராங்கதை தன்கண்ணிற்கண்டு அதிகமையல்மீறி மெய்ம்மறந்து உயிர்ச்சோர்ந்து மூர்ச்சையடைந்தவளாய் பூமியில்விழுந்து அவள்பக்கத்திலேயிருந்த தாதிக்கூட்டங்கள் எல்லோரும் இந்தப்பிரகாசத்தின்எதிரில் கண்களைவிழிக்கமாட்டாமல் தலையைக்குனிந்துக்கொண்டு சொல்லுகிறவிதங்காண்க.

## முதல்தோழி மற்றதோழிகளுக்குச்சொல்-விருத்தம்.

பெண்ணினல்லாரேஇந்தப் பேரொளிதன்னைக்காணக் ... ......*
கண்ணினாயிரம்வேணும்சித்திராங் கதையுமெய்ம்மறந்துவாடி ...*
மண்ணினிற்சோர்ந்துவீழ்ந்த மாதினியொழுங்கபேச ... *
எண்ணிநம்மாலேயான எதுவைச்செய்வோம்வாரீர் ... *

## வசனம்.

கேளுங்களடிபெண்களே இந்த அர்ச்சுனமகாராஜன் அதிரூபசவுந்தரியங்களைப்பார்க்க நமதுகண்கள்போதுமா போதாதே இன்னம் அனந்தங்கண்கள்வேணுமே அப்படியிருக்க இதோ சித்திராங்கதையம்மையும் இவர்அழகைப்பார்த்து அதிகமையல்கொண்டு மெய்ம்மறந்து பூமியிலேவிழுந்தாளே விழுந்தவள் பேசும்படியாய் நம்மாலானவுதவைசெய்வோம் அம்மமாரே.

## இரண்டாவதுதோழிசொல்-விருத்தம்.

எதிரிநம்மாற்செய்யும் இனமொன்றுங்காணேமித்த ... *
மாதினைஎடுத்துமெத்தமடியிலுட்காரவைத்து ..., ...*

மேனிதனில்வளர்த்தி மெய்யெங்குந்துடைத்துவீசி ... ⁕
காதினிற்சக்குசேர்த்துக் கனைதெளிந்திடச்செய்வோமே - ⁕

வசனம்

கேளுங்களடி பெண்களே;இனி நம்மாற்செய்யும் எண்ணம் என்னஇருக்குது இந்தசித்திராங்கதையம்மனை மெள்ளஎடுத்துமார்போடணைத்து மடிமேல்உட்காரவைத்துக்கொண்டு அழைத்துப்பார்ப்போம் அதினாலேயும் கனைதெளிந்து பேசாம லிருந்தால் இந்தகற்பகவிருட்சத்தின் நிழலிலே சுகந்த புஷ்பங்களைப்பரப்பி அதின்பேரில்வளர்த்தி சரீரமெங்குந்துடைத்து குளிர்ச்சி பொருந்திய விசிறிகளால்வீசி காதிலேசக்குவைத்து வாயினால்ஊதினமானால் இந்தக்காமக்கனை தெளியுமடி பெண்களே.

பொது-விருத்தம்.

பாங்கிமாரவர்கள்செய்த பக்குவங்களினால்மூர்ச்சை ... ⁕
நீங்கிசித்திராங்கதைக்கு நினைவுவந்தெழுந்து பொற்பின் ... ⁕
வீங்குதோள்மார்பன்தன்னை வென்றஅர்ச்சுனனைப்பார்த்து
தாங்கியேவெட்கத்தோடுந் தாணியைப்பார்த்துச்சொல்வாள்

வசனம்.

இவ்விதமாகத் தோழிமார்கள்செய்த நானாவிதபக்குவத்தினாலே சித்திராங்கதை மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து அழகிலேமன்மதனைவென்ற அர்ச்சுனமகாராஜனைப்பார்த்து வெட்கங்கொண்டு பூமியைப்பார்த்துச்சொல்லுகிறவிதங்காண்க.

சித்திராங்கதை தோழிகளுக்குச்சொல்-கலிப்பா.

காமனோகமலமலர்க் கண்ணனோ கலைநிறைந்த ... ⁕
சோமனோயிந்திரனோ சுப்பிரமணியன்றானோ ... ⁕
வீமனுக்கிளையதம்பி விஜயன்றன் அழகைப்பார்க்க - ⁕
நாமனைவோரும்படைத்த நயனமின்னம்போதாதே ⁕

வசனம்.

கேளுங்களடி தோழிமார்களே இதென்ன நமக்கெதிரேநிற்கின்றசோதிப்பிரகாசமான புருஷன்மன்மதனோ மகாவிஷ்ணுவோ சந்திரனோ அல்லது தேவேந்திரனோ - சுப்பிரமணியசுவாமியோ- புசத்தில்யிருந்தவீமனுக்கு இளையதம்பியாகிய இந்த அர்ச்சுனமகாராசன் அதிரூபசவுந்தரியங்களைப்பார்க்க நமது கண்கள்போதுமா இன்னம் அனேககண்களும்வேணுமே இவரழகைப்பார்க்க.

# சித்திராங்கதைவிலாசம்

சித்திராங்கதை-தாதிகளுக்குச்சொல் தரு.

இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

காணஅனந்தங்கள் ... கண்ணே-வேணும்நமது
கண்கள்போதுமோபெண் ... கண்ணே

அநுபல்லவி.

ஆனைமுகிற்சொல்லும்பிரமனையீன்ற சம்பிர
அதிரூபவர்ச்சுனமக ராசன்
எதிர்சேர்வைத்திருக்கும்பிர ... காசன் (காணஅனந்)

சரணங்கள்.

கலைமதிமுகத் ... ... தெளிவை-அயிலைவென்ற
கமலக்கண்களி ... னொளிவை
சிலைநுதற்பருவத்தைச்சிகழிளம் பருவத்தை
செவிதங்கியமணிகுண்ட ... லங்களை
புவியெங்கணும்விலைகொண்ட ...கலன்களை (காண அனந்)

மல்லாடுந்திடத்தோள் ... களை விளங்குமணி
மார்படைமலர்பொற்றாள் ... களை
வில்லெடுத்துச்செங்கையைவேளைப்பழித்த-மெய்யை
மிளிர்சங்குகள்மேவுமூன்று ... டையை
களிறென்னவுலாவுநன்னை ... டையை (காண அனந்)

கண்ணினிற்கண்டால்விடு ... வாரோ-மங்கையர்தங்கள்
கணவர்கள்கைக்குட்பட ... வாரோ
எண்ணிப்பார்த்துப்பெண்தோஷிம்எச்சோத்தனைவேஷம்
எடுத்தெங்குந்திரிந்திந்தமலர் ... வனம்
அடுத்திக்குவத்தலன்றாருந்தனி ... சனம் (காண அனந்)

சித்திராங்கதை-தோழிகளுக்குச்சொல்-விருத்தம்

தையல்மார்களேமயக்கும் தனுர்செயன் அழகைக்கண்டு - *
மையல்மீறினதாற்றோழி மார்களேமதன் அம்பென்றன் ... *
மெய்யெலாந்துளைத்துக்கொங்கைமேலும்பட்டுருகுதென்னை
செய்யலாமிந்தக்காமந் தீரவோர்மருந்து சொல்வீர் ... ... *

வசனம்,

கேளுங்களடி யென்னுடைய தோழிமார்களே நல்ல பதிவிரதைபத்தினிகள் முதல் மற்றப் பெண்கள் அனைவரையும் மயக்கச்செய்யுமித்த அர்ச்சுன மகாராஜன் திவ்விய ரூபத்தைக் கண்டேன் எனக்கு அதிகமையல் மீறி சரீரமெல்லாம் மன்மதபாணம்பட்டுத் துளைப்பதும் அல்லாமல் ஸ்தன்னியத்துக்கு நடுவே வந்தது உருகிப்போகுதே இதற்கு என்ன செய்யலாம் காமவேதனைதீர ஒருமருந்து சொல்லுங்களடியம்மா என்னுடைய மந்திரிகளான தோழிப்பெண்களே.

முதல்தோழி-சித்திராங்கதைக்குச்சொல் விருத்தம்,

ஊதுபோய்மத்தளத்தோ டோலமிட்டமுதபேச்சாய்... *
விரகநோய்க்கொருமருந்து விளம்புமென்றுரைத்தீர்மாரன்
சரமதனைத்துவாடி தலைகுனிந்துயிருஞ்சோர்ந்து... ...*
பாதவித்துனக்குநாங்கள் பயந்திருக்கின்றோமம்மா ...*

வசனம்.

கேளும்இராஜபரமேஸ்வரி ஊதுபோய் மத்தளத்தோடே அமுதகென்று உலகத்திலேசொல்லுவார்கள் அதற்குச் சரியாயிருக்குது எங்களை நீ விரகநோய்களுக்கு மருந்துகேட்கவந்தது நாங்கள் அந்தஅர்ச்சுனமகாராஜன் அழகைக்கண்டு அதிகமையல்கொண்டு உயிர்சோர்ந்து உனக்குப்பயப்பட்டு உலாவிக்கொண்டிருக்கிறோம்அம்மணி.

இரண்டாவது-தோழிசொல்-விருத்தம்

முருந்துநகைமூரலாய்நின் மோகத்தைத்தீர்க்கவேறோர் -*
மருந்துகளிருக்குதென்று மனதினிலெண்ணவேண்டாம் -*
திருந்தசெங்கதிரவன்போல் செழித்தபூஞ்சோலைதன்னில் *
பொருந்தும்அர்ச்சுனன்பொற்பாதம் போற்றிசெய்திடுவோம் [வாரீர்

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்வரி உனது விரகதாபத்தைத்தீர்க்க வேறேமருந்து இருக்குதென்றெண்ணவேண்டாம் இத்தகற்பகவனத்திலே பாலசூரியன்போல் உதயஞ்செய்திருக்கின்ற அர்ச்சுன மகாராஜனே மருந்து ஆகையால் அவ்விடம்போய் அவர்பாதத்தை தரிசிப்போம்அம்மணி.

சித்திராங்கதைசொல்-வசனம்.

அப்படியேபோவோம்வாரும்தோழி.

சித்திராங்கதை அர்ச்சுனனுக்குச்சொல்-கண்ணிகள்.

இ ம்-புன்னாகவராளி-சாப்புதாளம்.

மாதவனென்றெண்ணியுன்னைவைதேனோ ... வைதேன்-உன்றன்
மருத்துவமறியாமலேநான் மிகுதித்தப்பிழைசெய்தேன்
பாதகிநான்செய்தகுற்றம் பரிகரித்திடின் ... னேரம்-இனி
பட்சமோடென்னையாளாரட்சிப்பதுன் ... பாரம்
பெண்புத்திப்பின்புத்தியென்னும் பேதைமையினாலே-இந்த
பெரும்புவியையரசாளவிரும்பினேன்செங் கோலே
கண்பெற்றபேறெனவுமதாமுன்வருகைக்கண் ... டேன்-இனிக்
காசினியாள்வதைவிடுத்துன்றன் ஆசைமிகவுங்கொண்டேன்
எந்தைதவஞ்செய்ததனால்வந்ததுவும் ... நலமே-நான்
இதுவரைக்குங்கொண்டிருந்தபதிவிரதப் - பலமே
சித்தமகிழ்ந்துமையருளிச்செய்ததென்றன் கையில்-மெள்ளச்
சிக்கினதம்பக்குவத்தால்தீரும்என்றன் - மையல்
காசிதேசப்பிராமணசந்நியாசியைப்போல் = வந்தீர்-என்னைக்
கண்டுமையற்கொண்டுநீரும் சாட்சியிக்கே குந்தீர்
வாசம்வீசுங்கற்பகப்பூங்காவனத்திலெனைச் சேரும்-இந்த
மதுரைநகர்ஆளஒருசுதன்பெறக்கவே ... பாரும்

இதுவும்-சித்திராங்கதைசொல்-விருத்தம்.

அந்தணவேஷங்கொண்டென் அன்புசோதித்தாய்போற்றி*
சந்தவனத்திலென்றன் தனிசுரூபமெடுத்தாய்போற்றி...*
வந்தெனைத்தங்கமேற்கொண்ட மையலைத்தீர்ப்பாய் போற்றி
என்றனையடிமைகொள்ளும் இணையடிபோற்றிபோற்றி...*

வசனம்.

காசியாத்திரைபிராமண சந்நியாசிவேஷங்கொண்டு அடியாளை-மனஞ்சோதித்தவரேசரணம் நிறநல்லதிச்சுரூபந்தந்தவரே சரணம் நான்கொண்டகாமவிகாரந்திரும்படியாய் மருவியனைய வந்த உமதுதிருவடிக்கனந்தசரணம் என்னை யடிமைகொள்ளவேணுஞ்சுவாமிசரணஞ்சரணம்.

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

இணையடியைப்பணிந்தேற்றும்-எழில்சித்திராங்கதைமயிலே
 வெய்யுமாரன் ... ... ... *
கணையடிபட்டுக்கிறிற் காதலுடன்கற்பகப்பூங்
 காவிற்கட்டி ... ... ... ... *
அணையடியென்றதற்குசற்றும் அஞ்சாமற்றிட்டிசிர
 சாக்கினைசெய்து ... ... ... *
துணையடிகளுக்குதொழுவிலங்கதனைமாட்டத்துணிந்
 தவளெம்பாடி. ... ... ... *

வசனம்.

கேளாய்என்இரண்டுபாதத்தையும் துதிசெய்துநிற்கின்ற சித்திராங்கதையே நானித்த கற்பகவனத்திலே உன்னைக்கண்டு மோகித்துகாமன் கணையினால்அடிபட்டு அனேகவிதத்திலும் என்னைக்கூடியணையடியென்றுசொன்னதற்குச் சற்றும்அஞ்சாமல்திட்டவும் சிரசாக்கினைசெய்யவும் தொழுவிலங்குபோடவும் மனந்துணிந்திருந்தவள் இப்போதுஎவ்விதமாக உன்னைமருவியணைந்து மையக்தீர்க்கச்சொல்லுகிறாய்போடிபோடியென்னே.

சித்திராங்கதைக்கும்-அர்ச்சுனனுக்கும்-வாது-தரு.

இ-ம் தோடி-அடதாளம்.

மறையவனென்னவோர்மாயவேஷங்கொண்ட மெய்யா-உம்மை
 மட்டில்லாவார்த்தைநான்திட்டினபிழைபொறும்-ஐயா

அர்ச்சுனன்சொல்-தரு-இ-ம்-தை [ஷம்

பிழைபொறுக்கவுன்றன்மேல் பேசப்போகாதிளமானே-சொல்
 பேதமையென்பதுமாதர்க்கணிகலந் தானே

சித்திராங்கதை-சொல்லல்.

பேதமையாற்செய்தபெரும்பிழைபொறுத்தருள் நீதா-மையல்
 பெருகுதேநன்றனைக்கூடிமருவியணையும்பிராண நாதா

அர்ச்சுனன் சொல்லல்.

மருவியணைவோம்வாடியென்றார்புவி மீதே-உன்றன்
 படிட்சியாலென்றனை யிகட்சியாய்ப்பேசினுய்மாதே

சித்திராங்கதை-சொல்லல்.

இகட்சியுன்றனைச்செய்யவன்னினுல்பொறுக்குமோ பூமி-இந்
 தழையின்மேற்பிழையியம்பவேண்டாஞ் ஸ்வாமி

அர்ச்சுனன்-சொல்லல்.

இயம்பவேண்டாமென்றுநயம்பெறஇச்சகம் பாடி-மெள்ள
எந்தவந்தஉன்றன்வித்தையறிவேனீ போடி.

சித்திராங்கதை-சொல்லல்.

வித்தையொன்றுமில்லைசித்தம்மகிழ்ந்திரு வோரும்நல்ல
வேடிக்கையாயிங்கேகூடியணைகுவோம் வாரும்.

அர்ச்சுனன்-சொல்லல்.

அணைகுவோம்வாருமென்றிணையடியணியவும் ஆச்சே-கட்டு
அடிக்கிறேனென்றனையடிக்கிறேனென்றசொல்போச்சே

சித்திராங்கதைசொல்-சேபத்தியம் இ-ம்-காம்போதி.

ஐயனென்றறியாமல் வைதவையென்றன்மேல் ... *
அபசாரமிதுபொறுத்தருளவேணும் ... *
செய்யனேநின்றனையக்கோபுவேனென்றுநான் *
செப்பினதென்றன்மேல்தப்பிதந்தான் ... *
தூய்யமலர்ப்பாதங்களைவிலக்கத்தூட்ட ... *
சொன்னதாவுமென்றன்மேல்அன்னிதந்தான் ... *
மெய்யனேயென்றனதுநாயபுத்தியினாலிம் ... *
மேதினியையாண்டபிழைபகவுமுண்டு ... *
குற்றமற்றவனையுமென்கொண்டிருந்த ... *
உத்தமனேயுமதிருவுருவைக்கண்டு ... *
மெத்தமயல்டீதிமென்மேலுங்காம ... *
பித்தந்தலைக்கேறுதென்பிராணநாதா .. *

வசனம்.

கேளுங்சுவாமி உம்மைநான்விசேஷவித்தியாசமாகத்திட்டி
ய அபசாரமும் உம்மைகிரசாக்கினைச் செய்தப்போமேவனென்
றுசொன்னதப்பிதமும்உமதிருவடிகளில்தொழுவில்மாட்டுவே
னென்றுசொன்ன அந்தரமும் எனது கொஞ்சபுத்தியினாலே இத்
தமதுரையை இனவரசாட்சிசெய்திருத்தபிழையும் இன்னம் அனே
கக்குற்றங்களையும் பொறுத்துக்கொண்டிருந்த உத்தமனே உம
துதற்சொரூபத்தைக்கண்டு அதிகமையல்டீதினேன் ஆதலால் அ
டியாளைமருவி அணையும்பிராணநாதா.

அர்ச்சுனன்சொல் ஜெபத்தியம்-இ-ம்-புன்னாகவராளி.

தையலேநான்கொண்டமையலால்நீசெய்த ... *
தப்பிதமெல்லாம்எனக்கற்புதந்தான் ... *
செய்யவாய்த்திறந்துநீவைதவையென்னிரு ... *
செவிக்கின்பமாய்அநுபவிக்கலானேன் ... *
வெய்யவாள்கொண்டுதலைகொய்புவேனென்றுஞ்சொல்லை
விரும்பினேன்அமிர்தசெங்கரும்புபோல . *
கையினாற்பிடித்தென்றன்மெய்யின்மேலடிப்பதைக் *
கண்டனன்கமலமலர்ச்செண்டுபோலே ... *
ஆதலால்நீசெய்தஅன்னிதத்தை ... ... *
பூதலந்தனின்மனம்பொறுத்திருந்தேன் ... *
காதலனிலாபவிசிக்காளியாண்ட ... ... *
கூறெலாம்நான்அறியச்சொல்லுவாயே ... *

வசனம்.

கேளாய்பெண்ணே சித்திராங்கதை நானுன்மேல்மோகித்த படியினாலே நீசெய்ததப்பிதமெல்லாம் எனக்கற்புதம்இட்டினதெல்லாஞ்செவிக்கின்பம் சிரசாக்கினைச்செய்துப்போடுவேனென்று நீசொன்னவார்த்தையே செக்கரும்பு உன்கையினாற்பிடித் தென்னையடிப்பதே செந்தாமரைப்பூச்செண்டு ஆதலால் நீ செய்தகுற்றங்களெல்லாம் மனம்பொறுத்துக்கொண்டிருந்தேன் இப்பவும் நீ பூலோகவழக்கைதப்பிப் பெண்ணரசாட்சிசெய்ய சிரசிலேகிரீடமும் கையிலேசெங்கோலும்பிடித் திருக்கவேண்டியதென்ன எனக்குச்சொல்லடிபெண்ணே.

சித்திராங்கதை தன்வரலாறு-அர்ச்சுனனுக்குச்சொல்-அகவல்.

இ-ம் ஈருகுலகாம்போதி.

ஐந்தருவனத்தில் அருமறையவன்போல் ... *
வந்திருந்தவ்வுரு மாற்றியிவ்வுலகில் ... *
பருவமங்கையற்கோர் பஞ்சபாணனைநேர் ... *
உருவாகக்காட்டியென் னுளத்தைமயக்கும் ... *
மன்னவாநானிம் மணிமுடிபூண்ட ... *
இன்னவாறென்ன இயம்புவென்கேளும் ... *
டலைகமாலையும் வாசசெங்கமல ... *
பொய்கைசூழ்மதுரா புரியரசாளும் ... *
சித்திரவாகனனெனச் செப்பும்பாண்டியனும் ... *
புத்திரவாஞ்சையினால் புரிந்ததற்றவத்தால் ... *

கங்கையையணிந்த கடவுள்தன்னிடம்வாழ்
அங்கையற்கண்ணி அருளினாற்பிறந்தேன்
ஆதலாலெந்தை யவர்பெயர்விளங்க
காதல்கூர்சித்திராங் கதையெனவுரைத்தார்
தினமொருமேனியாய்த் திங்களைப்போல்நான்
மனமகிழ்வாக வளரெழுலையதில்
கல்வியாஞ்சகல கலைகளுந்தேர்ந்து
செல்வியாய்த்தெருவிற் செண்டுகளாடி.
எந்தைபோரவைக்கு யாதொருநாள்போய்
வித்தைசேருலக விசேஷங்கேட்பவன்போல்
விசயனென்றவன்றன் மெய்யெழில்கேட்டு
திசையின்மற்றொருவரை தீண்டாமலல்ல
பதிவிரதத்தினாற் பாராவலெல்லனி
சதிதரும்அங்கயற் கண்ணிபொற்பாத
பத்திசெய்திரண்டு பருவமுஞ்சென்று
புத்தியறிந்தேனப் போதெனையீன்ற
அப்பனவ்வார்த்தையை யறிந்தமைச்சர்களால்
கொப்பனவென்னைக் கொண்டதென்னெனனில்
எனையொருமன்னனுக் கியைவுசெய்தன்
றலையனைச்சிகாரந் தான்பெறுவதுவும்
மதுராமாநகரம் மைந்தருருவதும்
விதிகளாற்றேர்ந்திடும் மேதினியறிய
சயமாநாட்ட சம்மதித்தனென
நயமதாயழைத்து நாளையதினம்நீ
திருக்கலியாணம் செய்துகொள்ளென்ன
உருச்சியசெம்மை பூசிறாற்போலன்
செவியினிலாக்கத் தீமொழிகேட்டு
புவியினிலின்றோர் புருஷனைவேண்டேன்
கற்பிறவிந்தக் காளியாள்வேனென
சொற்படிமகுடஞ் சூட்டுவீரென்ன
பெண்ணரசாள்வது பிழையெனவெந்தை
எண்ணிசொல்வார்த்தைக் கெதிர்மொழிநானும்
பேசினேனந்தப் பிழையையும்பொறுத்தா
லோசனைசெய்து உயர்மணிமகுடம்
தரித்தனரென்றன் றலையினிற்சமையை
இருத்தினர்செங்கோ லீந்தகாலுலகிற்
களவுகட்கொலைபொய்க் கடுங்கோளிலாமல்
இளவரசாள என்றன்பாக்கியமர
மதிமந்திரிமார்களாய் மருங்கினிலிவந்து

சதுர்விதவுபாய தந்திரங்களினால் - - - - *
அரியணைமீதில் அமர்ந்துலகெல்லாம் - ... *
ஒருகுடைநிழலின் உண்மையைச்செலுத்தி - - *
மல்லிகைமுல்லை மருவிருவாட்சி - - *
பலவகைவிதப்பூ பதித்தராசாட்சி - - *
நிலபிசகாமல் நிற்கமீனாட்சி - - - *
மலரடித்துதிசெய வந்ததிக்காட்சி - *
கண்டனன்என்றன் கதையிதாண்மையல் - *
கொண்டவென்றனைநீர் கூடுவதல்லால் - - *
பொறைமிகுதருமபுத்ரனுதித்த - - *
மறையவருகியும் மானிலந்தனில் - - *
தீர்த்தயாத்திரைக்குச் சென்றதிச்சேதி - - *
பார்த்திபானெனக்குப் பகர்ந்தருளையா - - *

வசனம்.

கேளும்என்சுவாமி தேவரீர் பொறுமையில்மிகுந்ததருமரா
ஜன்தம்பியாய் விளங்குகின்றவர் பிராமண சந்நியாசியாய்த் தீர்
த்தயாத்திரைச்செய்யவந்த விருத்தாந்தம் அடியாளுக்குத்தெரிவி
க்கவேணும் என்பிராணநாதா.

அர்ச்சுனன்-தன்வரலாறு சித்திராங்கதைக்குச்சொல்-அகவல்

இராகம்-தோடி.

பொற்பினிவிரதி புகழுமற்புதமே ... *
கற்பினிலருந்ததி ஒருமயிலினமே ... *
பற்பலர்களுந்துதி பாண்டியன்மகளே ... *
ஐவர்களுடனே அவதரித்தானாய் - ... - - *
மைவருங்கண்ணார் மயல்கொள்வேனாய் - ... - *
பொய்யல்லயாத்திரை போந்தனென்றனாய் ... *
நயவேனென்றன் சரிதையைக்கேளாய் - - *
இந்திரபிரஸ்தம் என்னுமாநகரில் - - *
வந்தொருநாரத மாமுனிநல்ல - - - *
சந்தோஷவார்த்தை தருகுவனென்றால் - - *
சுந்தோபசுந்தாளர்குலத்துதித்தோர் - - *
இருவருமவரை எண்ணிசெய்தவத்தால் - *
ஒருவரும்நிகரிலா உயர்வரம்பெற்று - - - *
வருவருதிலோர்த்தமை மையலால்மாண்டார் - *
அரிவைதிரௌபதையை ஐவரும்பெண்டாய் - *

வைத்திருப்பதுவும் வன்மையோதரும - *
புத்திரனேயென்று புகலுமம்முனிவை - *
உத்திரங்கேட்க ஓராண்டுக்கொருவர் - - *
பற்றிமற்றோரில் பார்த்தவர்தீர்த்த - - *
யாத்திரைசெய்வொன் றறைந்தவர்போனார் - *
மூத்தவன்றன்னிட முறையினிலந்தநார் - *
சாஸ்திரக்குருக்கள் தன்மாபிடீட்க - - *
அஸ்திரமெடுக்கும்போ தடியினைக்கண்டு - *
வேடுவர்களையும் வென்றான்கோயில் - - *
மாடுகள்திருப்பி மறையவருடனே - - *
கூடிமவ்வேடம் கொண்டியாத்திரையாய் - - *
நாடுகள்திரிய நான்புறப்பட்டு - - - - *
காசியிற்சென்று கங்கையில்மூழ்கி - - - *
வாசுகிபெற்ற மங்கையுலூபி - - - - *
நேசகண்டங்கே நிகையமலாகி- - - - - *
பேசியஅவள்பின் பிலவழிபேசி - - - - - *
பாதலமென்னும் பதியினிற்சென்று ... ... *
காதலன்றாகக் கன்னியைமணந்தேன் ... *
ஆதலாலவளும் அரவானைப்பெற்றாள் ... *
பூதலந்தனிற்றன் புகும்பிலவழியால் ... - *
குன்றருவிகளும் குளங்களுந்தேடி ... ... *
நன்றிசெய்பலபல நதியினீராடி ... *
தென்றிசைமறையோர் சிலருடன்கூடி ... *
மன்றல்சேர்நாக மலையுந்நாடி ... ... *
திருக்காளஸ்திரியும் திகழொற்றியூரும் ... *
வருகழுக்குன்றமும் மயிலைமாநகரும் ... *
பெருகுகம்பாநதி பிரபலமாங்காஞ்சி ... *
பரமலங்காரமும் புனலெழுவிதமும் ... *
பிரமன்செய்யாகமும் பெருந்தவநிலையும் ... *
பரமன்வந்துமைக்கோர் பாகந்தந்ததுமா ... *
மாமதின்மகிமையும் மகிழ்ந்துகொண்டாடி ... *
அண்ணமலையிணை அடியையும்போற்றி ... *
உண்ணாமுலையெனும் உமைபதம்பணிந்து ... *
பெண்ணையில்மூழ்கி பெருந்துறையாடி ... *
வெண்ணைநல்லூரும் வீரட்டானமும் ... - *
ஆவடுதுறையும் அணிதிருவாரூர் ... *
மாவலிகண்டூர் மகிழ்வடமருதூர் ... - - *
நாவலூர்செத்தூர் நடம்பயிலம்பலம் ... *
நாவலராலும் நவிலவுமரிதாம் ... - *

பாரெங்குந்தெய்வ பதிபணிந்தப்பால் ... *
நீரெங்கும்பொங்கும் திகரிக்காவிரிசூழ் ... *
சீரங்கம்வந்து சிலநாளிருந்து ... ... *
சாரங்கபாணிபொற் றாளிணைபணிந்து ... *
வண்டிசைபயில்வரு வைகையாற்றில் ... *
எண்டிசைபுகழ எழுதேடெதிரேற ... ... *
நில்கூடலத்தையும் தாண்டினன்அந்த ... *
மண்விட்டனந்த மானதிதாய்ந்து ... *
பங்கயவாவியும் பகர்சொக்கநாதர் ... *
அங்கையர்க்கண்ணே டமர்திருக்கோயிலும் *
மங்கையர்வாழ்நான் மாடகூடங்களும் ... *
தங்கியமதுரைத் தலமதின்பெருமை ... *
காவிரியமுனை கங்கைசரஸ்வதி ... *
பூவிரிதாமரை புகழும்புஷ்கரணி ... *
கோவியகன்னியா குமரியாத்தீர்த்தம் ... *
தாவியேவைகைத்தனிலும்நீராடி ... *
வந்தனைனிந்த வாசமிகுந்த ... *
நந்தவனத்தில் இரதியெனவந்த ... *
உன்றனைக்கண்டு உவமகிழ்ந்திருந்த ... *
என்றன்வரலா றிதுவெனத்தந்த ... *
பாண்டியனின்னம் பன்னுபசாரம் ... *
வேண்டியதுண்டு விளம்பவும்பெண்ணே *

சித்திராங்கதைசொல்-கந்தார்த்தம்-இம்-மத்தியமாவதி.

நிர்மலமையறியாமல் துன்மதியால்நான் ... *
சொற்பிழை யனந்தரும்பொறுத்து ... ...*
என்மனதின்படிக்கிசைந்து மங்களமிலைசெய்ய ... *

வாருமென்சுவாமி மருவிருந்தந் ... *
தாருமென் சுவாமி ... ... *
சாரும்அலைகட லிரும்போலவிரு ... *
வோருங்கலவியாற் சேருவோம்அருகினில் |(வாரும்என்)

அர்ச்சுனன்சொல் கந்தார்த்தம்-இம்-தோடி-அடதாளம்.

சென்டார்முல்லையாய் நின்னருகினிற் ... ... *
றெண்டாரலந்தந்தோழிக ளிருக்கிறாரவர்கள் ... *
கண்டார்நகைப் பார்களிந்த ... ... ... *
வண்டார் மலர்வனத்தில் ... ... ... *

மறைவாகவாடி மருவுவோம் ... *
உறவாகக்கூடி ... ... ... *
நினைவாகமனதினில் நினைத்திருந்தபடி ... *
குறைவருமலின்று கூடலாம்பூஞ்செடி (மறைவாகவாடி)

சித்திராங்கதைசொல்-கந்தார்த்தம்-இ-ம்-தோடி.

ஆதிகளித்துத் தழைந்தசோலையிற் ... ... ... *
போதலர்பூவணைப்போட்டப்புறம்போவார் ... *
ஆகவாரொருவரும் அறியாமலிருவரும் ... ... *
மாதவிமாத்தருகினில் ... ... ... *

மருவுவோம்வாரும் கனியிதழ் ... ... *
பருகுவோம்வாரும் ... ... *
திருவுறெழிமாலும் திசழிசதிருமதினை ... *
பொருவுமன்மதனும்போல் உருகொண்டஇருவரும் (மரு)

அர்ச்சுனன்சொல் - கந்தார்த்தம்.

அணியாரிங்கொருவருமில்லை ... ... *
தனியாய்நாமிருவரும் கூடிச்சம்போகமதாய் ... *
பனியார்பூவணையினிற் படுத்துக் ... ... *
கனிவாயிதழமுதுண்டு ... ... ... *

களிக்கலாம்பெண்ணே இன்பக்கடல் ... *
குளிக்கலாங்கனியே ... ... ... *
அளிக்குமலரும்பன்றளிர்த்ததுபோலே ... * [களி
கிளிக்குப்பொற்கின்னைப்பால்கிடைத்தாற்போலினிமேலே

பொது-விருத்தம்-இ-ம் தோடி.

கந்தனும்வள்ளியும்போற் காளையர்ச்சுனனுமங்கைப் - *
பந்தெறுமுலையாளென்னைப் பகர்சித்திராங்கதையுங்கூடி *
ஐந்தருவனத்திலின்பம் அனுபவித்தவர்களிப்பால் - *
வந்தொருவருக்கொருவர் வாய்மலர்ந்திருக்கின்றனர்; *

வசனம்.

இவ்விதமாக சுப்பிரமண்ணியசுவாமியும் வள்ளியம்மனுங் கானகத்திலே மருவியணைந்ததுபோல் அந்தகற்பகவனத்திலே அர்ச்சுனமகாராஜனும் சித்திராங்கதையும் காந்தருவ விவாகமாகச் சேர்ந்து அதிக திவ்யசம்போகத்தை அடைந்தவராய் அந்த குரு

க்கத்திமாத்தடிகையைவிட்டு இப்புறம்வர்தொருவருக்கொருவர் கனிவாய்மலர்ந்து கலந்துபேசுகின்றவிதங்காண்க.

சித்திராங்கதை அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்.

வேளைவெல்லெழில்பிருந்த விஜயநாம்இங்குவந்த - *
வேளைநல்லதுகாந்தர்வ விவாகமுமுடிந்துப்தந்தை ... *
நாளையதினம்தமக்கு நன்மைகளுஞ்செய்வார்திலபின் - *
நாளைகொண்டாண்மனைக்கு நடந்துவந்தருளுவீரே *

வசனம்

கேளும் அழகில்மிருந்த அர்ச்சுனமகாராஜனே நானிந்தநந்தவனத்திற்கு வந்தவேளைநல்லவேளை யாகையால் உமதுதரிசனமுங்கண்டு காந்தர்வவிவாகமும் முடிந்தது இனியென் றந்தையாகிய பாண்டியமகாராஜன் நாளையதினம்திருக்கலியாணம்செய்துப்போடுவார் இனிநாமிருவருங்கைகோர்த்துக் கொண்டு அரமனைக்குப்போக எழுந்தருளவேணும் சுவாமி.

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

இ-ம்-ஆனந்தபைரவி.

திருவெனவுருவமைந்த சித்திராங்கதையேகேளாய் - *
தருவனந்தனிருனுன்றன் றந்தைசொற்படிக்கிருந்த - *
உருவமாற்றினதல்லாமல் உன்னையுங்கூடிஅங்கே - *
வருவதுநன்றோநீபோய் வாழ்மனைசேருவாயே - *

வசனம்.

கேளாய் ஸ்ரீமகாலட்சுமியைப்போலும் அழகைப் படைத்த சித்திராங்கதையென்னும் கன்னே நான்பிராமண சந்நியாசியைப்போல்வந்து உன்றந்தையாகிய பாண்டியமகாராஜன்சொற்படிக்கிருந்த ரூபத்தைமாற்றி இராஜரூபமெடுத்து உன்னையுங்கூடி நான் உன்றந்தை முன்வருவது நன்றல்ல நீவாழும் அரமனைக்குப் போய்ச்சேரும்பெண்ணே.

சித்திராங்கதை-புலம்பல் தரு இ-ம்-துசிரி-அடதாளம்.

வாழும்அரண்மனை போவென்பவரோநீ
வந்துதொட - - லாமோ-கூட்
வரமனதில்லாமல் ஸ்திரமாயிக்கிருந்து
வாயால்வழிவிட - லாமோ
வழியுஞ்செய்யுமென் றேழைகள்வார்த்தை
புண்மையாச்சு - - தேநான்

உன்றனைப்பிரியே னென்றுசொன்னபேச்
  சுடனேபோச்சு - - தே
பதிவிரதங்கொண்டதிபதியாயிப்
  பாரினில்வாழ்ந்தே - - னே-கல்வி
பல்லினைப்போலெல்லாம் சொல்லியின்றுகாடிப்
  பானையில்வீழ்ந்தே - - னே
சதிசெய்யாமலென் மதிமயங்கிநின்றன்
  மையல் தீர்த்தே - - - னே-மனஞ்
சற்றிலேமகிழ்ந்து தயிரிலமரு
  முற்றிலும்பார்த்தே - னே
சக்களாயென்னும்வாய் நக்கிறவர்போலும்
  சம்மதிப்பட்டே - ... னே-செங்கோல்
சத்தியமும்தெய்வ பக்தியுங்கற்பும்பெண்
  புத்தியாற்கெட்டே - - - னே]
அக்களாதீர்ந்தபின் நிக்கிரகித்துமுன்போல்
  அந்தனளுக - - - வோ-இவள்
ஆசையினால்வந்தவேசியென்றுதீர்த்த
  யாத்திரைக்குப்போக - வோ
சிந்தையிலெண்ணியென்றந்தைமுன்வராமல்
  திருடனவனைப்போ - - லே-மலர்
செழித்தவனத்தி லொளித்திருந்தாலென்
  செய்வேனினிமே - - - லே
எந்தையினாலொரு நிந்தைவருமென்
  றெண்ணவேண்டாம் - வாரும்-இந்த
ஏழையுடன்கூடி வாழும்படிமனம்
  இசைந்தாலன்பா - - ரும்

இராகம்-சித்திராங்கதைசொல்-விருத்தம்-இ-ம் - ஆனந்தபைரவி.

இலையினிற்பாலோடன்னம் இட்டதையுண்ணுமுன்னம் *
தலையினைவெட்டுமென்ற தகைமைபோலுன்றனாசை - *
வலையினிற்பட்டஎன்னை மருவவாராமனீரின் - - *
நிலையினிலிருப்பதென்ன நீதியென்பிராணநாதா *

வசனம்.

கேளும் சுவாமி இலையிலே நல்லபாலோடு அன்னமிட்டதை உண்ணுகிறதற்கு முன்னே கழுத்தையறுத்த தன்மைபோல் உ-

ன்றன் ஆசையிலகப்பட்ட எல்லை மருவியனைய மனைக்குவாராமே
ல் நீரித்த நந்தவனத்தில் இருப்பதென்ன நீதி எழுந்திருந்து வாரு
ம் என் பிராணநாதா.

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல் விருத்தம்.

இராகம்-ஆனந்தபைரவி.

வாருமென்றழைத்தனல்கன்னி மணிசித்திராங்கதையேயுன்னை *
சேரும்அக்கறையெனக்குத்தீர்ந்ததென்றெண்ணவேண்டாம் *
நாரும்பூவும்போற்கூட நன்மணஞ்செய்வேனிந்த ... *
பாரும்வானுந்தான்சாட்சி பதியிற்போய்ச்சேர்வாய்பெண்ணே

வசனம்.

கேளாய் சித்திராங்கதை யென்னுங் கன்மணியே! நானுமு
னைச்சேர்ந்தணையும் ஆசையும் அக்கரையும் எனக்குத்தீர்ந்துபோ
ச்சுதென்று எண்ணவேண்டாம் இனி நாமிருவரும் நாரும்பூவும்
போலமருவி யனைய நாளையதினம் வந்து உன்னைத் திருக்கலியா
ணஞ் செய்துக்கொள்ளுகிறேன் இந்தபூமி ஆகாஷம் தான்சாக்ஷி
வியசனப் படவேண்டாம் அரண்மனைக்குப் போய்ச் சேரும்
பெண்ணே.

சித்திராங்கதை தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

மருமலர்க்குழலீர்தோழி மார்களேயிவனென்கூட ... *
வரமனதிலாமற்பூமி வானுமறியநாளை ... *
திருமணஞ்செய்வேனென்று செப்பியமொழியைநம்பி *
அரண்மனைக்கேகலாமா வெனவருமாசெய்விரோ ... *

வசனம்.

கேளுங்கள் என்சகிகளே இந்த அர்ச்சுனமகாராஜன் நம்மு
டனேகூட மனைக்குவர மனதில்லாதவர் நாளையதினம்வந்து உன்
னைத் திருக்கலியாணஞ் செய்துக் கொள்ளுகிறே னென்று பூமி
ஆகாஷம் அறியச்சொன்ன சத்தியவார்த்தையை நம்பி இவரையி
ங்கே விட்டு விட்டு நாம் அரண்மனைக்குப்போகலாமா நீங்களனை
வரும் ஒரு ஆலோசனைச்சொல்லுங்களம்மா.

தோழிகள்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

வளாயிசைமேல்விளைந்தாலும்இவ்வையகத்தனிலெனக்குத்தாம்
உரவிற்றுன்மதியும்எங்கும் ஒழிப்போகுமின்றன்கை ... *

விரலிளைப்பிடித்துநல்ல விவாகஞ்செய்தணையநாதனே ... *
வருகிறேனென்றுசொன்ன வாய்மையுந்தப்பாதம்மா ... *

வசனம்.

கேளும் இராஜபரமேஸ்பரி மலையின்மேல் விளைந்தாலும் ஊரிலேதான் விலைபோகணும் எங்கேயும் ஓடிப்போகாது நாளைய தினம் உன் கைவிரலைப்பிடித்துத் திருக்கலியாணஞ்செய்து சேர்த்தணைகிறேனென்று சொன்னவர் எங்குந்தப்பியோடிப்போகமாட்டார் நாம் அரண்மனைக்குப்போய்ச் சேருவோம்வாரும் அம்மணி

இதுவும்-தோழிகள் சொல்-விருத்தம்.

உருசியைக்கண்டபூனை யுரியைத்தாவுவதுபோலின் ... *
சரசசித்திரப்பதுமை தானின்னம்வேண்டிடுவிந்த ... *
விரைசெறிமலர்வனத்தை விட்டவர்போகமாட்டார் *
வரிசையாநாமெல்லோரும் வாழ்மனைக்கேகலாமே. *

வசனம்.

கேளும் அம்மணி உருசிகண்டபூனை உரியைத்தாவுவதுபோல் உன்னை மருவியணைய இன்பசுக சம்போகத்தை வேண்டிலவனாகிய இவர் இந்தநந்தவனத்தைவிட்டு அப்புறம்போகமாட்டார் நாம் வந்து வெகுநேரமாச்சுது அரண்மனைக்குப்போய்ச் சேருவோம்வாரும் அம்மாதாயே.

சித்திராங்கதை-தோழிகளுக்குச்சொல்-விருத்தம்.

சகிகளேநீங்கள்சொன்ன சாமர்த்தியவார்த்தைநல்ல ... *
விசித்தானிவ்வனத்தில் விஜயனைவிட்டெல்லோரும் ... *
இசிவிழுயர்மனைக்குச் சீக்கிரமதாகச்சென்று ... *
மகிதலமதியநாளை மணமெனவுரைப்போம்வாரீர் ... *

வசனம்.

கேளுங்கள் என்சகிகளே நீங்கள்சொன்ன வார்த்தையே சரி இந்த நந்தவனத்திலே அர்ச்சுனமகாராசனை விட்டு நாம் அனைவரும் அரண்மனைப்போய்ச்சேர்ந்து நாளையத்தினம் திருக்கலியாணமென்று பூலோகமெங்கும் அறியச்செய்வோம் வாருங்கள் அம்மா.

தோழிகள் சொல்-வசனம்.

அப்படியே போவோம்வாரும் அம்மணி.

## சித்திராங்கதைசொல்-தரு-இ-ம் அசாவேரி அடதாளம்

### பல்லவி.

ஆரமனைக்கேகுவோம்வாரீர்-நாம்
அனைவருமிந்த நந்தவனமதைவிட்டுச்சேர்ந்து (ஆரம)

### அநுபல்லவி.

பாரமனைநினைந்துநான் பண்ணுபூசையி னாலே
பார்த்திபனிங்குவந்து வாய்த்தானேஇனி மேலே (ஆரம)

### சரணங்கள்.

கனமோகமயலின்னுங் ... கொள்ளுதே-வர
காலதாமதிப்பின்னே ... தள்ளுதே-நல்ல
இனமாகத்தாமக்கள் எல்லோரும் கன்றுளும்
இருமருங்குஞ்சூழ பெருமையா யாசாளும் (ஆரம)

நாதிகளேசருக்காய்ச் ... செல்லுவீர்-என்றன்
தந்தைக்கிவ்வார்த்தையைச் சொல்லுவீர்-மாட
வீதிகளெங்கும்விளங்கச் ... சிங்காரிக்க
விஜயன்றனக்குமணம் இசையவே பூரிக்க (ஆரமனைக்)

நாயகனைமாலைச் - சூட்ட-மதனை
நகரெங்குமெனைக்கோலங் காட்ட-அந்த
காளையர்ச்சுனனை என் கமலக்கண்களி கூர
கண்டவுடனேமையல் கொண்டஇளைப்பு தீர (ஆரமனைக்)

### பொது விருத்தம்-இ-ம்தோடி.

ஐந்தருவனத்தி லர்ச்சுனன்றனைவிட்
டரிவைசித்திராங்கதை மயில்போல் ... *
வந்தரண்மனையிற் புகுந்தனள்பானு ... *
மறைந்தபின் மதன்கணையாலும் ... *
சந்திரனாலும் சகிக்கமாட்டாமற் ... *
றனைவிடுமெழுகெனத்திரேகம் ... *
நைந்துருகியதாம் இராத்திரிகாலம் ... *
நடந்தசேதிகளையும் உரைப்பாம் ... *

### வசனம்.

இவ்விதமாகக் கற்பகவனத்தைவிட்டு தன்தோழிமார்களுடனே சித்திராங்கதை அரண்மனை வந்துசேர்ந்து சூரியபகவானும்

அஸ்தமானம் ஆனபின்பு விரகாக்கினி சகிக்க மாட்டாதவளாய் தேகமெங்கும் மெழுகாயுருகி அவ்விராத்திரி காலமெல்லாந் துயரப்படுகின்ற விதங்காண்க.

சித்திராங்கதை சகிகளுக்குச்சொல் விருத்தம்- ஆகிரிராகம்.

வாழ்மனைக்கென்னைக்கொண்டு வந்ததோழிகளேயிந்த *
பாழ்மனைதனிற்படுக்கும் பஞ்சணைசுடுவதென்றன் ... *
ஊழ்வினைப்பயனோவூணு முறக்கமும்இழக்கவந்த ... *
தாழ்வினையொழிக்கவந்த தனஞ்செயனெங்கேசொல்வீர் *

வசனம்.

கேளுங்கள் என்தோழிகளே இந்த பாழ்மனையிற்படுத்துநித்திரைசெய்யும் பஞ்சணை நெருப்புப்போல் என்றேகத்தைச் சுட்டுப்போடுவது நான் பூர்வஞ்செய்தபாவமோ மேலும் அன்னமும் வேண்டியதில்லை நித்திரையும்வரயில்லை இனி யென்னசெய்வேன் இந்தத்துயரத்தைத் தீர்க்க அந்தத் தனஞ்செய னெங்கேயிருக்கிறார் சொல்லுங்களடி பெண்களே.

தாதிகள் நாயகிக்குச்சொல்விருத்தம்.

தனஞ்செயனெங்கேயென்னுந் தாயேயுன்றனக்குநாளைத் *
தினஞ்செய்வோனுதிக்குமுன்னந் திருமணஞ்செய்துகூட
இனஞ்செய்வண்டியிர்பூங்காவில் இருந்தவர்வரவுங்காண்பாய்
மனஞ்சலியாமல்நித்திரை மலரணைதனிற்கொள்வாயே ... *

வசனம்.

கேளும் அம்மணி அந்த அர்ச்சுனமகாராஜன் நாளையதினம் சூரியஉதயத்திற்கு முன்னே உன்னைத் திருமணஞ்செய்து சேர்த்தசே[illegible]கவனத்தைவிட்டு வருவார் நீவியசனப் படவேண்டாம் அந்[illegible]ஞ்சணையை விட்டு இப்புறம்வந்து இந்தமலரணையில் சற்றுநேரம் நித்திரைசெய்யும்அம்மாதாயே.

சித்திராங்கதை-மன்மதவேதைப்படுகிற-தரு

இ-ம்-தோடி-தாளம்மட்டயம்

பல்லவி.

மலரணையிற்படுக்க-வசமல்லவேதோழிமார்களே *

அநுபல்லவி.

அலர்க்கணையின் - - மேலே-எனை
அமர்த்திநீர் அது - சூலே (மலர்)

சரணங்கள்.

பஞ்சணையாகா ... ... தோ-இநிம்
  படுத்தாலங்கம்வேகா ... தோ
நஞ்சிணையென்பதை நாமல ... ஒன்று
  நம்பலாமோமதன் அம்பல்லவோ இன்று (மலரணை)

செந்தனற்குழம்பி ... தோ-நீங்கள்
  செய்வதெல்லாமெத்த ... குளி
ர்ந்தனக்குழம்பிதென்று ... வாரி
  தடவுதிர் என்னைச்சுடுகிறீர் ... மாறு (மலரணை)

கனத்தமையவைத்த ... நந்த-எழிற்
  காளைவிஜயன் ... ... நந்த
வனத்திற்கேயிட்சணத்தி ... லழைத்து
  வாருங்கடி நீங்கள் போங்கடி ... யித்த (மலரணை)

சித்திராங்கதை-தாதிகளுக்குச்சொல்-விருத்தம்-இ-ம் ரூகாரி

மலரணையென்னவோர்பேர் வைத்ததாதிகளேமாரன் ... *
அலர்கணைத்தனைப்பாய்ச்சி யதன்மீதிலென்னைவளர்த்தி *
பலர்களுஞ்சுத்திசுத்திப் பார்த்திருப்பதுவும்போதும் ... *
சிலர்கள்போய்விஜயன்றன்னைச் சீக்ரமாயழைத்துவாரீர் *

வசனம்.

கேளும் என்றோழிமார்களே புஷ்ப அணையென்ற பேரை மாத்திரம் வைத்து மன்மதனுடைய புஷ்பபாணங்களின் மேலில் என்னைப்படுத்து நித்திரா செய்யச்சொல்லி நீங்களனைவரும் சுத்திசுத்திப் பார்த்துக்கொண்டிருப்பது போதும் சிலபேர்கள் அந்தநந்தவனத்திற்குப்போய் அர்ச்சுனமகாராஜனை இந்தட்சணம் அழைத்து வாருங்கடிபெண்களே.

தாதிகள்-நாயகிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அழைத்துவாருங்களென்றால் அர்த்தராத்திரியில்நாங்கள் *
தழைத்தபூவனத்திற்கேகத் தகுமோநின்னருகில்இன்றேல் *
பிழைத்திருபோதாதாயிப் பெண்களாய்ப்பிறக்கமுன்றோ
இழைத்ததீவினையோஐயோஇனியென்னசெய்வோமம்மா

வசனம்.

கேளும் அம்மணி நீங்கள் உத்தரவுசெய்தஇராத்திரிவேளையி ல்இருண்டகற்பகவனத்திற்கு எங்களைப்போய் அவரையழைத்துவ

ரச்சொல்லத் தகுமோ மேலும் ஒருவருக்கு ஊழியஞ் செய்யுஞ் சாதிப்பெண்களாய்ப் பிறக்க நாங்களென்ன தீவினை செய்தோமோ ஐயையோ இனியென்னசெய்வோம் அம்மா.

சித்திராங்கதைசொல்-கந்தார்த்தம் இ-ம்-மத்தியமாவதி.

மன்றவமிருந்தநற்சந்தனமாம்வளர்பொதியக் ... *
குன்றிலெழுந்திருந்தென்றல் மேற்கொடுங்கனல்வீசும் *
தென்றலெனுந்தேரேறி யெண்டிசைகளும்அதிர ... *
வந்திறல்கொண்டதிவேகமதாகன (மாரன்) ... *

அதிக்குமால்குமாரன் ... ... *
கொதிக்குங்கோபக்காரன் ... ... *
எதிர்க்கும்ரணசூரன்-இந்த ... ... *
பாரினிலெவர்களும் நேரிலையெனவரு ...*
போரினில்முனைந்தெதிர் சரியாவாரவன் (மாரன்) *

இதுவுமது.

வாரிகளோசெழுவகையும் பலவாத்தியமென்னும் ... *
பேரிகையார்ப்பரித்திடும் படிபிறப்படும்பிரயாணை ... *
பூரிகைதாரைபுன்னாங்குழ லூதலுங்கொடியாக் ... *
காரிலகியார்நடமாடக்கருங்குயில் (காளம்) ... *

வண்டிசைகளும்பூபாளம் ... ... *
எண்டிசைமுழங்குமேளம் ... ...*
தண்டுந்தேடையாளம்-மின்னுமண்ட ... *
கோளமுபர்சக்ரவாளமதிருவரு ... *
வேளைதிருவுயெத்தால்தாளக்கூடாதமேக (காளம்)*

இதுவுமது.

மகரகேதனமசையதென்மாருதமென்னும் ... *
சிகரத்தேர்மிசைத்திங்கள் வெண்குடையெனக்கவிய ... *
பகர்புனங்கிளிபரிகளார்ப்பரிக்ககாரிருளாசம் ... *
புகர்முகக்களிறு புடைநெருங்கிடபடை(பொங்க) ... *

செயவிருதிலங்க ... ... ...*
மயல்கொண்டோரிகலங்க ... ... *
புயல்வண்ணர்துலங்க-வரும் ... ...*
அங்கசன்படையெனும்மங்கையரொடுசேனு *
நங்கைபெலங்கள் திலங்களிலெங்கனும்(பொங்க) *

இதுவுமது.

கரும்பெனும்வில்லைவளைத்துகரோமதாக ... ... *
சுரும்பெனும்நாணைரிட்டுருணைத்தொலிசெய்து ... *
அரும்பலர்முல்லைபோலடங்கணைபூட்டிபார்த்தனை ... *
விரும்புமென்றன்மேல்வீசும்அம்புகளெனும்(வேகம்) *

திடுக்கிடுதென்னுகம் ... ... ... *
நடுக்கிடுதென்தேகம் ... ... *
தொடுக்கிறான்சோகம்-கையில் ... ... *
சேகரமாகஅனேகமங்கையர்கள் ... *
தோகையென்மீதினில்வாகைமன்மதன்விடு.(வேகம்) *

இதுவும்-சித்திராங்கதைசொல் விருத்தம்-இ-ம்-புன்னாகவராளி.

சகிகளேயென்மீதில்பகைகொண்டுமன்மதன் *
சாடுறான்முல்லைபாற்றலைப்பிளக்க ... *
விசித்திரமாக்கரும்புவிற் பிடித்தசேகக்கணை ... *
விடுகிறான்என்றன்றன்விழிதெறிக்க ... *
தொகையிலாஅரவிந்தமுகையெனும்பூங்கணை *
தொடுக்கிறான்பெண்மனந்திடுக்கிட்டலற ... *
மகிதலந்தனில்சோனாமாம்பூவெனும்பாணம் *
வாங்கிறான்கொங்கைமேற்றாங்கியுருக ... *
நிதம்பத்தின்மேல்விட்ட நீலபாணம் ... *
அதம்பண்ணுதெனையவன்னீதங்குலைய ... *
கதட்பமுல்லைகள்வனிற்பூங்கணைகளெய்யும் ... *
மதமுற்றபாவிமன்மதனைவெல்வேன் ... *

இதுவும்-சித்திராங்கதைசொல்-அகவல்-இ-ம்-முகாரி.

மன்மதாநீநெடு மான்மகனுகையால் ... *
உன்மதாமதமெத்த வுண்டாகுதோடா ... *
என்மீதினிற்பகை யேதடாபொல்லாத் ... *
துன்மதியெனுமுன் முட்டபுத்தியினால் ... ... *
கன்னல்வில்வினிற்பூங் கணைகளைப்பூட்டி ... *
மின்னல்கார்ச்சலமிகும் மேகம்போற்பின்ன *
பின்னலாய்ச்சரமாரி பெய்ததுபோலும் ... *
இன்னல்செய்பாணங்கள் இனிமேலாகிலும்நீ *
எடுக்கவேண்டாமடா லைபூமின்மேற்றஜம் ... *
தொடுக்கவேண்டாம்பெண்தோஷங்களுண்டு *
படுக்கும்பாயலுந்தின் பாவம்போற்றலைக்க *
அடுக்குமோஅடாவுன் னுண்மைகளறிய *
கண்ணுதன்மூர்த்திதன் கனல்விழிபாலிம் ... *

மன்னனின் மெலிந்து நீ மாண்டது மெய்யென் *
றெண்ணியிருந்தேன் எந்திழைமார்கள் ... *
பண்ணினபாவத்தின் பாரியாயிரு ... *
உன்றனையெழுப்பி உளவுகள் சொல்லி ... *
என்றனைக்கொல்ல ஏவினன் பாவி ... *
மன்றல்சேர்பொதிய மாமலையிர்க்கும் ... *
தென்றற்றேதனைச் சிறாவருந்த ... *
பூவியாங்கிளிகளைப் பூனைகள்விழுங்க ... *
இரவியால்மதகரி யிருள்கருமொறுங்க ... *
பாவியநீலோற் பலமெனும் அம்பும் ... *
ஆவிர்தபாணமும் அசோகுபூங்கணையும் *
முல்லையுங்குகளும் முகங்கரித்துலர ... *
சொல்லும்மலைப்பூச் சுருள்வாள்வதங்க ... *
வில்லெனுங்கரும்பை வெடுக்கென்றொடித்து *
பல்லுளோர்தின்று பாரினிலுமிய ... *
கொடியெனுங்கரந் துளத்தினிலொளிக்க ... *
கடுமாசனையுங் கடலொலியுறங்கப் ... *
படியிசைநீவான் பதிபொழிலாய்ப்பூஞ் ... *
செடிவளர்ந்திடவுன் றேகமுமாற ... *
திங்கள்வெண்குடையுந் தேய்ந்துதேய்ந்தழிய ... *
பெண்களெனும்படை பின்னிகள்பெற்று *
மங்களாகரமா மனையினில்வாழக் ... *
கண்களிப்பாகநான் கண்டதெப்போதடா *
பாவியேயினிப்பட்ட பாணம்விட்டென்றன் *
ஆவியைவாங்காதே யப்புறம்போடா ... *

சித்திராங்கதைசொல்-கவி-இம்-நாட்டை.

ஆமடிபெண்களேயனைவரும் அனங்கனுக்குளவாய்ப் *
போரிடவேயெனைப் படைநற்றிருக்கிறீர்நீங்கள் ... *
வீரிடவாளினால் வீசியேயென் றன்கைத்தண்டால் ... *
ஓடியாயடித் துங்களைக்கொல்லுவேனே ... *

வசனம்.

ஆமடி யடி தாதிப்பெண்களே நீங்களனைவரும் மன்மதனு
க் குளவாயிருந்து அவன் பெரும் படையைப்போ லெனைப்பு
டைசூழ்ந்து போர்செய்யத்துணிந்தீர்களல்லவா நல்லதாகட்டும்
உங்களை வாளினாலே வெட்டி வதையா வடித்துக் கொல்லுகிறே
ன் பாருங்களடி வெள்ளாட்டிகளே.

தாதிகள்சொல்-விருத்தம்.

பனிமலரணையின்மீது படுத்து நித்திரைசெய்யாமல் ❋
முனிவுகொண்டெங்கள்பேரில் மோதியிங்கடிக்கவந்தால் ❋
இனியென்னசெய்குவோம்நல் லெழினிலாமணியீன்றமைந்த ❋
தனியரண்மனைக்குப்போவோம் தாயேநீயெழுந்துவாராய்

வசனம்.

கேளும் அம்மணி குளிர்ச்சி பொருந்திய புட்பவணையின் பேரிலும் படுத்து நித்திரைசெய்யாமல் எங்கள்பேரில் அதிககோபங்கொண்டடிக்கவந்தால் நாங்களென்னசெய்வோம் மிகுந்தகிரணம் பாவிய சந்திரகாந்தக்கல்லினாற் கட்டியிருக்கின்ற அரமனைக்குப்போய்ச் சற்றுநேரம் யிருந்துபார்ப்போம் மெள்ளவெழுந்துவாரும் அம்மணி.

சித்திராங்கதைசொல்-விருத்தம்-இராகம்.

இந்துகாந்தங்களென்றிவ் விரவியமாமணியாற்றேகம் ... ❋
வெந்துகாந்தரமனைக்கேன் மேவினேன்மலரணைதனில் .. ❋
வற்...கார்த்தருவமெனுறும் மனைக்குசெய்தமருவினையெல் ❋
தந்தகாந்தனையழைத்திடீர் தட்சணம்வருகுவீரே ... ❋

வசனம்.

கேளுங்களடி பெண்களே குளிர்ச்சிபொருந்திய சந்திரகாந்தமேடையென்றுசொன்ன உங்கள்வார்த்தையைநம்பி யதிக திட்சணங்களை ஜொலிக்குஞ்சூரியகாந்த மெத்தையின் பேரில் வந்த மாத்திரத்தில் எனதுதேகம் எங்கும்வெந்து காய்ந் துரிகிப்போகுதே அந்தஅர்ச்சுனமகாராஜனை இத்தட்சணம்அழைத்து வந்தீர்களானால் என்னுயிர்பிழைக்குமடிபெண்களே

இதுவும்-சித்திராங்கதைசொல்-தரு இராகம்-கலியாணி- திரிபுடைதாளம்.

பல்லவி.

மதியுமிப்படிகாய்வதென்னமோ ... மாயம்-பாவி
மதன்செய்யுஞ்சதிக்கிதுவுமென்ன சகாயம் (மதி)

அநுபல்லவி.

பொதியவெற்பெனும்சர்ப்பவயிற் ... பங்க
போலேமோதுதின்மேலேயது கங்க (மதி)

சரணங்கள்.

காதியச்சிதந்துநற்கருமாலோசனை ... செய்யுங்கள்-நல்ல
தக்கப்படிமக்கலமதைவாசலில் ... வையுங்கள்-இந்தத்

சேதியறியாமல்வந்து ... புகுந்தவென்
டங்கிலாப்பிடித்துப் பங்கஞ்செய்யுங்கள்தண் (மதி)

கடல்வடஅனலுடன்பிறந்தழ ... லேந்தி-நாகல்
கன்னழல்சினைகம்பண்ணையிருவிந்தக் காந்தி-மேலும்
விடவரவதின்வாயினி ... ... லுறைந்த
வெங்கனலோடிருதண்கலை ... நிறைந்த (மதி)

அம்புலியென்றினி நம்பவொண்ணுதிது மெய்யே வரும்
ஆயிரங்கதிரோன்காயுமாரனென்பதும்பொய்யே-சொல்லும்
வெம்புலியிதல்லால் வேறெங்கே ... யுண்டு
வெங்கதிரோனுடன்தங்குங்கனல் ... கொண்டு (மதி)

சித்திராங்கதைசொல்.சீசார்த்தம்-இ-ம்-மோகனம்.

எங்கள்தமிழ்க்குன்றிலே பொன்னுமிளந்தென்றலே ... *
என்வந்துமோதுராய் என்றன்மேலே ... *
எங்கள்பூம்பொழிலிலே தங்குமாங்குயில்களே. *
என்கூவுநீர்களோ எமனைப்போலே ... *
எங்ளொழியத்தோழிப் பெண்களேநீங்களே ... *
எதிரியானீர்கள்தான் மதியினாலே ... *
எங்கள்குலமென்னும் வெண்டிங்களேயிப்படி ... *
என்காய்ந்தருகிறாயென்றனுடலை ... *
நாற்றிசையினின்முருநடத்தையண்டு ... *
கீர்த்திகுருதுரோகியெனக்கேள்வியுண்டு *
பார்த்திபனைக்காயடாபாவிபந்த ... *
கார்த்திகையைச்சேர்ந்த ... *
கடுக்கனலைக்கொண்டுகாயாதே ... *
வெம்புலிதனைப்போல்பாயாதே ... *
அம்புலியேநீமாயாதே ... ... *
பெண்பாவங்கொண்டுதேயாதே ... *

சந்திராதூஷிணை-அகவல் இ-ம் நாட்டை.

சந்திராநீயென்றன்மேற் றணலெனக்காயும் ... *
உன்றிராணியாலு உதிக்குமுன்னுனே ... *
அப்புறமுன்கதிர் அழித்தொளிமழுங்கி ... *
கொப்பெனநாட்குநாள் குறைந்துபோகாதோ. *
குறைந்தாலும்நீநல்ல குளிர்மழைமுகிலில் *
மறைந்தாலுமுன்றனால் மாறுதுகண்டாய் ... *
சங்கரனுன்றழல் சகிக்கமாட்டாமல் ... *
கங்கையைச்சடையினிற் கலந்தல்லோதரித்தார் - *

சூரியனனையொத்த அஃதிடனென்றறிந்து ... *
பாரியதிரேகம் பண்ணுமல்விட்டான் ... *
குருவின்பெண்சாதியை கூச்சமில்லாமல் ... *
மருவினபாவிதீமகிழ்வுடன்பெற்ற ... *
மைந்தனுக்கனைய மதித்துசெங்கதிரோன் ... *
சந்ததந்தேர்பரி சாரதியானுன் ... *
அரவுனைவிழுங்கி யாற்றமாட்டாமல் ... *
விரவுடனுமிழ்ந்து விட்டுதேருன்றுன் ... *
தேவர்கள்கடைந்த திரைகடலமுதை ... *
யாவருமுண்டபின் அகற்றிவிட்டனரே ... *
இருபத்தெழுபெண் டோடும் அவரவரை *
வருபதிவிரண்டு மனையில்விட்டகன்றும் ... *
இன்னிலமெத்தும் எழில்பெறும்அங்கம் ... *
கன்னிரோகணியாத் களங்கமுமானுய் ... *
கொல்லுதின்னெருப்பால் குளிர்ந்தகாந்தக் *
கல்லும்வெந்துருகி கரைந்துகுழம்பானுல் ... *
என்றனைக்காயா திருப்பாயோபாவி ... *
உன்றனைநம்பவு மொண்ணுதோடா ... *

சித்திராங்கதைசொல்-சந்தவிருத்தம்.

மதியுமிளந்தென்றலும் வாரிதியுங்கூவு ... *
மாக்குயிலும்பூங்கிளியும் மதனும்வண்டும் *
துதியுயிருக்குயிராமென் றேழிமாரும் ... *
துயிலிரவும்பயில்வாழுந் தலங்கவாழும் ... *
பதியுமலர்ப்பாயலும் பஞ்சணையுமென்மேல் *
பகையென்றுனினியிவைநக்கும்வகையென்னீக்கள் *
கதிருதிக்குமுன்விஜயன் றனையென்கண்ணிற் *
காட்டுவீர்மலரணையிற்கூட்டுவீரே ... *

வசனம்.

சந்திரன் - தென்றல் - சமுத்திரம் - குயில் - கிளி - மன்மதன் - வண்டுகள் - தோழிகள் - ராத்திரிகாலம் - ஆரமனே - புஷ்பஅணை - பஞ்சணை - இத்தனையும் என்மேற் பகையானுல் இவ்விராக்கிலையை நானெப்படி சகிப்பேன் இனியென்னுயிர் பிழைக்கும்படியாய் அந்த அர்ச்சுனமகாராஜனை அழைத்துவந்து பள்ளியறையிற்கூட்டி வையுங்களடி பெண்களே.

தாதிகள் நாயகிக்குச்சொல்-விருத்தம்.

அன்னமேநாங்களிப்போ தைத்தருவனத்திற்கேகி *
தன்னையமாவிங்கே நடந்தசேதியையுரைத்து ... *

மன்னியபிவ்யனென்னும் மகராஜன்றன்னையின்று .. ... *
கன்னியேயுன்றன்கண்ணிற் காட்டுவோமிருந்திடாயே ... *

வசனம்.

கேளும் அம்மணி நாங்கள் அப்படியே கற்பக வனத்திற்கு ப்போய் அந்த அர்ச்சுனமகாராஜனை அழைத்துக்கொண்டுவந்து உனது கண்ணிற்காண்பிக்கிறோம் சற்றுநேரம் நித்திரை செய்யும் அம்மா தாயே.

பொது-விருத்தம் இ-ம்-தோடி.

வாய்மொழிதடுத்தால்மோசம் வருமெனவளர்த்தெடுத்த *
தாய்மனதெண்ணியின்ற தந்தையோடுரைக்கச்சென்றாள் *
தூய்மலர்அமளியின்மேல் துடிப்பவள்வலையளென்றே *
காய்மதிகடற்புகுந்தான் கதிரவன்தானெழுந்தான் *

வசனம்.

இவ்விதமாக அர்ச்சுனமகாராஜனை அழைத்துவரச்சொன்ன சித்திராங்கதை வார்த்தையைத் தடுத்தால் மோசம்வருமென்றவளை வளர்த்தெடுத்த தாய்மார்கள் பாண்டியமகாராஜனுடனே இந்தச் சேதியைச்சொல்வோமென்று அவர்கள்போனபின்பு இனி நாம் காய்த்தோமானால் இவள் கெட்டுமாளென்றுசந்திரன் அஸ்தமனமானான் சூரியபகவான் உதயமானான்மேல்நடந்ததுகாண்க

தாதிகள்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

ஐயனேபோற்றி மலர்வனத்திற்காலி ... *
அந்தணன்போல்வந்திருந்த அர்ச்சுனன்றன் *
மெய்யழகைக்கண்டு சித்திராங்கதையுஞ்சோர்ந்து *
மேதினியில் மூர்ச்சையினால்விழுந்துமிக்க *
மையல்கொண்டுகாந்தருவ மணந்தாற்கூடி ... *
மனோசேர்ந்துமதியானு மாறனும் ... *
தையல்மெழுகெனத்திரோக முருகியின்னாம் ... *
தவிக்கின்றாள் துயரமனுபவிக்கின்றாளே *

வசனம்.

சரணஞ் சரணம் மகராஜ ராஜபரமேஸ்வராநமது நந்தவனத்தில் காசியாத்திரைப்பிராமண சந்நியாசியைப்போல் இருந்தவன் அர்ச்சுனமகாராஜனென்று தற்சுரூபங்காண்பித்த படியினாலே நமது சித்திராங்கதையம்மாள் அவர்பேரில் அதிகமையல்கொண்டுமருவி அணைந்து மனமுவந்துசேர்ந்ததுமுதல் இதுவரைக்கும்

சந்திரனும் மன்மதனும் நேகமெழுகாய் உருகிப்போரு
ளோடா சுவாமி

பாண்டியன்-தாதிகளுக்குச்சொல்-விருத்தம்.

தோழிகள்நீங்கள்வந்து சொன்னநன்மொழியாலின்றே... ❋
ஆழிசூழுலகமெல்லாம் அரசாளுமகனும்நல்ல ... ❋
வாழ்வுஞ்சம்பத்துமுத்தி மார்க்கமுமகிழ்வும்பெற்றேன் ❋
தாழ்வொன்றுமில்லைநான்போய்த்தனஞ்செயன்றனைக்காண்
[பேனே

வசனம்.

கேளுங்கள் தோழிப்பெண்களே நீங்கள்சொன்ன ஜயசந்
தோஷவார்த்தையால் சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகமெங்கும் அர
சாளும்பிள்ளையும் சிறந்தவாழ்வும் சம்பத்தும் சாயுச்சியபதவிக்
குவழியும் மனமகிழ்ச்சியும் அஷ்டஐஸ்வரியமும் இன்றேபெற்
றேன் இனியொருதாழ்வுமில்லை அந்தஅர்ச்சுனமகாராஜனைநானே
போய்க்கண்டழைத்துக்கொண்டு வருகிறேனடிபெண்களே.

இதுவும்-பாண்டியன்-மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்.

அமைச்சரேகேளீர்முன்னே ராலோசனைக்காய்நீங்கள் - ... [ம்
சுமைச்சுமைந்திடும்போதல்லோ தோற்றுமென்றுரைத்தீர்தெய்வ
அமைச்சுதந்தப்படிக்கே யர்ச்சுனன்றன்னைக்காண - ... ❋
இமைப்பொழுதினிற்பூங்காவுக் கேகுவோம்வருகுவீரே... - ❋

வசனம்.

கேளுங்கள் என்மந்திரிகளே சித்திராங்கதை பூலோகமுழுது
ம் நானே யரசாளுகிறேனென்று சொன்னதற்குச் சுமைசுமந்தபி
றகல்லவோதெரியுமென்று நீங்கள்சொன்ன ஆலோசனைப்படிக்கு
த்தெய்வம் அர்ச்சுனமகாராசனைக் கொண்டுவந்தமைச்சுது இனிநா
ம்சும்மாயிருக்கப்போகாது கற்பகவனத்திற்குப்போய் அவனைக்
கண்டு அழைத்துக்கொண்டுவருவோம் வாருங்கள்மந்திரிகளே.

மந்திரிகள்-ராஜனுக்குச்சொல்-கவி.

அப்பனேபோற்றி அர்ச்சுனன்றன்னை ... ... ❋
கொப்பெனக்கண்டு கொள்ளுவோம்வாரீர் ... ❋

வசனம்.

கேளும்இராசபரமேஸ்வரா அந்தஅர்ச்சுனமகாராஜனைசீக்கி
ரமாகப்போய்க் காணலாம்வாருஞ்சுவாமி.

இதுவும்-மந்திரிகள்சொல்-கவி.

அரசனேபோற்றி அம்புவியாளும் ... ... *
அரசிரோன்மணியே யாணையடிபோற்றி ... *
விரைசெறிவனத்தில் விஜயனைக்கண்டு ... *
வரிசையாயழைத்து வருகுவோம்வாரீர் ... *

வசனம்.

சரணம்சரணம் மகாராஜராஜபரமேஸ்வரா சரணம் மிகுந்த வாசனைபொருந்திய கற்பகவனத்திலிருக்கும் அர்ச்சுன மகாராஜனைக்கண்டழைத்துக்கொண்டு வருவோம்வாரும்சுவாமி.

இராஜன்சொல்-தரு-இ-ம் ஆரபி-அடதாளம்.

பல்லவி.

வாருங்கள்மதிமந்திரி யினங்களே-இன்னம் ... *
மதுரையில்வாழ்பந்துசெனங்களே ... *

அநுபல்லவி.

நெருங்கரிப்புரவி ... சேனைமாநகர்விட்டு
தீர்த்தயாத்திரைசெய்ய-பார்த்திபன்பின்புறப்பட்டு (வாரு)

சரணங்கள்.

காசிப்பிராமணனைக் கண்டவர்மகிழ் ... பூண
கற்பகவனத்தில்வந்து பொற்பினில்மன்மதன் ... நாண
மாநிலாங்குலமன்னவன்போற் ... சேண
மங்கைசித்திராங்கதையை மருவினவனைக் காண (வாருங்க)

பஞ்சவரிலொருவன் பார்த்திபன்அவன் ... பெரும்
பாமன்பொற்பதத்துதி வரம்பெற்றவனைப் பாரும்
மஞ்செனுங்குழற்குந்த மாதேவிதாயா ... ரும்
மகபதிதனக்குமோர் மகவிவனேயா ... ரும் (வாருங்க)

புத்திரவாஞ்சையென்னும் புணரிகளித் திடத்து
புலப்புமபாவி யென்றன் சஞ்சலம்போகவும் கடத்து
சித்திராங்கதைக்குந் தனஞ்செயனுக்குமே தொடர்ந்து
சபதினமதனிலே பெருமணஞ்செய்குவோம் நடந்து (வாருங்)

பொதுவிருத்தம்.

மனமகிழ்ந்திவ்வாறுரைக்கும் மன்னவன்றன்னை *
மாதுசித்ராங்கதைபுடனே மருவவைத்த ... *
தனஞ்செயனவ்விரவினிற்பூம்பொழிலிற்றங்கி ... *
தனியிருந்துகடுங்காமத் தனலாலவாடி ... *
தனமயல்கொண்டுருகியெழுந்ததயகாலம் ... *
கடல்கழித்துப்பாண்டியனைக் காண்போமென்று *

ஜனமனைதிலெல்லணியெதிர்வந்தோய்நங்கு ... *
மினந்தந்தான்ரத்தினசிம்மாசனந்தந்தானே ... *

வசனம்.

இவ்விதமாக மனமகிழ்ச்சிகொண்டு நந்தவனத்திற்குப்போக மந்திரிகளை அழைக்கும் பாண்டியமகாராஜன் புத்திரியாகிய சித்திராங்கதையைக்கண்டு அதிமையக்கங்கொண்ட அர்ச்சுனமகாராசனும் அன்றையதினம் இராத்திரிகாலமுழுதும் மன்மதவேதனையால் நித்திரையில்லாமல் ஒருத்தனும் தாபமனுபவித்துக்கொண்டு இருந்து சூரியஉதயகாலம் ஆனவுடனே சந்தியாவந்தனம் ஜெபநிஷ்டை அனுஷ்டான முதலாகியதும் முடித்து இன்றையதினம் பாண்டியமகாராஜனைப்போய்க் காண்போமென் றெதிரேவருகிற அர்ச்சுனமகாராசனைக்கண் டதிகசந்தோஷிப்பட்டு புசத்தோடுபுசம் அணைத்துக்கொண்டு இருக்க தன்ரத்தின சிம்மாசனத்தையும் கொடுத்தான் மேல்நடந்தது காண்க.

பாண்டியன்சொல்-விருத்தம்.

வேதியனெனவிருந்த விஜயனேவாருங்க்ஷத்திரிய ... *
சாதியிலெழிச்சிருந்த தனஞ்செயாவாரும்யாத்திரா ... *
பாநியிலிவ்வூர்வந்த பார்த்திபாவாருமென்றன் ... *
ஆதினம்விளங்கவந்த அர்ச்சுனாவாரும்வாரும் ... ... *

வசனம்.

பிராமண வேஷங்கொண்டிருந்த வில்விஜயனேவாரும் மேலும் இராஜகுலங்களில் அழகில்மிகுந்த தனஞ்செயனே வாரும் தீர்த்தயாத்திரை நடுவில் மதுரைக்குவந்த பார்த்திபாவாரும் என்றன்செங்கோலாதினம் விளங்க என்மகளைத் திருமணஞ்செய்ய வந்த அர்ச்சுனமகாராஜனே வாரும் இந்த சிம்மாசனத்தில் உட்காரும்.

அர்ச்சுனன்சொல்-விருத்தம்.

மன்னர்கள்மன்னனாயிவ் மாநிலமெங்குஞ்சத்தி - - -*
திக்கெசர்குல்வில்வந்து நீடுநாளிருந்துதந்த- - - -*
அன்னமூன்றுறக்கவிந்த வைந்தருவனத்திறுவை - - -*
இன்னமுமிவைவிட்டேகா திருக்கவேசொல்லுமையா - - *

வசனம்.

கேளும் மகாராஜராஜபரமேஸ்வரனாய்விளங்காநின்றபாண்டியமகாராஜனே நான்பூலோகமுழுதும் தீர்த்தயாத்திரைசெய்து மதுரைப்பட்டணத்திற்குவந்து நெடுநாளாயிருந்தும் நீர்கொடுத்தசாமக்கிரிகைகள்சமைத்துண்டு நித்திரைசெய்ய குறைநீர்த்த [illegible]

க்கொடுக்கும் கற்பகவனத்தின் ஆசைஇன்னமும்இதைவிட்டப்புற ம்போகாதிருக்கச் சொல்லுதே ஆகலால் சில பிராமணர்களும்நா னும் இதுவரைக்கும் இவ்விடத்தி லிருந்தனம் பாண்டிய மகார ஜனே.

பாண்டியன்-அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்.

இருந்தனமென்றசொல்லை எழையின்செய்தபாக்கியம்... ※
மருந்தெனுமொழியாளென்றன் மகளைநீர்மகிழ்ந்துகூடி ※
பெருந்தனமென்னப்பெற்றப் பிள்ளையைச்சிகாரமாக... ※
தருந்தனநீரிந்தத் தரணியையளித்திடீரோ - - - - ※

வசனம்

கேளும் அர்ச்சுனமகாராஜனே நீரிதுவரைக்கும் இங்கிருந்த து நான்செய்தபாக்கியம் இனியென்குமாரத்தியாகிய சித்திராங்க தையை விவாகம்பண்ணிக்கொண்டு அவள்வயிற்றிலேபிறந்த பிள் ளையை இந்த மதுரைப்பட்டணம் இளவரசாகும்படியாய் எனக் கு புத்திரசிகாரம் அளித்திடவேணும் அர்ச்சுனமகாராஜனே.

அர்ச்சுனன்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்,

அளித்திடுமென்றுசொன்ன அரசனேயுமதுசிந்தை - - - ※
களித்திடும்படிநானுன்றன் கன்னியைமணந்துதீர்ந்தேன் ※
அளித்திடுமொழியாள்பெற்ற சுதனைநீர்மஞ்சநீராய் - - ※
குளித்திடுஞ்சிகாரமென்றே கொடுத்தனன்மன்னர்கோவே ※

வசனம்.

கேளும்பாண்டியமகாராஜனே அப்படியேயுமது மனமகி ழ்ச்சியடையும்படியாய் உன்குமாரத்தியை நான்விவாகம்பண்ணி க்கொண்டு அவள்வயிற்றிற்பிறந்தபிள்ளையை இந்தமதுரை இளவர சாகும்படியாய் உமக்குப் புத்திரசிகாரம் இன்றையத்தின மேகொடுத்தேன் இனிவியசனப்படவேண்டாம் மகாராஜனே.

பாண்டியன் மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்.

மனுவிக்கியானங்கள்தோய்ந்தமந்திரிகாள்நமதுபுண்ணியத்
தினுவிஜயனையுங்கையில் தந்துதேயென்றன்புத்திரி - - - ※
எனுஞ்சித்திராங்கதையைமாலை யிடுவதிவ்வுலகின்மன்னர் - ※
அனைவருமறிய இங்கே அதிர்முரசறையச்செய்வீர் - - ※

வசனம்.

கேளுங்கள் என்மந்திரிமார்களே நாம்செய்த புண்ணியத்தி னாலே அந்த அர்ச்சுனமகாராஜனுக்கும் சித்திராங்கதைக்கும் திருக்

கலியாணமென்று இந்தத்தேசமெங்கும் அறிய பேரிகைஅடிக்கச் சொல்லுங்கள் மந்திரிமார்களே,

மந்திரிகள்-கட்டியனுக்குச்சொல்-கவி.

அடிபரவியபகை நடிகொள்கட்டியனே- - - *
படியரசர்கள்வர கடிமுறசறைவீர்- - - - - *

வசனம்,

ஆட்டாவாசற்கட்டியக்காரனே நமதாண்டவனுக்தாரப்படிக் குத் திருக்கலியாணமென்று செகதலமெங்கும் அறியும்படியாய்ப் பேரிகைஅடிக்கச்சொல்லும்பிள்ளாய்,

கட்டியன்சொல் கவி,

காரிகைசித்திராங் கதைகலியாணப் - - -*
பேரிகையறையும் பேரொலிகேட்டு - - - *
வாரிகள்சூழ்ந்த வையகத்தரசர் ... - - - *
சாரியாயிந்த க்ஷணம்வருவீரோ - - *

பொது-விருத்தம்,

கன்னிசித்திராங்கதைக்கும் காளையர்ச்சுனன்றனக்கும் ... *
இன்னிலந்தனிற்கலியாணம் இசைந்தபேரிகையின்னோசை - *
சென்னியெனுங் குலசோழன் சேரனொடெண்டிசை
மன்னருஞ்செவியிற்கேட்டு மதுரைக்குவருகின்றாரே ... *

வசனம்,

இவ்விதமாக சித்திராங்கதைக்கும் அர்ச்சுனமகாராஜனுக்கும் திருக்கலியாணமென்று அறையும்பேரிகைசப்தம் ஐம்பத்தாறுதேசத்துராஜாக்களும் காதிற்கேட்டு மதுராபுரிபட்டணத்திற்கு வருகின்ற விதங்காண்க,

இராஜர்களனைவரும்-பாண்டியதேசத்துக்கு வருகிற-தரு.

இராகம்-சங்கராபரணம்-அடதாளம்,

பல்லவி,

சேரனும்சோழனும்பாரிலெண்ணேறென்னும் ... ... *
தேசாதிபர்களும்வந்தார் இன்னமனந்த-ராஜாதிபதிகள்வந்தார். *

அநுபல்லவி,

மாரனுமிரதியும் நேரில்லாமல் ... தானை
மணஞ்செய்சித்திராங்கதையைதனஞ்செயனுடன்காண
மண்டலந்தனில் பண்டரும் ... ... தமிழ்
தொண்டரும்உயர் அண்டரும் ... கமழ்

புண்டரீகனும் விண்டுவும் ... ... கறைநீ
கண்டனும்மகிழ் கொண்டமதுரா ... யிற்(சேர)

சரணங்கள்,

சிரபொன்முடிகளும் மகாகுண்டலங்க ... ளும்
தினகரனென ... ... - ... வுதிக்க-நல்ல
சீதள்சந்திரன்போல் ஸீதலமெங்களும் ... *
திகழ்வெண்குடைகள் ... ... பதிக்க
பகர்நவமணிதக தகெனும்புயகீர்த்திகள் ... - *
பசொங்கும்விலை ... - - - மதிக்க தமிழ்
பாவலர்செயங்கூற வலலெச்சரிக்கைப் ... *
பண்ணையலர்கள் - - ... துதிக்க-இன்னம்
புகர்முகவேழங்கள் புரவிகள்தேர்க ... ளும்
புடைசூழ்ந்துவருகின்ற படைமந்திரிமார்க ... -ளும்
நிகரில்லதில்மதுரா நகரமுதலோர்க - - ளும்
நிறைந்துலகெங்களும் பரந்தனைவோர்க - ளும்
நீடுகடலெனபொங்கபே - - ரிகை
யோடுடோலுமுழங்கபூ- - - - ரிகை
சாடுக்கிடுகுடமாரமு - - - வகை
நாடுங்கிடுகிடென்றதிரகா - - - ரிகை
நிர்த்தஞ்செய்திடுமத்தளத் - - -தொனி
மெத்தவழங்கவும் இத்தலத் - தனில் (சேர)

பாண்டியன்-வந்தராஜர்களுக்குச்சொல் விருத்தம்,

முரசறைந்ததினால்இன்றே முகூர்த்தமென்றறிந்துவந்த - *
அரசரேவாரீர்நீங்க ளனைவரும்மகளைத்தேடி. ... *
வாசிநியேல்முன்செய்த மாதவப்பயன்றான்கண்டீர் ... *
வரிசையாய்ச்சிம்மாசனத்தில் மகிழ்ந்திருந்தருளுவீரே -*

வசனம்,

வாருஞ்சேரமகாராசனே சோழமகாராசனே, ஐம்பத்தாறு தேசாதிபதிகளே வாருங்கள் நீங்களனைவரும் இந்த ஏழைகலியா ணநிமித்தம் மதுராபுரிபட்டணத்திற்குவந்ததே நான் முன்செய் தபாக்கியம் அவரவர் அலங்காரஆசனத்தி லெழுந்தருளுங்கள் ம ண்டலாதிபதிகளே இருந்தருள்வீர்கள்-

இராஜாதிபதிகள்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

இருந்தருள்வீர்களென்றும் ஏழையேனென்றுமுன்செய் -*
அருந்தவப்பயனால்தீய வினைவரும்வந்திடென்றும் ... ... *

வருந்தவும்வேண்டாமிந்த மதுரையாளுஞ்சொக்கநாதர் ... *
திருந்தரிசனம்போலுமந்தன் றனியுருக்காணவந்தோம் - *

வசனம்.

கேளும்பாண்டியமகாராஜனே இந்த ஆசனத்திலிருந்தருள் வீர்களென்றுமெழையேன்செய்ததவப்பயனால் நீங்களனைவருமுவ ந்தீர்களென்றும் நீர்மெத்தவும் எங்களையுபசாரம்பண்ணவேண்டா ம் இந்த மதுரைசொக்கநாதசுவாமியார் தரிசனம்போல் ஒப்பற் ற உமது திருருபதரிசனக்காணக் கிடைத்தது எங்கள்பாக்கியந் தான்மகாராஜனே

பாண்டியன்சொல்-விருத்தம்,

மகாராஜனென்றுசொன்ன மன்னரேகேளீரிந்த - ... *
செகராஜர்தம்மில்நானோர் சேயிலாப்பாவியாயின் - - *
நகாளப்பெண்ணைபெற்று நங்கமூற்றிருக்குமென்னை - *
நிகாருமில்லையென்று நீங்கள்கொண்டாடலாமா - - *

வசனம்.

கேளுங்கள் என்னைமகாராஜனென்று புகழும் மண்டலாதிப திகளே இந்தபூலோகம் அரசாளும்பிள்ளையில்லாத பாவியாய் நா னொருபெண்ணைமாத்திரம் பெற்றதினாலே மிகவும் மனத்தாழ்வு கொண்டிருப்பதுவன்றி உமக்குநிகாரென்று நீங்கள்கொண் டாடத்தகுமா மன்னர்களே.

இராஜாதிபதிகள்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்,

தருமாவென்றனாத்தவேம்பின் தாரணிமார்பா இந்த - - *
இருமானத்தாழ்வுமெந்த விதத்தினால்நீங்கிற்றென்ன - - *
வகைமானந்தேடிப்பெண்ணை மணஞ்செய்துகொடுக்கப்போ
தொகையாகஎங்களுக்குச் சொல்லுவீர்அரசர்கோவே [நீர்

வசனம்.

கேளும் வேப்பமாலையணிந்த பாண்டியமகாராஜனே உம க்குப்பின் இந்தவுலகையாளும் பிள்ளையில்லையென்கிற மனத்தா ழ்வெப்படி நீங்கிப்போச்சுது மேலும் அதற்கென்ன வகைமானந் தேடி அந்தப்பெண்ணை ஒருவருக்கு விவாகம்பண்ணிக் கொடுக்கி றீர் அதையெங்களுக்குந்தெரிய அருளிச்செய்யும்மகாராஜனே,

பாண்டியன் இராஜாதிபதிகளுக்குச்சொல்-விருத்தம்,

சேரனேசோழனேபெண் டிசையின்மன்னவரேகேளீர் - *
பாரேனோர்விசையனுக்கும் மங்கைசித்திராங்கதைக்கும் - *

பாரினித்திருக்கல்யாணம் பண்ணவும்அவர்கள்தந்த- *
பேரனைச்சிகாரமாநான் பெற்றிடவெண்ணினேனே... *

வசனம்,

கேளும் சேரமகாராஜனே சோழமகாராஜனே ஐம்பத்தா
றுதேசாதிபதிகளே கேளுங்கள் அழகில் மன்மதனுக்கு நிகராகிய
அர்ச்சுனமகாராஜனுக்கு என்பெண்ணைவிவாகம்பண்ணிக்கொடுத்
து அவள்வயத்திற்பிறந்தபிள்ளை யெனக்குப்பேரனாகையால் அவ
னைப்புத்திரசிகாரம்பெற்று இளவரசுபட்டங்கட்டிவைக்கலாமென்
றெண்ணிக்கொண்டிருக்கிறேன்மன்னர்களே,

இராஜாதிபதிகள்-பாண்டியனுக்குச்சொல் விருத்தம்,

என்னினைவெண்ணம்நன்றே யிதைவிடவேறொன்றில்லை - *
பெண்ணின்மைந்தனைச்சிகாரம் பெற்றரசாளச்செய்வோர்
மண்ணினிலனைத்துமுண்டும் மகனுக்கும்விசயனுக்கும் - *
கண்ணின்முன்மணஞ்செய்வித்துக் கடிநகர்க்கேகுவோமே

வசனம்,

கேளும்பாண்டியமகாராஜனே ஆ ஆ நல்லஆலோசனைப்ப
ண்ணினீர் பிள்ளையில்லாமற்போனால் பெண்ணின்வயத்திற் பிறந்
தபிள்ளையைச்சிகாரம்பெறுவது இந்தபூலோகத்தில் அநேகமுண்
டு அதற்கொருதீங்கில்லை இனிநடக்கவேண்டியகாரியம்நமதுகண்
ணின்முன் இருவருக்குந்திருக்கலியாணஞ்செய்து முடிக்கவேணு
ம்பாண்டியமகாராஜனே,

பாண்டியன்-மந்திரிகளுக்குச்சொல்-விருத்தம்,

மன்னவருரைத்தவார்த்தை மதிமந்திரிநீமுன்னெண்ணி - *
சொன்னசொற்படிவேறில்லைத் தோழிகடம்மைக்கூவி - *
பொன்னணியாவும்பூட்டி பூம்புனலாட்டிவைத்துக் - [சோ
கன்னியையழைத்துக்கொண்டோர் கணத்தினில்வரச்சொல்வீ

வசனம்,

கேளாய்மதிமந்திரி வெண்ணெயைவைத்துக்கொண்டு நெய்
க்கழவேண்டியதென்னவென்று நீசொன்ன ஆலோசனைப்படிக்கு
ச்சேரன்சோழன்முதலாகிய ஐம்பத்தாறுதேசத்துராஜாதிபதிகளு
ம் அப்படியேசெய்விக்கலாமென் றதிகசந்தோஷப் பட்டார்கள்
இனிநடக்கவேண்டியகாரியம்பார்க்கவேண்டும் தோழிகளையழை
த்துசித்திராங்கதையை இச்சபைக்கு அழைத்துவரச்சொல்வாய் ம
ந்திரி,

மந்திரி பாண்டியனுக்குச் சொல்-கவி.

ஆண்டவாவுன்றன் அடியிணைபோற்றி ... - *
பூண்டவாபரணம் பொருந்துநீங்களோ - - *
வேண்டவர்கொண்ட விஜயன்றன்னழைத்து -*
நீண்டவார்குழலார் நிமிஷத்தில்வருவார் - - *

வசனம்.

கேளும் என்னாண்டவனே உன்மகளாகிய சித்திராங்கதை யம்மையை வேண்டிப் ஆசைகொண்டிருந்த இச்சபையிலிருக்கும் அர்ச்சுனமகாராஜன்முன்னே தோழிகள் ஒருநிமிஷத்திலே அழைத்துக்கொண்டுவருவார்கள் ஐயனே.

மந்திரி தோழிகளுக்குச்சொல்-விருத்தம்.

தோழிகள்கேளீர் துவாரவத்திரவோர் ... *
நாழியில்முகூர்த்தம் நலமுடன்செய்ய ... *
ஆழிசூழுலக மரசர்கள்சபைக்கு ... ... *
வாழியையழைத்து வந்திடுவீரே ... *

வசனம்.

கேளுங்கள் தோழிகளே நமதுஆண்டவன் உத்திரவு படிக்கு ஒருநாழிகைக்குள்ளே சித்திராங்கதை யம்மையை இச்சபைக்குஅழைத்துக்கொண்டு வாருங்கள்பெண்களே.

தோழிகள்-சித்திராங்கதைக்குச்சொல்கவி.

அங்கயற்கண்ணி யருளினாற்பிறந்த ... *
மங்கையர்க்கரசே மணமதுகொள்ள ... *
கங்கையில்மூழ்கி காவிரியாடி ... *
சங்கையில்லாமற்றான்வருவாயே ... *

வசனம்.

கேளும்அம்மணி உன்மனதின்படிக்கு இனி அந்த அர்ச்சுன மகாராஜனுக்கு மணமாலைசூட்ட புண்ணிய தீர்த்தங்களாடி வஸ்திராபரணமுதலாகிய புஷ்பாதிகளும் தரித்துக்கொண்டு மகாராசர் சபைக்குப் போகவேணும் எழுந்தருளும்அம்மணி.

சித்திராங்கதைசொல்-வசனம்.

அப்படியே போகலாஞ்சகிகளே.

பொது-விருத்தம்.

நீடியமயலாலங்க நிலைகுலைந்தழிந்துசோர்ந்து ... ... *
வாடியேமனதுமெத்த மகிழ்ச்சிகொண்டெழுந்திரத்தம்
டின

ஆடியற்புதமிகுந்த ஆபரணங்கள்பூண்டு ... ... *
சேடியருடனேகூடி சித்திராங்கதைவந்தாளே ... ... *

வசனம்.

இவ்விதமாக விரகதாபத்தினாலே துயரம்அனுபவித்துக்கொ
ண்டிருந்த சித்திராங்கதையம்மை தனக்குக்கல்யாணமென்கிறதை
யும்பேரிகைசப்தங்காதிற்கேட்டதுமன்றியில் தோழிகள்வந்தமை
க்குஞ் சந்தோஷவார்த்தையினாலே மனமகிழ்ச்சிகொண்டு யெழு
ந்து புண்ணியதீர்த்தங்களாடி வஸ்திராபரணமுதலாகிய புஷ்பசா
திகளுந் தரித்துக்கொண்டு இராஜசபைக்கு வருகிற விதங்காண்க,
சித்திராங்கதை-வருகிற-தரு- இ ம்-பயிரவி-ஆதிதாளம்,

பல்லவி-

கன்னிசித்திராங்கதைவந் ... தாள்-வந்து நிறைந்த
மன்னர்சபையிற்புகுந் ... ... தாள்

அனுபல்லவி

சென்னிவணங்கிமனஞ் செய்துக்கொண்டினி ... வாழ
அன்னமென்னநடைநடந் தரிவையர்புடை ... சூழ (கன்)

சரணங்கள்.

தங்கமகுடம் ... ... வாங்கி-அதினால்வரும்
தங்கப்பிறையும் ... தாங்கி-தன்
அங்கமெங்கும்பின்கொண்ட ஆசையினாற்குன்னி
மங்களவிஜயமே மாலிருட்டவு ... மென்னி (கன்)

நன்னியபூம்புனல் ... ... லாடிகருங்குழலி
நறுமலர்கனோச் ... ... சூடி-மூடன்
எண்ணியஎண்ணங்களில் எண்ணினாலுவும் கண்டு
பண்ணியபூசையுஞ்செய் புண்யமென்றெண்ணிக்கொண்டு (கன்னி)

முழுமதிமுகத் ... திலங்க-மாசிபிணிமொளி
கெழுமதியாச ... ... மிலங்க-நல்ல
செழுமதிமாசிபிணில் சிறந்ததனகையைக் கண்டு
கொழுமதிகையசந்தோஷிசித்தனையைக்கொண்டு (கன்னிசித்தி)

சித்திராங்கதை-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

சத்தமேபோற்றிமன்னர் சிறந்தமண்டிகர்போற்றி *
வித்தைசிம்மாசனத்தில் வீற்றிருப்பவனேபோற்றி ... *
சித்தையினின்னத்தவென்னம் சீக்கிரமாய்முடித்தாய்போற்றி
தந்தையேபோற்றியுந்தன் சரமணப்பாதம்போற்றி ... *

வசனம்.

சரணம் சரணம் எல்லையின்ற தந்தையே சரணம்.

பாண்டியன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

அளவருமெய்கண்டன்னில் அழகியமாதியேவாழி *
வளருற்குத்திக்குமேலாய் வளருங்கற்புடையாய்வாழி ...... *
இளவரசாளச்செங்கோல் எந்தமாமதியேவாழி *
களவறுத்தலகாள்சித்திராங் கதைசெல்வநிதியேவாழி ... *

இராஜன்-மந்திரிகளுக்குச்சொல்-கவி

மந்திரிகேளாய் சுந்தரபஞ்சாங்க ... *
அந்தணனிங்கே வந்திடச்செய்வாய் ... *

வசனம்.

வாராய் மந்திரி இதோ சித்திராங்கதையும் வந்தாள் இனிதிரு க்கலியாணஞ்செய்யவேணும் பஞ்சாங்கபுரோகிதரை அழைத்து வரச் சொல்வாய் மந்திரி.

மந்திரி கட்டியனுக்குச்சொல்-கவி.

வாசல்கட்டியனே மாசில்பஞ்சாங்க ... *
புகார்வரமஹா ராஜனுத்தரவே ... ... *

வசனம்.

அடேவாசற்கட்டியக்காரா நமது இராஜன் உத்தரவுபடிக் குப் பஞ்சாங்கபுரோகிதரை க்ஷணப்பொழுதினில் அழைத்து வா ரும்பிள்ளாய்.

கட்டியன்சொல்-வசனம்.

அப்படியே அழைத்துவருகிறேன் சுவாமி,

கட்டியன்புரோகிதருக்குச்சொல் கவி

மேதினிதனிலே-சாதியிலுயர்ந்த ... *
நீதிபஞ்சாங்க-வேதியாவாராய் ... *

வசனம்.

தெண்டன் சுவாமி வாரும்புரோகிதரே உம்மை எங்களாண் டவராகிய பாண்டியமகாராஜா அழைத்துவரச்சொன்னார்வாரும் [சுவாமி

பொதீ-விருத்தம்.

கேசந்தனமுடிப்பிட்டுக் கோர்மதிமுகத்திலேவென் ... *
நீறுஞ்சந்தனமுஞ்சாத்தி நிகரில்லாவமார்பில் ... *
வீறுறும்பூணூல்சோதி வேஷ்டியும் இலக்கநன்றாய்த் ... *
தேறும்பஞ்சாங்கக்கொண்டு தெய்வபுரோகிதர்வந்தாரே *

புரோகிதர் சபைக்குவருகிற-தரு-இ-ம்-தோடி ஆதிதாளம்.

பல்லவி

பஞ்சாங்கபுரோகிதனானே-உலகிற்சொல்லும் ... *
பட்சத்திதிமுதல்வார நட்சத்திரயோககரண (பஞ்சா)

அநுபல்லவி.

கருதும்பொருளைக்கண்ணிற்காட்ட ... வெனக்கு
பெரிதல்லவித்தமண்ணினில் ... யார்க்கும்-நானே
வருதுக்கமிருந்து வாழ்வுமறிந்து சொல்ல *
சரிதைகிரியையோகஞானதற்கசாஸ்திரங்களும் வல்ல(பஞ்)

சரணங்கள்,

மணத்திற்கென்றன் ... பிராச இவ்வளவென்னும்
பணத்தொரு ... காசு - குறைந்தாலதை
கணத்தில்வாங்குவேனித்த ஜெகதலத்தின் ... மிகுந்த
கணித்தநூல்களனைத்தும் கண்டுசாதித்து வருந்த(பஞ்)

சோபனக்கலியாணஞ்செய்விப் ... பேன்-நல்முகூர்த்த
தீபமனந்தமெத்தினவைப் ... பேன்-சர்வ
பாபநிக்கிரகமாகும்படிசெய்துடன் கொள்ள
சாபானுக்கிரகமென்னும் சாமர்த்தியமிகவுள்ள (பஞ்சா)

பாண்டியன்வேதியர்க்குச்சொல்-கவி

தெண்டமென்சுவாமி தேவரீர்வந்து ... ... *
பண்டுநாசெய்தபாலனையென்கண்ணில் ... ... *
கண்டனன்சித்திராங் கதைக்கும் அர்ச்சுனர்க்கும் ... *
மண்டலம்புகழ மணஞ்செய்துவைப்பீர் ... *

வசனம்-

தெண்டம் தெண்டம் சுவாமி தேவரீர்வந்து கண்டுநாசெய்தபலனை யென்கண்ணிற்கண்டனன் வாரு மிந்தஆசனத்தி லுட்காருந் தேவரீ சித்திராங்கதை பட்டமும் முட்ட நிற்கமாட்டாளென்று முன்சொன்ன பஞ்சாங்கபலனைத் திருஷ்டாந்தமாகக்கண்ணிற்கண்டேன் இனி சித்திராங்கதைக்கும் அர்ச்சுனமகாராசனுக்கும் திருக்கலியாணஞ் செய்விக்கவேணும் சுவாமி.

புரோகிதர்-பாண்டியனுக்குச்சொல்-கவி.

ஆசீர்வாதம் அரசனேயின்னம் ... ... *
மாசின்மையிம்மை மகிழ்வுமுண்டாக *
தேசாதிபதிகள் நிறைந்திருஞ்சபையில் ... *
தேசுறத்திருமணஞ் செய்துவைப்பேனே ... *

வசனம்.

ஆசிர்வாதம் பாண்டிய மகாராஜனே அஷ்ட ஐஸ்வரியமும் உண்டாகவேணும் அப்படியே திருமணஞ்செய்து முடிக்கிறேன் மகாராஜனே. [தம்.

புரோகிதன்-அர்ச்சுனனுக்கும்-சித்திராங்கதைக்கும்சொல்- விருத்

குந்தியாதேவிமைந்தா குருகுலமன்னவாசீர் ... *
கந்தமார்குழலார்சித்திராங் கதையெனுமயிலேநீயும் ...... *
அந்தமார்மண்டபத்தே ராசனந்தனிலிருந்து ... *
வந்தமாதவரைப்போற்றி வாழ்மணஞ்செய்துக்கொள்வீர் *

வசனம்.

ஆசிர்வாதம் குருகுலசிகாமணியாகிய அர்ச்சுனமகாராசனே நீரும் சித்திராங்கதையும் இருவரும் இந்த அலங்கார மண்டபத்தில் ஓராசனத்தில்நின்று தேவப்பிராமண தரிசனஞ்செய்து மணமாலைசூட்டிக்கொள்ளுங்கள் அர்ச்சுனமகாராஜனே.

சபையோர்கள்சொல்-தரு-இ-ம்-கலியாணி-ஆடதாளம்.

பல்லவி.

கல்யாணமண்டபஞ்சேர்ந்தார்சித்திராங் ... *
கதையும்விசயனும் இரதியுமதனுமென (கல்யா)

அநுபல்லவி.

நல்லியார்க்குழலினும் நவரசமொழி ... யெனும்
அல்லியாசாணியும் அர்ச்சுனமகாராஜ னும்
அந்தரதுந்துபி திந்திமிதிமி ... யென
வந்திருவருமால் செந்திருவுருவம் ... போல (கல்யா)

சரணங்கள்.

வச்சிரமணித்தூண் ... ... கூட்டி இள
வாழைகமுகொடுநற் காழகிற்சந்தன
மரங்களெங்கனும் ... நாட்டி-மிக
விச்சித்திரமாகவும் மேல்விட்டங்கள் தரித்து
பச்சைமரகதத்தாற் பந்தல்கள் ... கரித்து
பவளமணிகொடுங்கைப்பதித்துச்சந்திர கிரண
திவளொளிதரும்பட்டைநிருத்தஞ்சுந்தர பூரண (கல்யா)

அரசாணிக்காற்கொரு ... ... வார்-எழில்
அற்புதவலங்கிருத-கற்புடைமங்கையர்
ஆயிரம்பேர்நலங்கிடு ... ... வார்-நல்ல

ஆசாரஸ்திரீமார்கள்வந்து தூயம்புனை ஜாட்ட
விசாசருமணிமேடை மேனிக்குமாலை சூட்ட
வேதியர்களுமறை யோகியர்களும் பொறை
ஆதியர்களுமனு நீதியர்களும் ... நிறை(கல்யா)

பாலிகைமுளைசமைத் ... தார்-வாணித்
பாத்தெழுந்தொளிர்நட்சத்-திரங்களெனவனைத்தும்
பல்லிகைக்குளவமைத் ... தார்-தங்க
சால்ராசமுன்றுக்கம்பிரமுடன்பூச் ... செண்டு
மாலைகள்மாற்றி மணமகிழ்ந்திருந்தி ... கண்டு
மங்களசாரசோபன வைக்கவோட் ... பாடி.
பெண்களுடனெல்லோருஞ்சுண்களிகூறிருக் (கல்யா)

பொது விருத்தம்.

மாலையுஞ்சூட்டிக்கொண்டு மகிழ்ந்திருந்ததியும்பார்த்து *
ஆலயங்களைச்சேவித்து அரசாணிவலமாய்வந்து ... *
காலையம்மியின்மேல்வைத்துக் கணையாழிமாற்றிவஸ்திர ... *
சேலையைமுடிந்துகோலந் தெருவெங்கும்வந்துசேர்ந்தார்

வசனம்.

இவ்விதமாக அர்ச்சுன மகாராஜனும் சித்திராங்கதை யம்மையும் ஒருவர்க்கொருவர் மணமாலைசூட்டிக்கொண்டு அருந்ததியையும்பார்த்து ஆலயதரிசனமுஞ் செய்து அரசாணி வலமாக வந்து அம்மியின்மேலேகாலைவைத்துக் கணையாழிமாற்றி இருவர் வஸ்திர முந்தானையை ஒன்றாய்முடிந்து தெருவீதிக ளெங்குந் திருக்கோலம் வந்து மறுபடியும் கல்யாண மண்டபம் சேர்ந்தார்கள்.

மங்களத்-தரு-இ-ம்-ஆசாவேரி-அடதாளம்.

பல்லவி.

ஜெயமங்களம்நித்திய-சுபமங்களம் ... *

அநுபல்லவி,

ஜெயமங்களம்வில்விஜயற்கும்-நயசித்திராங்கதைக்கும் ...(ஜெய)

சரணங்கள்.

யாத்திரைசெய்தபுண்ணியனு-ரர்ச்சுனராஜ ... னுக்கும்
கீர்த்திமேவுபாண்டியன்பெற்ற கிளிமொழிசித்திராங்கதைக்கும்()

மந்திரவாசகனெனும் மகபதிகுமார ... னுக்கும்
மந்திரிகளுக்குமுதல்-மாணிக்கராஜமணி ... க்கும்(ஜெ)

செங்கையாசீர்வழங்குந் தேவப்பிராமணனேபோற்றி ... *
சங்கைதீர்த்திருக்குமென்றன் றந்தையேபோற்றிபோற்றி *

வசனம்.

மதுராமீனாட்சியம்மன் சமேதராய் விளங்காநின்ற சொக்கநாத சுவாமியேசரணம் ஸ்ரீமகாலட்சுமியைமார்பிலேதரித்திராநின்ற அரிநாராயணனேசரணம் என்றனக்கு ஆசீர்வாதந்தந்திராநின்ற தேவப்பிராமணனேசரணம் தங்களுடையமனதில் சங்கையிராமற்படிக்கு அர்ச்சுனமகாராஜனுக்கு என்னைக் கொடுத்துத் திருக்கலியாணஞ் செய்துவைத்த என்றந்தையே சரணஞ் சரணம்.

பாண்டியன்-சித்திராங்கதைக்குச் சொல் விருத்தம்.

அலைகடல்தனிலுதித்த அமுதேபெண்ணரசேவாழி ... *
நிலைகொள்கற்பினுக்கென்றாளும் நிகருந்தனியேவாழி ... *
சிலைகொள்பார்த்திபன்றன்மார்பில் சேர்நவமணியேவாழி *
கலைகளுந்தேர்ந்தசித்திராங் கதையேபெண்சதையேவாழி *

வந்த-அரசர்கள்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

மன்னவாமதுரையாளும் மகிபபாண்டியனேகேளாய் ... *
நின்னவாவின்படிக்கு நிலமணம்முடித்துத்தந்த ... *
அன்னவாகனன்விதித்தால் ஆராலும்விலக்கொணாது *
தென்னவாவெங்களுக்குச் செலவுதந்தனுப்புவீரே ... *

வசனம்.

கேளும் பாண்டியமகாராஜனே உமது மனோபிஷ்டப்படிக்கே அர்ச்சுனமகாராஜனுக்குஞ்சித்திராங்கதைக்கும் திருக்கலியாணமுடிந்தது இனியெங்களுக்குச் சிலவுதாவேணும்மகாராஜனே.

பாண்டியன்-வேதியர்முதலாகிய-அரசருக்குச்சொல் - விருத்தம்.

தேவப்பிராமணருக்கெல்லாந்தெண்டம்இவ்வுலகின்மன்னர்
யாவத்திராளுமென்மே லனுக்கிரகமிருக்கவேணும் ... *
பாவைசித்திராங்கதைக்கும் பார்த்திபன்றனக்குமேலும் ... *
ஆவல்புத்திரபாக்கியம் அருள்புரிந்தேகுவீரே ... *

வசனம்.

வாரும்பிராமண சேர சோழமகாராஜாக்களே ஐம்பத்தாறு தேசாதிபதிகளே நீங்களனைவரும்வந்து திருக்கலியாணஞ் செய்துவைத்த அர்ச்சுனமகாராஜனுக்கும் சித்திராங்கதைக்கும் புத்தி

ரபாக்கியமும் மிகுந்தவாழ்வும் வரும்படியாய் அனுக்கிரகம்பண்ணிஅவரவர்கள்பட்டணத்திற்குப்போய்ச்சேருங்கள்மல்லர்களே

அர்ச்சுனன்-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

கார்பெறுகுழலாய்சித்திராங் கதையெனுங்கண்ணேவாசத் *
தார்பெறுமணஞ்செய்வித்தனிமுதலெனுஞ்சொக்கேசர் *
பேர்பெறுமதுரையாளைப் பிள்ளையுமருள்வார்நல்ல ... *
சீர்பெறுமனையில்நாம்போய்ச்சேருவோம்வாராய்பெண்ணே

வசனம்.

கேளாய் எனது பிராணநாயகியாகிய சித்திராங்கதை யென்னுங்கண்ணே நமக்குமணமாலைசூட்டிவைத்தசொக்கநாதசுவாமியிந்தமதுரையாசாட்சிசெய்யப்பிள்ளையையும் அருளிச்செய்வாரினிநாம் அரண்மனையைப்போய்ச்சேருவோம்வாராய் பெண்ணே,

சித்திராங்கதை.அர்ச்சுனனுக்குச்சொல்-கலிப்பா

இ-ம் புன்னாகவராளி.

நஞ்சடையுங்கண்டமுந்தவெண்ணிமதியுங்கொன்றையுஞ்சேர்
செஞ்சடையுந்திகழ்பரமன் றேவிமீனாட்சியம்மன் ... *
மஞ்சடையும்பூம்பொழில்சூழ் மதுராநகராசாள *
மஞ்சனையும் அருள்வார்நாம் வாழ்மனைபோய்ச்சேருவமே *-

வசனம்,

கேளும் என்பிராணநாதா சொக்கநாதசுவாமியென்னும் பரமசிவன்றேவியாகியமீனாட்சியம்மனி மதுரையிளவரசாளும் பிள்ளையை எப்படியும் அருளிச்செய்வாள் இனிநாம் அரண்மனையச மெப்பள்ளியறைக்குப்போய்ச்சேருவோம்வாருஞ்சுவாமி,

அர்ச்சுனன்சொல்-தரு இ-ம் தோடி-ஆதிதாளம்-

பல்லவி.

சிந்தைமகிழ்ந்தந்தப்புரஞ்சேருவோம் ...வாரும்-அதி
செயசுபலட்சண-நயவிலட்சணகுண
சித்திராங்கதையே ... ... வாரும்

அநுபல்லவி,

விந்தைமிகுமைந்தருஞ்சு-கந்தமலர்மாலை சூடி
வந்திருவிந்நாமுதற் சந்ததியுண்டாகக் ... கூடி
மருவசமயமிளம் பருவமமையுங் ... கன
உருவமிகுந்திடுஞ்செந் திருவுமானு ... மென (சிந்)

சரணங்கள்,

சுப்பிரமணியரும் வள்ளியுங்கூடர்ந்தது ... போலே-நல்ல
பொற்புடனமிருவரு புணர்ந்தது ... னூலே-இனி
யிள

சப்பிரமஞ்சத்தின்மீது சரசங்கள் ... ... காணலாம்
இப்பிரபஞ்சத்தின்வாழ்க்கை யென்றுமின்பம் பூணலாம்
இதைவிடவென்ன சௌபாக்கியமென்று ... *
முதன்முதனீசொன்னவாக்கியமின்றில் ... ... *
இசைந்தவென்மீதினிற் றசந்தொடுத்தெய்கின்ற ... *
வசந்தனைக்கணைகளும் அசந்துவசந்தரு ... *
மங்கைப்பருவமெனுங் கொங்கைக்குடத்தைக் ... கண்டு
சங்கையில்லாமலினி செங்கைப்பிடித்துக் ... கொண்டு (சித்)

பொது-சொச்சகம்.

செந்திருமாளிமெனை திவ்வியமலாமஞ்சியின்மேல் *
வந்திருவர்களுமருவி வாழ்ந்திருக்கும் அந்நாளில் *
சுந்தரசித்திராங்கதைக்குச் சொக்கேசர்தன்னருளால் *
வந்து கெர்ப்பந்தரித்துப் பத்துமாதமும்நிறைந்ததுவே

வசனம்-

இவ்விதமாகச் சித்திராங்கதையும் அர்ச்சுனமகாராஜனும் அ
ந்தப்புரத்திற்குவந்துசேர்ந்து அதிதிவ்விய பரிமளமான புஷ்ப
மெத்தையின்பேரில் அனேக லீலா விநோதத்துடனே மருவி
வாழ்ந்திருக்கின்ற நாளில் சொக்கநாதசுவாமி கிருபையினாலே சி
த்திராங்கதை வயிற்றில் கெர்ப்பந்தரித்து பத்துமாதமும் நிறைந்
து கெர்ப்பவேதனைப்படுகின்றவிதங்காண்க.

சித்திராங்கதை தோழிகளுக்குச்சொல்-விருத்தம்.

தோகையேயின்றைக்கேதோ தொடையிரண்டோடுகால்கையு
தேகமும்நடுக்குதாகத் திடுக்கிடுதிடுப்பும்விட்டுப் [ம்
போகுதென்னடிவயிற்றிற் புடைபுடைத்திருகுதே... *
தோணுதுசிவசிவாவோர்நொடியும்நான்பொறுத்திடேனே *

வசனம்.

கேளுங்கள்என்சகிகளே இன்றையத்தினமென்னமோ என
தொடை கால்களைகள் சரீரமெங்கும் அசதிகண்டு விடவிடென்று
நடுக்குது இடுப்பும்விட்டுப்போகுது அடிவயிறும்புடைபுடைத்
துஇரண்டுபக்கமும் நோகுதுசிவசிவாசொக்கநாதசுவாமிஸ்ரீருட்டி
த்தாயேஇந்த வாதையை நாமொருநொடிப்பொழுதும் பொறுத்தி
ருக்கமாட்டேன் இனியென்னசெய்வேன்தெய்வமே.

தோழிகள் சித்திராங்கதைக்குச் சொல்விருத்தம்.

ஆட்சிபாய்சொக்கநாதர் அருகினிலமர்ந்துவாழ்மீ ... *
னாட்சியைமனதிலெண்ணி நல்லறைப்புகுந்தாலேசா *
மாட்சிகண்பார்ப்பவள்நீயும் மனத்தயிரியம்விடாதே ... *
காட்சிபொன்தில்லேயுன்றன் தந்தைக்கோடுவாசெய்வோமே.

வசனம்.

கேளும் அம்மணி இத்தனைநாளா பிள்ளையில்லையென்று மனதிலே நினைத்துக்கொண்டு அறைபுகுந்து இருப்பையேயானால் காமாட்சி கண்பார்ப்பாள் உனக்கொருநாட்சியு மில்லை மனத்தயிரியத்தை விடாமல் இருமம்மா நாங்க ளுக்குமாக்கையாயிவ பாண்டிய மஹாராஜருடனே சொல்லி மருத்துவச்சியை அழைப்பிக்கிறோம் அம்மணி.

தோழிகள்பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

பத்பலர்மன்னர்போற்றும் பாண்டியநாவேகேளும் ... ❋
நற்பரனருளால்வந்த நையல்சித்திராங்கதைக்கு ... ❋
கற்பவேதைகளிப்போது காணுதாகையினால்தல்ல ... ❋
விற்பனமருத்துவச்சி விரைவுடன்வரச்செய்வீரே ... ❋

வசனம்.

கேளும் பாண்டியமஹாராஜனே நமதம்மாள் சித்திராங்கதை கர்ப்பவேதையால்மிகவுந்தவிக்கிறாளாகையால் மருத்துவச்சியை வெகுசீக்கிரத்தில் அழைத்துவரச்சொல்லவேணும்ஐயனே.

இராஜன்சொல்-கவி.

மதிமந்திரிகேள்-மருத்துவச்சியையிங் ... ❋
கதிசீக்கிரமதாய் அழைத்துவரச்சொல் ... ❋

வசனம்,

ஓய்மதிமந்திரி நமதம்மாள் சித்திராங்கதை கர்ப்பவேதைப்படுகிறபடியால் அதற்குத்தகுந்த மருத்துவச்சியை அதிசீக்கிரமாய் அழைத்துவரச்சொல் மந்திரி-

மந்திரி-கட்டியனுக்குச்சொல்-கவி.

கட்டியக்காரா கைதேர்ந்தவரில் ... ❋
கெட்டிக்காரியிதுக் கிழவியாய்ப்பார்த்து ❋
மட்டில்காரிகையார் மருத்துவமாதை ... ❋
அட்டியில்லாமல் அழைத்தோடிவாராய் ... ❋

வசனம்,

வாராய் கட்டியக்காரா நமதம்மாள் சித்திராங்கதை கர்ப்பவேதைப்படுகிறபடியினாலே முன்பின் கைதேர்ந்து கெட்டிக்காரிகளாய் இருந்தபோதிலும் அனந்தம் பெண்களுக்குக்கர்ப்பவேதையையொழித்தகிழவியாய்ப்பார்த்திந்த மதுரைப்பட்டணத்தில்வாழும் மருத்துவச்சியை நொடிப்போதில் அழைத்து வாரும் பிள்ளாய்,

கட்டியன்சொல் வசனம்,

அப்படியேஅழைத்துவருகிறேன்சுவாமி,

கட்டியக்காரன் மருத்துவச்சிக்குச்சொல்-விருத்தம்,

மருத்துவமாதே மங்கலவன்மகளே ... *
வருத்துங்கருப்ப வாதையையொழிக்க ... *
இருத்துமூன்றின்கைத் தேர்ந்தவளாக ... *
ஒருத்தியிக்கெழுந்து வோடியேவருவாய் ... *

வசனம்,

இந்தமணலூர்ப்பட்டணத்தில் வாழும் மருத்துவமாதே கே ண்மஹாராஜகுமாரத்தியாகிய சித்திராங்கதையம்மாளுக்குவந்தக ருப்பவேதனையைத்தீர்க்க மூன்றின் கைதேர்ந்த கிழவியாயொரு த்தி எழுந்து அதிசீக்கிரமாய் ஓடிவாடி மருத்துவமாதே.

மருத்துவச்சி-வருகிற-பொருவிருத்தம்,

நரைத்தலையசையக்கூனு நடுக்குங்கைகோலூனி *
கரைக்கனிபோலேகொங்கை தொங்கிசைப்படவும்வாயில்
நுரைத்துசொன்னொழுகக்கெர்ப்ப நோயொழித்திடுவேனென்
மருத்துவக்கிழவிவந்து மாதுமுன்தோன்றினளே ... [ளு

கட்டியன்சொல்-வசனம்.

அகோதெப்படியென்றால் நரைத்ததலையும் சுரைக்காயைப் போன்ற கொங்கையும் வாயிலேவடிந்த சொள்ளுமாக மருத்துவ க்கிழவி சித்திராங்கதையினிடம் வருகிறவிதங்காண்க,

மருத்துவச்சி-வருகிற-தரு-இ-ம் - பந்துவராளி ஆதிதாளம்.

பல்லவி,

வந்தாள்மருத்துவக்கிழவி-வகை ... *
மருத்துவங்களிற்புகழ் மிகுத்தசஞ்சீவி ...(வந்)

அநுபல்லவி,

வந்தாள்மாதர்க்குயமிந் தந்தானெங்கணுந் திசற்,
செந்தாமரைமலர் நூக்கம் ... ... வேர்க்க
தொந்தாள்கருவேதனையைத் ... தீர்க்க(வந்)

சரணங்கள்,

நாரைப்பூவதுபோனரைத்த ... தலையும்-திரையத்தனே
காணமெலிமெனும்விழியுந் ... சிலையும்-ஒட்டகரும்போல்
கோணலாய்வளைந்த ... கூனிலையும் சுரைக்காய்தலைக்
காணியைப்போற்றொங்கும் இருமுலையும் நடுக்குங்கையில்
ஊன்றியகோலுடனே ஒருமுழந்துக்காலும்-இவருகில் ... ... *
தோணியதின்பொருகுறைவிலிபெண்ததிருவம் மற்றோர்விஞ்ஞா
விண்ணியைப்போலிகள்போறவளல்லவேமேலும்தொடுவன்போற்
பாணியிருந்துபிள்ளைபருதிலமன்மகள்போதும்பெறுவார்முன்பின

பழக்கமுண்டெனபலரும் ... ... கொண்டாட
வழக்கமாகநீவரவெனத் ... ... தேட
பிழைக்குநல்மகப்பேறினை ... நாட
அழைக்கவந்தவாருடன் ... கூட (வந்தாள்ம)

மருத்துவச்சி சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்.

அம்மையேயஞ்சவேண்டாம் அங்கத்தின்குறிகளெல்லாம் ... *
செம்மையாயிருக்குதின்னம்க்ஷணநேரம்பொறுத்திருந்தால் *
கொம்மைவெம்முலையாய்நீயாண் குழந்தையைப்பெறுவதாக *
நம்மையாள்மதுரைசொக்க நாதரும்அருள்செய்வாரே ... *

வசனம்.

அம்மாநீயஞ்சவேண்டாம் உனதுதேககுறிப்புகளெல்லாம் செம்மையாய்த்தானிருக்குது இன்னம்க்ஷணநேரம் இவ்வேதனையைப் பொறுத்துக்கொண்டிருந்தையானால் நல்ல ஆண்பிள்ளையைப்பெறும்படியாய் இந்த மதுரைசொக்கநாதசுவாமி அருளிச்செய்வார் நீ பயப்படாதே,

சித்திராங்கதை கருப்பவேதனையால்-பிரலாபிக்கிற தரு.

இ ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

அம்மாஎப்படிசகிப்பேன்-எவ்விதத்தாலிவ் ... *
வாபத்தைநிக்ரகிப்பேன் ... ... *

அநுபல்லவி.

இம்மாநிலந்தனில்யானெதிரேயனிச் ... சூலை
பெம்மானருளிய பிள்ளைப்பேற்றினும் ... வாதை (அம்)

சரணங்கள்.

பக்கமிரண்டிநோ ... குது-மூச்சுத்திணறி
திக்குமுக்காடிப்போ ... குது சத்தே
உட்கார்ந்திருப்பமென்றால்உடம்பெங்குங்கோக்குது
நிற்கப்போனாலென்தேகம்நிமிஷத்திற்கலைக்குது (அம்மா)

அடிவயிற்றினில்முட் ... டுது-உடம்பெங்கும்
ஒடியப்பஞ்சுபோற்கொட் ... டுது - என்றன்
அடியிடையுமென்னமோ ஆலைப்போல்பெருத்தது
இடிஇடியென்றிடிக்குது என்றனைவருத்தி ... அது (அம்)

தண்ணீர்தாகமெடுக் ... ... குதே-என்னடியடி
பெண்ணேநோயுமடுக் ... குதே-அக்கம்

குன்றினைத்தம்போதாமல் குலைமார்புமுடையுது
புண்ணைஅழுந்துடை புடைபுடைத்திழியுது (அம்)

இதுவும்-சித்திராங்கதைசொல்-விருத்தம்.

எடுக்குதேஇடுப்புநோயும் இன்னமுமெத்தமெத்த ... *
முடுக்குதென்னடிவயிற்றில் முட்டுதேயென்றனுவி ... *
இடுக்கிமேதலங்கினில்பெண் சென்மமும்பொல்லாதையோ *
நடுக்குதேதேகமெங்கும் நானென்னசெய்வேனம்மா ... *

வசனம்.

அரகரா சொக்கநாதசுவாமி மீனாட்சித்தாயே இன்னமும் இடுப்பு நோய் எடுத்து வரவர மெத்தவுமுடுக்குதே என்னுயிர் திடுக்கிட்டுப் போகுதே பூலோகத்திலே பெண்சென்மம் பொல்லாதென்று சொல்லுவதுசரியே தேகமெங்கும் நடுக்குதே நானென்ன செய்வேனம்மா,

மருத்துவச்சி-சித்திராங்கதைக்குச்சொல்-விருத்தம்,

தலைச்சனையென்றாலத்தைத் தாங்கிக்கொண்டிருக்கலாமித் *
தலைச்சன்பேறதுவாய்ச்சொல்லோதாகமுமெடுக்குமேலும்
அலைச்சலைச்சிடுப்புநோவும் அடிவயிறுளைக்குஞ்சற்றே ... *
விலைச்சலைக்கொடுக்குங்கண்டாய் அஞ்சவும்வேண்டாமம்மா

வசனம்.

கேளும் அம்மணி தலைச்சனையெனின் அதை ஒருவருக்கொருவர் சற்றேதாங்கிக்கொள்ளலாம் அதுவுமல்லாமல் பிள்ளைப்பேறுகளில் தலைச்சன்பேறென்பது வாய்ச்சொல்லல்ல தாகமுமெடுக்கும் மேலும் வெகு அலைச்சலைக்கொடுக்கும் சற்றேபொறுத்தால் இந்த கருவுவெளிப்படும் நீயஞ்சவேண்டாமென்னம்மா,

சித்திராங்கதை-பிரசவவேதைப்படுகிற-தரு-ஆஹிரி-அடதாளம்,

பல்லவி.

என்னசெய்குவேன் அம்மாஐயோ-ஆதான் ... *
ஏதுசெய்குவேன் ... ... ... *

அநுபல்லவி.

என்னசெய்வேனம்மா-இருங்களடி. அம்மா
இளைக்குதென்னுடல் களைக்குதடிவயி ... *
றளைக்குதிடுப்பையும்-துளைக்குதே ... ஐயோ (என்ன)

சரணங்கள்.

வைதபலரோயுங்களால் மெய்வெந்து ... முறியுதே
ஐயையோஎன்கூச்சல்-வையகத் ... அறியுதே

அடியடியிடுப்பை ... ... இடியடி
உடம்பைத்துடையடி-யப்பா ... விடையடி. (என்)

மருத்துவச்சி-சித்திராங்கதைக்குச்சொல்-வசனம்.

என்னம்மா பயப்படாதே பயப்படாதே காசமேறினசொம்பு அசையாதா கைப்பட்டகண்ணாருகாகா அதற்கதற்குக் காலெம்வத்தால் தீற்குமோ பத்தெட்டுப் பெற்றவ னெல்லாம் என்னமோ ஏதோவென்று ஏக்குமுற்றிடிவிழுந்துகிடக்கச்சே தலைச்சன் பிள்ளைக்காரிக்குத் தயிரிய மிருக்குமா இதோ குழந்தை வெளிப்பட்டுப் போச்சுது இனிசும்மாயிரு மம்மணி.

பொது-விருத்தம்,

புவனமீரேழும்போற்றிப் புகழ்திருமனுகாவரூழும் ... *
சிவனருளாலுதித்த சித்திராங்கதைவயிற்றில் .. *
எவனமோர்உருவுகொண்ட தென்னமன்மதனுமேங்கி ... *
மவுனமுற்றொளிக்கநல்ல மைந்தன்வந்துதித்தானன்றே ... *

கட்டியன்சொல்-வசனம்,

இவ்விதமாக ஈரேழுபதினாலு லோகமும் போற்றிக்கொண்டாடுகிற மதுரை சொக்கநாதசுவாமி கிருபாகடாட்சத்தினாலேசித்திராங்கதை வயிற்றில் அழகெல்லாம் ஒருருவெடுத்துவந்ததுபோல்மன்மதனும் வெட்கிப்போகும்படியாய்த் திவ்யபுத்திரன் பிறந்தான் மேல்நடந்ததுகாண்க.

தோழிகள்-பாண்டியனுக்கும்-அர்ச்சுனனுக்கும்சொல்-விருத்தம்.

வேம்பணிமார்பாபோற்றி விஜயனேபோற்றிபோற்றி ... *
தாம்பணிசுந்தரசொக்க நாதர்தன்னருளினாலே ... *
காம்பணிதோளிசித்திராங் கதைதிருவயற்றினின்று - *
பாம்பணைபவன்மகன்போல் பாலன்வந்துதித்தானையா *

வசனம்.

கேளும் வேப்பமாலை பணிந்த பாண்டியமகாராஜனே சரணம்சரணம் அர்ச்சுனமகாராஜனே சரணம் மதுரை சொக்கநாதசுவாமி கிருபாகடாட்சத்தினாலே சித்திராங்கதையம்மாள் வயற்றிலேமன்மதவிக்கிரகம்போலே ஒருபிள்ளைபிறந்திருக்குதையா சுவாமி.

பாண்டியன்-அர்ச்சுனன்முதலாகியவர்களுக்குச்சொல்விருத்தம்

மருமகனேநின்பாக்கிய மந்திரிகாள்நமதுபுண்யம் *
திருமகளெனவுதித்த சித்திராங்கதைவயிற்றில் ... *
ஒருமகன்பிறந்தானென்றிங் குரைத்தமாதர்களேநீங்கள் - *
தருவகிழ்வார்த்தைக்கென்றன் தானியைக்கொடுக்கலாமே *

வசனம்.

கேளும்என்மருமகனாகிய அர்ச்சுனமகாராஜனே உமதுபு

ண்ணியமே புண்ணியம் மந்திரிகளே நமதுபாக்கியமேபாக்கியம் சித்திராங்கதைவயிற்றிலே ஒருபிள்ளை பிறந்ததென்றேடி வந்து சொன்னதோழிப்பெண்களே உங்களுக்கிந்த உலகத்தைக்கொடுக்கிறேன்வாங்கிக்கொள்ளுங்களடிபெண்களே,

தோழிகள்சொல்வசனம்-அப்படியேமகாபாக்கியஞ்சுவாமி

அர்ச்சுனன்தோழிகளுக்குச்சொல்-விருத்தம்,

மஞ்செனுங்குழலீர்தோழி மார்களேமைந்தனுக்கு ... *
மஞ்சனமாட்டிவைத்து மண்பொட்டுமிட்டுப்பின்னும் -*
அஞ்சனப்பொட்டுமிட்டு அணிமணிபணிகள்பூட்டி ... ...*
மஞ்சணைத்தொட்டிலேற்றி மகிழ்ந்துதாலாட்டுவீரே ... *

வசனம்,

கேளுங்களடி தோழிப்பெண்களே குழந்தைக்கு ஸ்நானம் பண்ணிவைத்து மண்பொட்டு மைப்பொட்டுமிட்டு நவரத்தினங்களைப் பூட்டி தங்கத்தொட்டிலில் வளர்த்தி தாலாட்டுங்களடிபெண்களே,

தோழிகள்சொல்-வசனம்,

மகாபாக்கியம் மகாபாக்கியம்,

தோழிப்பெண்கள்- பப்புருவாகனனை-தாலாட்டுதல்,







சித்திராங்கதையுந் தோழியுந்-தாலாட்டுகிற-தரு-இ-ம் - நீலாம்பரி

பல்லவி,

ஆராரோ ஆரிரோ ... ... *
ஆராரோ ஆரிரோ ... ... *

அநுபல்லவி,

சீராரும் மணலூரில்வாழ் சித்திரவாகனபாண்டியன் ......*
பேரார்தனஞ்சயன்றன் பிள்ளையேகண்வளராய் ... ஆராரோ

சரணங்கள்,

பார்புகழும்பஞ்சவரில் பார்த்திபன்றனைமருவும் ... ... *
கார்குழலாள்சித்திராங் கதைமகனேகண்வளராய் ஆராரோ

அன்னியர்போல்வேஷம் தான்கொண்டுதாரணியில் *
அன்னியதீர்த்தங்களெல்லாம் கண்டுவந்தோன் கண்மணியே ஆரா

மறையவனைப்போலிருந்து மகவொக்கவந்தவென்னை ... *
முறையதினுற்கண்டுடன்மோகங்கொண்டோன்கண்மணியே ()

ஐந்தருவனத்தனில்தன் அதிரூபங்காட்டியெனைக் ... *
கந்தருவமணமதினால் கலந்தவர்தன் கண்மணியே - ஆராரோ

சித்திரவாகனபாண்டியன் செல்விமனத்தனிலிருந்த ... *
புத்திரவாஞ்சைதனையொழித்த புண்ணியனேகண்வளராய் ஆரா

அர்ச்சுனன் பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

சித்திராங்கதைதனையீன்ற தென்னவாகேளுநயந்த - ... *
புத்திரன்பெயர்தானின்று பூர்வமாயுங்களுக்கு ... ... *
வித்தையாரம்பஞ்செய்து வில்வித்தைபூட்டியெய்யும் - *
அஸ்திரப்பரிட்சையெல்லாம் அறிவிப்பதார்சொல்வீரே - *

வசனம்.

கேளும்பாண்டியமகாராஜனே இந்தக் குழந்தைபெயரொன்ன வித்தியாரம்பம் வில்வித்தை அஸ்திரப்பரிட்சை முதலாகியதும் கற்பிக்குங்குலகுரு ஆர் எனக்குத் தெரியச்சொல்லவேணும் என்மாமனே.

பாண்டியன் அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்,

குருகுலமன்னுயெங்கள் குலக்கொருசொக்கநாதர் - *
மருகன்முறையிற்பப்புரு வாகனனித்தப்பிள்ளை - - -*
திருக்கைக்கியானத்தோடி தனுவஸ்திரப்பரிட்சையெல்லாம் -
ஒருகுறைவில்லிசர உபதேசமுறுவாரே - - - -*

வசனம்.

கேளும்என்மருமகனாகிய அர்ச்சுனமகாராஜனே எங்கள்குலத்திருசொக்கநாதசுவாமிதான் இந்தப்பிள்ளையின்பெயர் பப்புருவாகன பாண்டியனென்றுசொல்லலாம் மேலும் அறுபத்துநான்குகலைக்கியானமும் வில்வித்தை அஸ்திரப்பரிட்சையெல்லாம் பரமசிவன் அனுக்கிரகம்பண்ணுவார் அதற்கொருகுறைவுமில்லை மருமகனே.

அர்ச்சுனன்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

நாற்றிசைபுகழுஞ்சொக்க நாதர்தன்னருளிருந்தால் - - *
வேற்றொருவர்களால்நம்மை வெல்லவும்போமோவுன்றன் -
கோத்திரம்விளங்கவென்றன் குழந்தையையீந்தேன்மற்ற *
யாத்திரைநான்போய்வாறேன் அன்புடனனுப்புவீரே ... *

வசனம்.

கேளும்பாண்டியமகாராஜனே இந்த மதுரை சொக்கநாதசுவாமி கிருபாகடாட்சமிருந்தால் நம்மையொருவராலேயும்வெல்லப்போகாது இப்பவும்நான்பெற்றகுழந்தையை உமது கோத்திரம் விளங்கும்படியாய்ப் புத்திரசிகாரங்கொடுத்துவிட்டேன் இனிமற்றதீர்த்தயாத்திரையும்போய்வருகிறேன் சிலவுதந்தனுப்பிவைக்கவேணும் என்மாமாவே

பாண்டியன்-அர்ச்சுனனுக்குச்சொல் விருத்தம்.

மருகனேநீர்வந்தென்றன் மகளையுமணந்துநல்ல ... - *
முருகனேர்சுதன்சிகாரமுகமலர்ந்தளித்ததாலே - ...*
பெருகுமென்குலம்விளங்கப் பெற்றனன்யாத்திரைபோகத்
திருகுசொல்வதுமொன்றுண்டோ சென்றுநீர்வருகுவீரே *

வசனம்.

கேளும்என்மருமகனாகிய அர்ச்சுனமகாராஜனே நீர் தீர்த்தயாத்திரைக்குவந்தவிடத்திலே என்மகளைவிவாகம்பண்ணிக்கொண்டு அவள்வயிற்றிற்பிறந்த பிள்ளையை எனக்குப் புத்திரசிகாரமுங்கொடுத்து இந்த பாண்டியகுலம் விளங்கும்படிச்செய்த உமக்கு ஒருதிருகுசொல்லலாமா மகாராஜனும்ப் புண்ணியதீர்த்தயாத்திரைக்குப்போய்வாரும் என்மருமகனே.

அர்ச்சுனன்-மன்னயானுக்குச்சொல்-விருத்தம்,

மாதருக்கரசேயென்கண் மணிசித்திராங்கதையேசொக்க- *
நாதருக்கன்புசெய்தின் னகராசானும்பிள்ளை- - - *
ஆதரவாகப்பெற்றாய் அகமகிழ்ந்திினிநானிந்த - - *
பூதலமுழுதும்யாத்திரை போய்வரச்சிலவுதாராய் - - *

வசனம்.

கேளாயென்பிராணநாயகியாகிய சித்திராங்கதையென்னுங் கண்மணியே நீஇந்தமதுரைசொக்கநாதஸ்வாமியையும் மீனாட்சியம்மனையும் பதிவிரதாநிலையிலிருந்து பூஜைபண்ணபடியினாலே பூலோகமுழுதும் அரசாளும் பிள்ளையைப்பெற்றாய் இனி யுனக்கொருதாழ்வில்லை நான்தீர்த்தயாத்திரைப்போய்வருகிறேன் சிலவுதாராய்பெண்ணே.

சித்திராங்கதை தன்நாயகனுக்குச்சொல்-விருத்தம்.

புண்ணியதீர்த்தமாடப் போவதேகருமமின்றிங் - - - *
கெண்ணிநீருரைத்தவார்த்தைக் கெதிர்மொழிபேசமாட்டேன்
கண்ணினின்மணியெப்போதுங் காண்பேனென்பிராணநாத
மண்ணினில்யாத்திரைசென்று வந்தெனையாட்சிப்பீரே ... *

வசனம்,

கேளும்என்பிராணநாதா உமது திருவுளத்தில் தீர்த்தயாத்திரைக்குப்போகவேணுமென்று எண்ணியிருந்தால் அடியாளதற்கொரு இருகுசொல்லப்போமோ இனிஎந்தக்காலம்உமது திருவுருவைக்காண்பேனோ சுகமாய்ப்போய்வந்து அடியாளை இரட்சியும் என்சுவாமி.

அர்ச்சுனன்-தனதுகுமாரனுக்குச்சொல்-விருத்தம்.

அப்பனேயிங்குவாடா அன்னைமேல்வாடாசொல்லும்......*
பப்புருவாகனனேவாடா பாண்டியாவாடாஇங்கே - - *
எப்படியுன்னைநான்விட் டேகுவேன்தீர்த்தயாத்திரை - -*
கொப்பெனப்போகவேணுங் கொஞ்சியோர்முத்தந்தாடா

வசனம்,

அப்பாமகனே பப்புருவாகனா இங்கேவாடாஎப்படியுன்னை நான்பிரிந்திருப்பேன் மகனே சீக்கிரமாய்த் தீர்த்தயாத்திரைப் போய்வருகிறேன்ஒருமுத்தங்கொடடாமகனே.

பொது-விருத்தம்-

இந்தவிதமகனையெடுத் தணைத்துக்கொஞ்சி - - *
யேற்றிழைசித்திராங்கதைசெங் கையிலீந்து ... *
அந்தணன்போல்வேஷங்கொண் டர்ச்சுனனும்போனான்
ஆதிசிவன்றன்னருளால் வயதோராறைந்தில்... ...*
சந்ததியுஞ்சகலகலைக் கியானந்தேர்ந்து - - - *
தனுப்பரிட்சைகளுமறிந்து தனஞ்செயன்போல்*
விந்தைபெயர்ப்பப்புருவா கனனென்றோங்க - *
வெளிவந்தான்அனைவருக்குங் களிதந்தானே

வசனம்.

இவ்விதமாக மகனையெடுத்தணைத்துக்கொஞ்சிக் குலாவிமு
த்தமிட்டு சித்திராங்கதைகையில் கொடுத்துவிட்டு பிராமணவேஷ
ங்கொண்டு அர்ச்சுனமகாராஜன் யாத்திரைப்போனபின்பு சொக்
கநாதசுவாமிகிருபையினாலே பப்புருவாகன் ஐந்துவயதிலே சகல
கலையும்வில்வித்தையும் அஸ்திரப்பரிட்சையும் கற்றுக்கொண்டு வி
ல்விஜயனைப்போலே சபைக்குவருகிறவிதங்காண்க,

பப்புருவாகனன்-சபைக்குவருகிற- தரு-இ ம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி,

தாம்தாம்தகஜெம்தரிகிடதக-திம்தாரதில்லானாஜெம்தரி ... *
தகணகஜெம்தரிததிமிதகிடதக ... ... ... *
தகஜெனுதகதிமிதகததிங்கணத்தோம் ... ... *
பப்புருவாகனன்வந்தான் இளம்பருவ(பப்புருவாகனன்வந்தான்)

அநுபல்லவி,

தற்பரனருளினால்-சகலகலை - - - - படித்து
வெற்பெனமலர்க்கையில்-விளங்குஞ்சிலை... பிடித்து(பப்)

சரணங்கள்,

உச்சிக்கொண்டையுந் ... துலங்க-அதில்வெண்முத்து
குச்சம்அண்டையி ... விலங்க நல்ல
விச்சித்திரமாகச்சந்திரவிம்பவதனமின்ன
வச்சிரமணியாரங்கள் மார்பில்திகதிகென்ன (பப்புரு)

சித்திராங்கதைகண் ... - களிக்க-இவனழகை
சித்தஜனுங்கண் ... ... டொளிக்க நவ
ரத்தினகுண்டலங்களும் நட்சத்ரம்போ ... லுதிக்க
இத்தலத்திலிவனுக்கி ... டில்லையென்றெங்கும்துதிக்க(பப்)

தண்டைச்சதங்கைகள் - ... கஞ்ச-மலர்ப்பதத்தில்
வெண்டையங்களுங் ... - கொஞ்ச-தலைச்சிகாரம்
கொண்டமதுரைப்பாண்டியன் குலமுமென் மேனும்வாழ
அண்டையில்மந்திரிகுமாரர் அனைவரும்புடைசூழ (பப்)

பப்புருவாகனன்சொல் போற்றிவிருத்தம்,

நாட்டைமூன்றுடையசொக்க நாதனேபோற்றிநற்செந் *
சூட்டரவணையின்மீது துயிலெடுமாலேபோற்றி - - *
கோட்டமாரிமதுரையாளுங் குரிசிலேபோற்றியென்றன் *
பாட்டனேபோற்றிபோற்றிப் பாண்டியபூபதியேபோற்றி,

வசனம்.

திருநேத்திரதாரியாய் விளங்காநின்ற சொக்கநாதசுவாமியே
சரணம்-சா - க்கினைப்பொருத்திய ஆதிசேஷன்மேற் பள்ளிகொ

னீரும்ஸ்ரீமன்நாராயணமூர்த்தியேசரணம்- நாட்டுவளமைமிகுந் தமதுரைப்பட்டணத்தையர்சாளும், என் பாட்டனாகிய பாண் டியமகாராசனேசரணம்,

இராஜன்பப்புருவாகனனுக்குச்சொல்-வாழி-விருத்தம்

சுப்பிரமண்ணியனைப்போலச் சுதனுருவெடுத்தோய்வாழி *
இப்பிரயுஞ்சத்தையாள இசைத்தசந்ததியேவாழி- ... *
கற்புறுமாதுசித்திராங் கதையின்கண்மணியேவாழி... *
பப்புருவாகனனேவாழி பார்த்திபன்மகனேவாழி...... *

பப்புருவாகனன்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்,

பார்த்திபன்மகனியென்னும் பாட்டனேயெனதுதந்தை *
கீர்த்திப்பிரதாபமென்ன கெதிபெறும்அவர்தானங்கே *
நாற்றிசையரசுசெய்ய நான்பாண்டியனுனைக்கென்ன... *
போற்றிசெய்யடியேன்கேழ்க்கப் புகலுவீர்புகலுவீரே. *

வசனம்

கேளும் என்னைப்பார்த்திபன் மகனென்றுசொன்ன பாட்டனுரேஎனதுதந்தைகீர்த்திப்பிரதாபமென்ன அவரெங்கேபோனார் மேலும்இவ்வுலகையாள நான் பப்புருவாகன் பாண்டியனுனெ தென்னஅடியேனுக்குத்தெரியச்சொல்லவேணும்- ஐயா-

இராஜன் பப்புருவாகனனுக்குச்சொல்-அகவல் இ-ம்-தோடி.

ஒப்பொருவர்களை யுனைக்கொளுவெழில்சேர் *
பப்புருவாகனனே பகருவேன்கேளாய் ... *
இந்திரப்பிரஸ்தத்தில் இருக்குமவர்களில் ... *
இந்திரன்மகனென வியம்பும்அர்ச்சுனனும் ... *
அந்தணவேஷங்கொண் டியாத்திரையாய்மதுரை ... *
வந்தவனொன்றன் மகளென்விருந்த ... *
சித்திராங்கதையைத் திருமணஞ்செய்து *
புத்திரசிகாரம் புரிந்தவர்மற்ற ... *
யாத்திரைசெய்ய வவர்போனதொன்றன் *
கோத்திரம்விளங்கக் குழந்தைநீயப்பா *

பப்புருவாகனன்சொல்-விருத்தம்.

புத்திரசிகாரம்-புரிந்தவென்றந்தை *
உத்திரவின்படியில் - வுலகையாள்வேனோ- *

இராஜன்-பப்புருவாகனனுக்குச்சொல்விருத்தம்

ஆளுவேனென்ற வப்பனேவாடா ... *
வேளுருக்கொண்ட விஜயன்கண்மணியே *

நீளுலகோர்குடை நீழலிற்செல்வ ... *
நாளுநிம்மதுரை நகராய [illegible]யே - - *

பப்புருவாகனன்-பாண்டியனுக்குச்சொல்-விருத்தம்.

தருகுவீரென்றன் தட்சணம்நானே - - *
திருகுசொல்லாமல் செங்கோலுமுடியும்- ... *
அருகுவீற்றிருக்கும் அரசரும்படையும் ... ... *
ஒருகுறையில்லாமல் உமக்களித்தேனே ... ... - *

பட்டாபிஷேகத்-தரு-இ ம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி;

மகுடாபிஷேகங்கொண்டான்-பப்புருவாகனன் ... *
மகுடாபிஷேகங்கொண்டான் ... ... *

அநுபல்லவி;

மகுடாபிஷேகங்கொண் ... டான்
மானிலம்புகழ்வீசம் ... ழின்
மகிபதியெனவே - ... தன்
மதுரையாளப்பகும் ... பொன்(மகு)

சரணங்கள்.

விஜயத்தார்த்தமிருதல் மேளவாத்திய - முழங்க
விஜயன்மைந்தனென்ற திசையெங்கணும் - வழங்க(மகு)
வேதியர்களும்ஆசி விளம்பப்புத்தி - - திகழக்க
நீதிமந்திரிகுமாரர் நெருங்கரத்தினமி ழைத்த(மகு)
சுரர்களுமைந்தருவும் மருமலர்மழை - பெய்ய
நகருமடியிணைப் பாவியேதுதி - செய்ய(மகு)

பப்புருவாகனன் கடவுளைப்போற்றி-விருத்தம்,

திங்கள்மும்மாரிபெய்ய தேசங்கள்செழிக்கவேணும் - ... *
திக்கள்தன்மாழிலேதன் செங்கோலும்வாழவேணும் - - *
திங்கள்வெண்குடையினீழற் சென்றரசாளவேணும்- - - *
திங்கள்செஞ்சடையாவுன்றன் திருவடிபோற்றிபோற்றி ... *

வாழிவிருத்தம்.

கதிர்மதியாசர்வாழி கங்கையைத்தரித்தோர்வாழி ... ...... *
பதியரசர்களும்வாழி பாவலர்நாளும்வாழி ......... ...... *
துதிசெயும்பப்புருவாகன் தொன்மாயோரும்வாழி ... ... *
நிதமிதைப்படித்தோர்கேட்டோர் நீடூழிவாழிமாதோ ... *

---

சித்திராங்கதைவிலாசம்,

முற்றிற்று.

